# அழகப்பா பல்கலைக்கழகம்

தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA:3.64)
தகுதியும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின்
முதல் தரப் பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது

## காரைக்குடி– 630003.

## தொலைநிலைக்கல்வி இயக்ககம்

# M.A Economics

# 36232

## AGRICULTURAL ECONOMICS

## வேளாண்மை பொருளாதாரம்

# SYLLABI-BOOK MAPPING TABLE

## வேளாண்மை பொருளாதாரம்

# பொருளடக்கம்

# அலகு -1 வேளாண்மை பொருளாதாரம்



குறிப்பு

## 1.0 நோக்கங்கள்

1.வேளாண்மை பொருளாதாரத்தின் இயல்பு மற்றும் நோக்கங்கள் பற்றி அறிந்து கொள்ளுதல்

2.பொருளாதார வளர்ச்சியில் விவசாயத்தின் பங்கு பற்றி அறிந்து கொள்ளுதல்

3.வேளாண்மையும் தொழிலும் சார்ந்திருப்பதை அறிந்து கொள்ளுதல்.

## 1.1.வேளாண்மை

**பொருள்:**

வேளாண்மை என்ற சொல் லத்தீன் மொழியலிருந்து உருவானது. லத்தீன் மொழியிலுள்ள Agerஎன்பது fieldஎன்ற வயல்வெளியை குறிப்பதாகவும் Cultureஎன்பது cultivativeஎன்ற பயிரிடுதலை குறிப்பதாகவும் அமைந்துள்ளன. வேளாண்மை எல்லாப் பொருளாதார நடவடிக்கைக்கும் மையமாக அமைந்துள்ளது. உழவுத் தொழிலே மிகவும் இன்றியமையாத தொழிலாகும். “உழுவார் உலகத்திற்கு அச்சாணி” என் வள்ளுவர் கூறியுள்ளார். இங்கிலாந்தில் தொழிற் புரட்சிக்கு முன்னரே வேளாண்மை புரட்சி தோன்றிவிட்டது. பின்னர் ஏற்பட்ட தொழிற்புரட்சியினால் வேளாண்மை பாதிக்கப்படவில்லை. மாறாக தொழிற்புரட்சியானது வேளாண்மையை ஊக்குவித்தது.

வேளாண்மை என்பது ஒரு வாழ்க்கை முறையாகும். விதை விதைப்பது, களை எடுப்பது, அறுவடை செய்வது போன்ற நடவடிக்கைகளை அது உள்ளடக்கியது. விவசாயி பல நேரங்களில், தன் சொந்தத் தேவையை நிறைவு செய்ய பயிரை வளர்க்கிறார். சில நேரங்களில் அவர் பல பொருளையும் மற்றவர்களிடம் விற்கும் பொருட்டு பயிரிடுகிறார். விவசாயத்தில் பல பொருட்கள் கூட்டுப் பொருட்களாகவே அமைகின்றன. அவற்றின் உற்பத்திச் செலவை தனித்தனியாக கணக்கிட

முடியாது. வேளாண்மை இயற்கையைச் சார்ந்துள்ளது என்பதால் மனிதனின் கட்டுப்பாட்டு ஓரளவே, வேலைப் பகுப்புக்கு இங்கு வாய்ப்பு குறைவு. நிலமே வேளாண்மைக்கு முக்கிய காரணி, உழவுத் தொழிலோடு, கோழி வளர்த்தல், ஆடு, மாடு வளர்த்தல் முதலியனவும், பழ மரங்கள், பூந்தோட்டம் போடுதலும் விவசாயத்தில் சேரும்.

குறிப்பு

வேளாண்மையில் அல்லது பயிரிடுதல் இரண்டு பருவங்கள் குறிப்பிடப்படுகின்றன. அவை (1) கரீப் பருவம் (2) ராபி பருவம், வேளாண்மை பருவ மழையை ஒட்டியே நிகழ்கிறது.

**வேளாண்மை மற்றும் வேளாண்மை பொருளாதாரம்:**

பொருளாதாரத்தின் நடைமுறை அம்சமே வேளாண்மைப் பொருளாதாரமாகும். இதில் வேளாண்மை தொடர்புடைய எல்லாச் சிக்கல்களுக்கும் கவனம் செலுத்தப்படுகிறது. விவசாயி எந்தப் பயிரை சாகுபடி செய்யலாம், என்ன விலையில் விற்கலாம். எந்த அளவு இலாபம் பெறலாம் என்பதற்கு வேளாண்மைப் பொருளாதாரம் உதவிாக உள்ளது. இவ்வாறு பற்றாக்குறையான வளங்களை உற்பத்தி, பதப்படுத்துதல் (Processing) மற்றும் நுகர்வு இவற்றிடையே பிரித்தளிப்பது பற்றி குறிப்பிடுவதால் வேளாண்மைப் பொருளியல் ஒரு சமூக அறிவியலாகும்.

.

வேளாண்மை என்பது நிலத்தைப் பண்படுத்தி பயிரை உண்டாக்குவதோடு கால்நடைகளை வளர்ப்பதையும் குறிக்கும். இவ்வாறு பால், இறைச்சி மற்றும் கம்பளி போன்றவை அரிசி, கோதுமை, பருத்தி போல விவசாயப் பொருள்களாகும். வேளாண்மை என்பது உலகத்தின் பழைமையான தொழிலாகும். உலகத்தில் மூன்றில் இரண்டு பங்கு மக்கள் நேரடியாகவோ மறைமுகமாகவோ வேளாண்மையை நம்பியுள்ளனர்.

**வேளாண்மை பொருளாதாரம்-இலக்கணம்**

ஆஸ்பி (Ashby)என்பவரது கருத்துப்படி,“வேளாண்மைப் பொருளியல் ஒரு நடைமுறை அறிவியலாகும். அதாவது வேளாண்மையில் உள்ள பொருளாதார வழிமுறைகள் மற்றும் அமைப்பு இவற்றினால் ஏற்படும் விளைவுகள் முதலியவற்றைப் பற்றிய முறையான படிப்பே வேளாண்மைப் பொருளியலாகும்”.

ஆர்.எல்.கோஹன் கருத்துப்படி,“வேளாண்மையையும் பொருளாதாரத்தையும் ஒன்றாய்ப் பிணைப்பதே வேளாண்மைப் பொருளியலாகும்”.“வேளாண்மையில் செல்வத்தைப் பெறுதல், செல்வத்தைப் பயன்படுத்துதல் இவற்றிடையே தோன்றும் தொடர்பு பற்றி ஆராய்வதே வேளாண்மைப் பொருளியல்” என ஹிப்பர்டு

(Hibbard)குறிப்பிட்டுள்ளார். "பொதுப் பொருளாதாரத்தின் ஒரு பகுதியே வேளாண்மைப் பொருளியல்" என எல்.சி.கிரே (L.C.Gray) கூறியுள்ளார்.

இவ்வாறு, தன் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள விவசாயி கையாளும் முயற்சி அனைத்திலும் குறிக்கிடும் பொருளதாரப் பிரச்சனைகள் பற்றிய நடைமுறை அறிவியலே வேளாண்மையைப் பொருளாதாரம் ஆகும். விவசாயியுடைய பிரச்சனைகள் பல என்றாலும் அவற்றை மூன்றுக்குள் அடக்கலாம். அவை உற்பத்தி (Production)அங்காடியில் விற்றல் (Marketing) மற்றும் நிதியிடுதல் (Fianancing)பற்றாக்குறையான பொருளை வைத்து அதிகப்படியான தேவையை நிறைவேற்றுவதே பொருளதாரம் ஆகும். இக்கோட்பாடு வேளாண்மைத் துறையில் பெரும் பங்கு வகிக்கிறது. ஏனெனில் நிலம் பற்றாக்குறையாகவே உள்ளது.

குறிப்பு

வோளண்மையில் பல்வேறு சக்திகள் பணியாற்றுகின்றன. எடுத்துக்காட்டாக, வேதியியல், புவியியல், தாவரவியல், மண்ணியல் நிபுணர்களின் துணைக்கொண்டு நிலத்தின் தன்மை முழுவதையும் ஆராயலாம். விவசாயிகளின் வாழ்க்கை வழியாக வேளாண்மை இருப்பதால் பொருளாதார, சமூக சக்திகளும் இதில் தலையிடுகின்றன. இதனையே வேளாண்மைப் பொருளாதாரம் குறிப்பிடுகிறது. இத்தொடர்புகள் வருமாறு:

1. வேளாண்மையில் ஒரே நேரத்தில் பல பயிர்கள் பயிரிடப்படுகின்றன. அதே பண்ணையில் கால்நடைகளும் வளர்க்கப்படுகின்றன. இவ்விதமான பல்வேறு நடவடிக்கையிடையே நிகழும் தொடர்பு.
2. வேளாண்மையில் ஒரே நேரத்தில் மனித சத்தியும் எந்திர சக்தியும் பயன்படுத்தப்படுவதால் உருவாகும் நடவடிக்கைத் தொடர்பு.
3. உற்பத்தியில் ஆளப்பெறும் உற்பத்திச் சாதனங்களின் மதிப்புக்கும் அவற்றால் உருவாகும் பொருளுக்கான மதிப்புக்கும் இடையேயுள்ள தொடர்பு.
4. விவசாயிகள் தங்கள் பொருட்களை விற்பவரோடு கொண்டுள்ள தொடர்பும், தங்களுக்கு வேண்டியவற்றை வாங்குபவரோடு கொண்டுள்ள வணிகத் தொடர்பும்.

## 1.2 வேளாண்மைப் பொருளியலின் இயல்பு மற்றும் நோக்கங்கள்

வேளாண்மையில் பல்வேறு சக்திகள் பணியாற்றுகின்றன. எடுத்துக்காட்டாக வேதியியல் புவியியல், தாவரவியல், மண்ணியல் நிபுணர்களின் துணைகொண்டு நிலத்தின் தன்மைஇ முழுவதையும் ஆராயலாம். விவசாயிகளின் வாழ்க்கை வழியாக வேளாண்மை இருப்பதால் பொருளாதார சமூக சக்திகளும் இதில் தலையிடுகின்றன. இதனையே வேளாண்மைப் பொருளாதாரம் குறிப்பிடுகிறது.

குறிப்பு

இதனையே வேளாண்மைப் பொருளாதாரம் குறிப்பிடுகிறது. இத்தொடர்புகள் வருமாறு

1) வேளாண்மையில் ஒரே நேரத்தில் பல பயிர்கள் பயிரிடப்படுகின்றன. அதே பண்ணையில் கால்நடைகளும் வளர்க்கப்படுகின்றன. இவ்விதமான பல்வேறு நடவடிக்கையிடையே நிகழும் தொடர்பு

2) வேளாண்மையில் ஒரே நேரத்தில் மனித சத்தியம் எந்திர சக்தியும் பயன்படுத்தபடுவதால் உருவாகும் நடவடிக்கை தொடர்பு

உற்பத்தியில் ஆளப்பெறும் உற்பத்திக் சாதனங்களில் மதிப்புக்கும் அவற்றால் உருவாகும் பொருளுக்கான மதிப்புக்குள் இடையேயுள்ள தொடர்புவிவசாயிகள் தங்கள் பொருட்களை விற்பவரோடு கொள்டுள்ள தொடர்பும் தங்களுக்கு வேண்டியவற்றை வாங்குபவரோடு கொண்டுள்ள வணிகத் தொடர்பும்

**உற்பத்திக் காரணி:**

உற்பத்திக் காரணிகளான நிலம், உழைப்பு, மூலதனம், நிர்வாகம் முதலியன நன்கு பயன்படுத்தப்பட்டால் வேளாண்மையிலிருந்து அதிக இலாபம் கிடைக்கும்.

**டெய்லரின் கோட்பாடு** ( Taylors Theory) :

டெய்லரின் கருத்துப்படி வேளாண்மையில் எதனை உற்பத்தி செய்ய வேண்டும் எப்படி உற்பத்தி செய்ய வேண்டும். எங்கு உற்பத்தி செய்ய வேண்டும் என்பதை தெரிந்து கொண்டால் அதிகப்படியான இலவசத்தைப் பெற வழியுள்ளது , நிலத்தைப் பயன்படுத்துதலும் நீர்ப்பாசனத்தை பயன்படுதுதலும் முக்கியம். எவ்வகைபயிர்களை பயிரிட வேண்டும் கால்நடைகளை எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்பதை அறிந்திருத்தால் அதிக இலாபம் சட்ட முடியும். அத்துடன் உற்பத்திச் செலவு பொருட்களின் நிலை, அவற்றின் விலை இவை பற்றியும் முக்கியமாக அறிந்திருக்க வேண்டும் விவசாயம் பொருட்களின் நுகர்வு பகிர்வு முதலியவற்றை அறிதல் அவசியம் விவசாயத்தில் ஆறுமுதல் அகல உழுதல் முறைகள் பற்றி அறிந்திருக்க வேண்டும். வேளாண்மை

என்பது மண்பாதுகாப்பு தொழிலாளரைப் பயன்படுத்துதல், நிலவுடைமை முறை வாரம், விவசாய உற்பத்தி, வேளாண்மை நிதி, வட்டி விகிதம் , கூலி வேலைவாய்ப்பு, விலைகள் உற்பத்திச் செலவு, இலாபம் வாழ்க்கைத் தரம் தேசிய வருவாயில் வேளாண்மையின் பங்கு உலக வணிகம் அரசின் தீவிரப் பங்கு முதலியவற்றைப் பெரிதும் சார்ந்து காரணப்படுகிறது என்று டெய்லர் கூறுகின்றர்.

இவ்வாறு நாட்டின் எல்லாப் பகுதி நடவடிக்கையும் உள்ளடங்கிய வேளாண்மைப் பொருளியலின் பரப்பளவு பரந்து, விரிந்து காணப்படுகிறது என்றால் விலையாகது வேளாண்மைப் பொருளியல் ஓர் அறிவியலில் தொகுப்பாகும் அதனை கலைவிலாகவும் அறிவியலாகவும் கோஹன் குறிப்பிட்டுள்ளார்.

குறிப்பு

### 1.2.1 வேளாண்மையின் இயல்புகள்

வேளாண்மையின் பொதுமான இயல்புகள் பின் வருமாறு:

**1. நீண்டகாலம் பிடிக்கக்கூடியது:**

எந்த உற்பத்தியிலும் இடுமானங்களை ஏற்படுத்திய பிறகு உற்பத்திப் பொருள் வெளிவர சிக்கலனதாகும் தொழிலை ஒப்பிடும் போது இந்த கால இடைவெளி வேளாண்மையில் அதிகமாக உள்ளது. இதற்குக் காரணம் வேளாண்மையில் மனிதனைவிட இயற்கையின் பங்கு அதிகம். பயிர் வளர்ந்து அறுவடைக்கு வரும்வரை விவசாயி காத்திருக்க வேண்டும். சில பயிர்கள் சில மாதங்களில் பயனளிக்கும் உணவுதானிய உற்பத்தி வேறு காபி, தேயிலை முதலியன பல வருடங்கள் எடுக்கும்.

**இயற்கையின் பங்கு மேலோங்கி இருத்தல் :**

வேளாண்மையில் இயற்க்கை தான் முதலாளி, உழவரோ ஒரு மேலாளரே வேளாண்மையில் முக்கிய இடுமானம் தண்ணீர் தான் தண்ணீரைப் பற்றி மேலாண்மை விவசாய உற்பத்தியில் சிக்கலானது. பருவமழை பெய்ந்தாலோ, வெள்ளம் வந்தாலோ வேளாண்மை உற்பத்தி பாதிக்கப்படும்.

**3) குறைந்துசெல் விளைவு விதி வேளாண்மையில் விரைந்து செயல்படுகிறது:**

வேளாண்மை உற்பத்தியில் இயற்கை மேலோங்கி இருப்பதால் இதில் குறைந்துசெல் விளைவு விதி விரைந்து செயல்படுகிறது.காரணம் வேளாண்மை என்பது மழை, பருவமழை போன்ற மனிதனால் கட்டுப்படுத்த இயலாத காரணிகளை நம்பி நிற்கிறது. மேலும் காலம் செல்ல செல்ல நிலத்தின் தன்மை மாறிவிடுகிறது. செழுமை குறைந்துவிடுகிறது. விவசாய நடவடிக்கையின் பரப்பளவு அதிகமாக உள்ளது. பருவகாலம் பல

மாதங்களை உள்ளடக்கி அமைகிறது. இதனால் சிறந்த மேற்பார்வையிடுதல் இயலாததாக உள்ளது

4) நிறைவுப் போட்டி நிலவுதல்

வேளாண்மையை முக்கிய தொழிலாக கொண்டுள்ள நாடுகளில் வேளாண்மையில் நிறைவுப் போட்டி அங்காடி நிலவுகிறது. வேளாண்மையில் பல மில்லியன் விவசாயிகள் ஈடுபட்டு அவரவர் பங்கினை அளிக்கின்றனர். அதனால் வேளாண்மை உற்பத்தியில் நிறைவுப் போட்டி நடைமுறையில் உள்ளது. இதனால் விவசாயி தன்னுடைய பொருளுக்கு அங்காடியில் நிலவும் விலையை ஏற்றுக்கொள்ள வேண்டுமே தவிர விலையை உருவாக்குபவராக இருக்க முடியாது

குறிப்பு

மேற்சொன்ன பொதுவான இயல்புகள் தவிர இந்தியப் பொருளாதாரம் வரலாறு, அரசியல் மற்றும் சமூக அடிப்படையில் சில சிறப்பு இயல்புகளைச் கொண்டதாக உள்ளது.

**அ) வேளாண்மைத் துறை பல்வேறுபட்டு இருத்தல்:**

பாரத நாடு பழம்பெரும் நாடு பல வேறுபட்ட இயல்புகளைக் கொண்ட நாடு, மண்ணின் இயல்பு , மழையின் அளவு, பாசனத்திற்குரிய தண்ணீர், விவசாய நடைமுறைகள், நிலவுடைமைமுறை முதலியன மாநிலத்திற்கு மாநிலம், மாவட்டத்திற்கு மாவட்டம் வேறுபட்டு உள்ளது. இந்தியாவில் ஒரே நேரத்தில் ஒரு பக்கதில் வறட்சி நிலவுகிறது. மறுபக்கதில் வெள்ளம் ஏற்படுகிறது. சில பகுதிகளில் தண்ணீர் தேங்கி நிற்கிறது. சில பகுதிகள் வறண்டு உள்ளன. தென் இந்தியா பருவ மழையையும், ஆற்று நீரையும் நம்பி உள்ளது. நைட்ரஜன், பொட்டாஷ் மற்றும் பாஸ்பேட்டுகள் பற்றாக் குறையாக உள்ளான . இதனால் வேளாண்மை தொடர்பாக பொதுவான திட்டமிடல் இயலவில்லை.

**ஆ) பல்வேறு பயிர்கள்:**

வேறுநாடுகளை ஒப்பிடும்பொழுது இந்தியாவில் பலவித உணவு தானியங்களும் மூலப்பொருட்களும் விளைகின்றன. இது ஒரு பக்கம் நல்லதாக இருப்பினும், உறுதியற்ற நிலைக்கு கொண்டு செல்கிறது. இதனால் பல பயிர்செய் மாதிரிகள் உருவாகின்றன. அது நாட்டின் பொருளாதாரத்திற்கு உதவாது.

**இ) மற்ற விதங்களில் வேறுபாடு**

இந்தியாவில் நில உரிமையில் பெரும் மாறுபாடு , பாசன வேறுபாடு , நிலத்தின் அளவில் வித்தியாசம் மாற்றுப் பயிர் விளைவிப்பதில் வேற்றுமை அதிகம் உள்ளன. இவற்றிற்கு பருவநிலை மற்றும் பொருளாதாரம் மட்டும் காரணமல்ல. இவை சமூக, அரசியல் மற்றும்

பாண்பாட்டுக் காரணங்களாலும் உருவாகின்றன. இதனால் நாடு முழுவதற்குமான ஒட்டுமொத்த வேளாண்மைக் கொள்கையை கையாளுவது இயலாது

**ஈ) ஓரளவு வாணிப பயிர் செய்யும் முறை**

பிழைப்பூதிய முறையும் , வாணிப முறை பயிரிடுதல் முறையும் இந்தியாவில் கலந்து உள்ளன. பிழைப்பூதிய முறை என்பது விவசாய உற்பத்தி சிறியதாகவும் குடும்பத் தேவைக்கு உற்பத்தி செய்வதையும் குறிப்பிடுகின்றது. ஆனால் வாணிப முறைப் பயிரிடுதல் என்பது அங்காடிக்கு உற்பத்தி செய்வதையும், இலாப நோக்கத்திற்காக உற்பத்தி செய்வதையும் குறிப்பிடுகிறது. இந்தியாவில் இவ்விரண்டு நோக்கமும் கலந்து செயல்படுவதால் விளைவுள்ள விவசாய விலைக்கொள்கையை செயல்படுத்த இயலவில்லை

குறிப்பு

**உ) நிலங்கள் சமமற்ற முறையில் பகிர்ந்தளிக்கப்படுதலும் சிறிய விவசாயிகள் அதிகமாக இருத்தலும்**

இந்தியாவில் சில விவசாயிகளிடமே பேரளவு நிலங்கள் உள்ளன.10 சதவிகிதம் பேர்களிடத்தில் விவசாய நிலத்தில் மூன்றில் இரண்டு பங்கு உள்ளது. . 50 சதவிகிதம் பேர்களிடத்தில் 2 சதவிகித நிலமே உள்ளது பயிரிடுவோரில் பெரும்பாலோர் சிறுவிவசாயிகள் அவர்கள் சிற்றளவு நிலத்தையே பயிரிடுகின்றன. பெரும்பாலான நேரத்தில் அவர்கள் குத்தகைதாரராகவும் பெரிய நிலச்சுவாந்தார்களிடம் விவசாயக் கூலியாளாகவும் உள்ளனர். குறைவான மூலவளம் உள்ளமையால் அவர்களால் நிலங்களில் முதலீடு செய்து விவசாய வளர்ச்சியைப் பெருக்க முடியவில்லை

**ஊ) ஏழ்மை நிலவுதல்**

விவசயப் பகுதிகளில் ஏழ்மை, படிப்பறிவின்மை , நோய் காணப்படுகிறது, பஞ்சாய் ஹரியான தவிர மற்ற மாநிலங்களில் வறுமைக்கோட்டிற்கு கீழ் வாழும் கிராம மக்களின் எண்ணிக்கை அதிகம் . ஏழ்மைச் சூழலால் புதிய தொழில்நுட்ப முறையை விவசாயிகளினால் பின்பற்ற இயலவில்லை

**எ) விவசாயிகள் அதிக கடன்படுதல்**

நிறுவன வழிகள் விவசாயிகளால் கடன்பெற இயலவில்லை எனவே பெரும்பாலான விவசாயிகள் செல்வந்தரான விவசாயியிடமும் , வட்டிக்கு கடன் கொடுப்போரிடமும் கடன்படுகின்றனர்.

**ஏ) குறைவான உற்பத்திதிறன்**

இந்திய விவசாயத்தில் உற்பத்திதிறன் மிகக் குறைவாக உள்ளது. உலக நாடுகலை ஒப்பிடும்போது இதில் வேறுபாடு அதிகம் உள்ளது.

**ஐ) பெருமளவு வேலையின்மையும் வேலைக்குறைவும்**

பாசனவசதியுடைய இடங்களையும் இரண்டு பயிர் செய்யும் வாய்ப்புடைய இடங்கலையும் தவிர பெரும்பாலனால் பகுதிகளீல் விவசாயத்தில் பெருமளவு வேலையின்மையும் வேலைக்குறைவும் உள்ளன. நிலத்தை நம்பி வாழ்வோருக்கு போதிய வேலையில்லை வேளாண்மையில் மறைமுக வேலையிண்மை அதிகம் உள்ளது. இவைத் தவிர இந்தியாவில் விளைப்பொருட்களை கொண்டு செல்லும் வசதி மிகக் குறைவு .

குறிப்பு

## 1.2. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1.வேளாண்மை-என்றால் என்ன?

2. -வேளாண்மையின் இயல்புகள் யாவை?

.

## 1.3 வேளாண்மையின் முக்கியத்துவம் அல்லது இந்தியப் பொருளாதாரத்தில் வேளாண்மையின் இன்றியமையாமை

இந்தியப் பொருளாதாரத்தின் முதுகெலும்பாக வேளாண்மை அமைந்துள்ளது. இந்தியாவில் செயல்பட்டு வரும் துறைகளில் வேளாண்மை தான் மிகப் பெரியதாகும். எனவே இந்திய நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் வேளாண்மை பெரும் பங்கு வகிக்கிறது என்றால் மிகையாகாது. வேளாண்மை வளர்ச்சி பொருளாதார வளர்ச்சிக்கு உதவுகிறது. வளர்ச்சியடைந்த நாடுகளான பிரிட்டன், அமெரிக்கா, ரஷ்யா, ஜெர்மனி, ஜப்பான் இவற்றைப் பார்த்தால் வேளாண்மை வளர்ச்சி தொழில் வளர்ச்சிக்கு முன்நிற்கும் நாடுகள் எல்லாம் ஒரு காலத்தில் வேளாண்மை நாடாக இருந்தன. வேளாண்மை நவீனமயமாக்கப்பட்டால் ஒழிய தொழில் வளர்ச்சி மெதுவாகவே இருக்கும் வேளாண்மையில் ஈடுபடும் நாடு எப்பொழுதும் ஏழையாகவே இருக்கும் என்று சொல்வது தவறு. (எ.கா) ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, டென்மார்க், தொழில் வளர்ச்சியில் ஈடுபட்டுள்ள நாடுகள் செல்வ வளமிக்க நாடுகள் என்று சொல்லிவிடமுடியாது. (எ.கா) இத்தாலி, ஸ்பெயின்

**மூன்று கொள்கைகள்:**

ஒரு நாட்டில் முன்னுரிமை அளிப்பது பற்றி மூன்று கோட்பாடுகள் உள்ளன. முதல் கொள்கை, வளர்ச்சிக்கு மேலாண்மையே முதன்மை என்பதாகும். இரண்டாவது கோட்பாடு தொழிலுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறது. மூன்றாவது வேளாண்மை, தொழில் இரண்டுக்கும் ஒரே நேரத்தில் முக்கியத்துவம் கொடுக்கிறது. முதல் கொள்கையைக் குறிப்பிடுவோர் வளர்ச்சியடையாத நாடுகளில் பொருளாதார வளர்ச்சிக்கு

வேளாண்மையே மூலமாகும் எனவும் அதனால் வேளாண்மை நவீனமயமாக்கப்பட வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டது. இரண்டாவது கொள்கையைச் சொல்வோர். வேளாண்மைத்துறை பலவீனமாகவும், லாபகரமில்லாததாகவும் அதிக எண்ணிக்கையில் தேவையற்ற முறையில் தொழிலாளரைக் கொண்டுள்ளதாகவும் இருப்பதாகக் குறிப்பிட்டனர். வேளாண்மையிலிருந்து உபரித் தொழிலாளரை மாற்ற தொழில் வளர்ச்சி முக்கியம் எனக் கருதப்பட்டது. மூன்றாவது கருத்தினைச் சொல்வோர் எந்த வளர்ச்சியடையாத நாடும் தொழிலையோ, வேளாண்மையையோ விட்டுவிட முடியாது எனவும் அவை இரண்டும் இரண்டு கதைகள் போன்று இணையானவை என்றும் கூறினர்.

குறிப்பு

**வேளாண்மைக்கு முதன்மையிடம்:**

மேற்கூறிய கோட்பாடுகள் சிறப்புடையன என்றாலும் வளர்ச்சியடையாத நாடு வேளாண்மையை விடுத்து வளர இயலாது என்பது தெளிவு. பொருளாதார வளர்ச்சியில் வேளாண்மையின் பங்கு கீழ்வருமாறு விளக்கப்படுகிறது.

**1. உணவு தானிய உற்பத்தியை அதிகரித்தல்:**

வளர்ச்சியடையாத நாடுகளில் பலவற்றில் மக்கள் தொகை மிக அதிகமாக வளர்ந்து வருகிறது. இறப்பு விகிதம் குறைந்தமையும் பிறப்பு விகிதம் மிக மெதுவாகக் குறைந்தமையும் இதற்கு காரணங்கள் இரண்டாவதாக மக்களது வருவாய் அதிகரிக்கும் பொழுது அவர்கள் உணவிற்காக கொஞ்சம் அதிகமாகச் செலவு செய்வர். இந்நிலையில் உணவு அளிப்பு அதிகரிக்காவிடில் விலைவாசி அதிகரிக்கும். இதனால் உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டு, கூலி விகிதங்களில் நெருக்கடி ஏற்படும். இது தொழில்களில் லாபம், முதலீடு, பொருளாதார வளர்ச்சி இவற்றைப் பாதிக்கும் உணவு தானியங்களை இறக்குமதி செய்து பற்றாக்குறை நிலையைச் சமாளிக்கலாம் என சிலர் சொல்லலாம். ஆனால் ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியின் துவக்கக்காலத்தில் உணவு தானியத்தை இறக்குமதி செய்ய முடியாது. காரணம் அது எந்திரங்களை இறக்குமதி செய்யவேண்டும்.

**2. தொழில்களுக்கு வேலையாட்கள் அளித்தல்:**

வேளாண்மை நவீனமயமாக்கப்பட்டால் இதுவரை வேளாண்மையில் ஈடுபட்டிருந்தவர்களில் ஒரு பகுதியினர் உபரியாகி விடுகின்றனர். இவர்களுக்கு வேளாண்மை அல்லாத துறைகளின் வேலை வாய்ப்பு கிடைக்கும். இதனால் நாட்டின் மொத்த வருவாய் அதிகமாகும். ஏனெனில்

தொழிலை ஒப்பிடும்போது வேளாண்மையில் இறுதிநிலை உற்பத்தித்திறன் மிகவும் குறைவு.

**3. மூலதனத் திரட்சி:**

வேளாண்மை வளரும் பொழுது அது மூலதனத் திரட்சிக்குக் கொண்டு செல்கின்றது வேளாண்மையில் உற்பத்தி அதிகமானால் உபரி தோன்றும் இந்த உபரியைக் கொண்டு சாலைகள் அமைக்கலாம் அணைகள் கட்டலாம். மின்சக்தி உற்பத்தி செய்யலாம் வேளாண்மைத் துறையிலிருந்து மூலதனத் திரட்சி சில வழிகளில் தோன்றுகிறது.

குறிப்பு

1. விவசாயத்தில் உபரியாக உள்ள வருமானத்திற்கு வரி விதிக்கலாம். அந்த உபரி வருவாயைக் கொண்டு முதலீடு செய்யலாம்.

2. வேளாண்மை உற்பத்தி அதிகரித்தால் வேளாண்மையைப் பொருள்களின் விலை குறையும். இதனால் மற்ற துறைகளில் பணி புரிவோர் உணவுக்குச் செலவிடுவதைக் குறைத்துக்கொள்ளலாம். இதனால் சேமிப்பும், முதலீடும் அதிகப்படும்.

**3. வளர்ச்சிக்குத் தேவையான அந்நியச் செலாவணியை ஈட்டுகிறது:**

வேளாண்மைத் துறையின் மூலம் ஏற்றுமதி செய்யப்பட்டு மதிப்புமிக்க அந்நியச் செலாவணி ஈட்டப்படுகிறது. இதனைக்கொண்டு எந்திரங்கள் முதலியன இறக்குமதி செய்யப்படுகின்றன. ஜப்பானிய பட்டு, அமொரிக்கா, கனடா, சோவியத் ரஷ்யா இவற்றின் தானியங்கள், க்யூபாவின் சீனி, ஸ்வீடனின் மரம், கூழ் மலேசியாவின் ரப்பர் முதலியவற்றின் ஏற்றுமதி வருமானத்திலிருந்து பெற்ற வருவாயைக் கொண்டு அந்நாடுகளில் எந்திரங்கள், கருவிகள் இறக்குமதி செய்யப்பட்டன.

**4. தொழிற் பொருட்களுக்குத் தேவையான அங்காடியை அளித்தல்:**

தொழிற்பொருட்களுக்குத் தேவையான அங்காடியை அளிப்பதன் மூலம் வேளாண்மை பொருளாதார வளர்ச்சிக்கு உதவுகிறது. விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும்போது வருமானம் அதிகரித்தால் அதனைக் கொண்டு தொழில் பொருட்களான துணி, சீனி, காலணி, கெடிகாரம், வானொலி, காற்றாடி சைக்கிள் முதலியன வாங்க இயலும்.

இவ்வாறாக வேளாண்மையை நம்பி நிற்போர் எண்ணிக்கையைக் குறைப்பது அவசியம். வேளாண்மைத் துறையின் வளர்ச்சி மற்ற துறை வளர்ச்சிக்கு கொண்டு செல்கிறது. வேளாண்மையே பொருளாதார

வளர்ச்சிக்கு அடிப்படை, ஒரு நாட்டின் வளர்ச்சியில் துவக்கக்காலத்தில் வேளாண்மைக்கு அதிக முன்னுரிமை கொடுக்க வேண்டும்.

**தேசீய வருமானத்தில் சிறப்பிடம்:**

குறிப்பு

இந்தியாவின் தேசிய வருமானத்தில் வேளாண்மைத்துறை மிகப் பெரும் பங்கு வகிக்கிறது. 1950 -51ல் தேசிய வருமானத்தில் 59 சதவிகீதம் விவசாயத்திலிருந்து பெறப்பட்டது. ஆனால் இன்று வேளாண்மையும் அதைச் சேர்ந்தவையும் தேசிய வருவாயில் 33 சதவிகித அளவு அளிக்கின்றன. வேறு துறைகள் இவ்வளவு வருமானம் தருவில்லை.

**பலரது வாழ்க்கை வசதிக்கு இருப்பிடம்**

இந்தியாவில் நேரடியாகவோ மறைமுகமாகவோ வேளாண்மையே மிகப் பெரும்பாலோருக்கு வாழ்க்கைத் தொழிலாக அமைந்துள்ளது. 1981ல் எடுத்த கணக்கெடுப்பின்படி 69.7 சதவிகிதம் மக்கள் விவசாயத்தை நம்பியுள்ளனர். மக்கள் பயிர் செய்தல், பால்பண்ணைத் தொழில், மீன் வளர்ப்பு , காடு வளர்ப்பு இவற்றில் ஈடுபட்டுள்ளனர். இந்தியாவை ஒப்பிடுகையில் அமெரிக்காவில் 3 சதவிகிதம் மக்களும், இங்கிலாந்தில் 2 சதவிகிதம் மக்களும் தான் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளனர்.

**உணவு மற்றும் தீவனம் அளிக்கிறது**

இந்தியாவில் அதிகரித்து வரும் மக்கள் தொகைக்கு வேண்டிய உணவினை வேளாண்மைத் துறையே அளிக்கிறது. திட்டமிட்ட வளர்ச்சியில் மக்களது வருமானம் . அதிகரிக்கிறது எனவே உணவிற்கான தேவையும் அதிகரிக்கிறது . எனவே உணவு மற்றும் மூலப்பொருட்களின் அளிப்பும் பெருகவில்லையெனில் விலைகள் அதிகரித்தால் விலையேற்றத்தைக் கட்டுப்படுத்த முடியாது. உணவு தானிய இறக்குமதியும் மக்களது தேவைக்கு உதவியது. ஆனாலும் ஓராண்டைத் தவிர மற்ற ஆண்டுகளில் தேவையான உணவு தானியத்தில் 5 சதவிகிதத்திற்கும் குறைவாகவே இறக்குமதி இருந்தது.

கால்நடைகளுக்குத் தேவையான தீவனத்தை வேளாண்மை அளிக்கிறது. உலகிலேயே மிகப் பெருவாரியான அளவில் கால்நடைகள் இந்தியாவில் உள்ளன. கால்நடைகள் பெரும் மதிப்புள்ள உணவுப் பொருள்களான பால். பால் பொருட்கள் , இறைச்சி , முட்டை, தோல் முதலியவற்றை அளிக்கின்றன. கால்நடைகள் மூலம் இயற்கை உரமும் கிடைக்கின்றது.

**தொழில்களுக்குத் தேவையான மூலப்பொருட்களை அளிக்கிறது.**

இந்தியாவில் நிலவும் பெரிய தொழில்கள் அனைத்தும் வேளாண்மையையே நம்பியிருக்கும் தொழில்களாகும். பஞ்சாலைகள்,

சணல், சர்க்கரை, தோட்டத்தொழில், வனஸ்பதி மற்றும் காகிதத் தொழில்கள் போன்றவை நேரடியாக வேளாண்மையையே நம்பி நிற்கின்றன. நெசவுத் தொழில், அரிசி ஆலைத்தொழில் , எண்ணெய் எடுத்தல், வெல்லம் தயாரித்தல் , பீடி தயாரித்தல், பட்டு நெசவு முதலியவற்றிற்கு வேளாண்மையிலிருந்தே மூலப்பொருட்கள் கிடைக்கின்றன.

**வணிகம் மற்றும் போக்குவரத்துக்கு உதவுகிறது**

குறிப்பு

இருப்புப்பாதை, சலைப் போக்குவரத்துக்கு வேளாண்மை மிகவும் உதவிகிறது. ஏனெனில் வேளாண்மைப் பொருள்களை தொழில் நகரங்களுக்குக் கொண்டு செல்லவேண்டும். பெறும்பாலான உள்நாட்டு வணிகம் வேளாண்மைப் பொருட்களை அடிப்படையாகக் கொண்டே நிகழ்கிறது. விவசாயத்துறை நடவடிக்கைகள் வங்கிகள் கிட்டங்கிகள் செயல்பட உறுதுணை புரிகின்றன.

.

**ஏற்றுமதியில் சிறப்பிடம்**

இந்தியாவின் ஏற்றுமதியில் வேளாண்மை சிறப்பிடம் வகிக்கிறது சணல், துணி, தேயிலைப் பொருட்கள், வாசனைப் பொருட்கள், புகையிலை,மரம், எண்ணெய் வித்துக்கள், கோந்துகள் போன்றவை நமது ஏற்றுமதியில் பெரும் பங்கு வகிக்கிறது. நமது ஏற்றுமதியில் 70 சதவிகிதம் அளவு வேளாண்மைப் பொருட்களாகும் எனவே வேளாண்மைப் பொருட்கள் உற்பத்தியில் சிறிதளவு கூடுதல் ஏற்பட்டாலும் மொத்த வருவாயில் சாதகமான சூழ்நிலை ஏற்படுகிறது.

**தொழில் உற்பத்திப் பொருள்களுக்கான அங்காடியைத் தோற்றுவிக்கிறது**

இந்தியாவில் வாழும் பலர் வேளாண்மையின் மூலமே தங்களது வருமானத்தைப் பெறுக்குகின்றனர். விவசாயிகளின் வருமானம் அதிகரித்தால், தொழில் உற்பத்திப் பொருட்களான துணி, சர்க்கரை, சைக்கிள் முதலியவற்றிற்கான தேவை பெருகும். விவசாயிகளின் வருமானம் குறைந்தால் தேவையும் குறையும். எனவே இந்தியாவில் உள்ள பல தொழில்களின் செழுமை விவசாயிகளின் செழுமையைப் பின்பற்றியே விதைகள், உரம் , பூச்சிக்கொல்லி, கருவிகள் ,குழாய்கள் முதலியவற்றிற்கான தேவை பெருகும் இதன் மூலம் தொழில்வளம் வேகப்படுத்தப்படும்.

**சேமிப்பு மற்றும் மூலதனத் திரட்சியின் இருப்பிடம்**

தேசிய வருமானத்தின் பெரும்பங்கு வேளாண்மையிலிருந்து கிடைப்பதால் இத்துறையே மூலதனத்திரட்சிக்கு மூலமாக அமைகிறது

வேளாண்மையிலிருந்து வணிக வங்கிகள் சேமிப்பாகப் பெருந்தொகையைப் பெறுகின்றன. அவை நகர்ப்புறங்களில் தொழில்களில் முதலீடு செய்ய அனுப்பப்படுகின்றன.

**அரசின் வரவு செலவு திட்டத்தோடு தொடர்புடையது**

குறிப்பு

வேளாண்மை வளர்ச்சி என்பது மாநிலங்களின் கையில் உள்ளதாகும் . மாநில அரசுகளின் வருமானத்தில் வேளாண்மை நடவடிக்கைகள் பெரும் பங்கு வகிக்கின்றன . நிலவரி மாநிலவரி ஆகும். மாநில அரசுகள் நீர்ப்பாசனம் , வீரிய விதைகள் அளித்தல் வேளாண்மைப் பொருட்களை விற்பதற்கு உதவுதல், வேளாண்மைக்குத் தேவையான மின்சாரத்தை அளித்தல் ஆகியவற்றில் பெருமளவு செலவு செய்கின்றன.

இவ்விதமான முக்கியத்துவம் வாந்ததாக வேளாண்மைத்துறை இருப்பதால் அரசு அதனை பலப்படுத்த முனைகிறது. வீரியரக விதைகள் புகுத்தப்பட்டுள்ளன, பலமுறை பயிர் செய்தல் , மானாவாரி நிலங்களில் பயிர் விரிவாக்கம் போன்றவை அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. சிறு விவசாயிகளுக்கு உதவ பல நிறுவனங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. கிராமத் திட்டங்களை வெற்றிகரமாக்க கூட்டுறவுத்துறை முனைந்து செயல்பட்டு வருகிறது

வேளாண்மை ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியை அதிகப்படுத்துகிறது. வளர்ச்சி அடைந்த நாடுகளான இங்கிலாந்து அமெரிக்கா, ரஷ்யா , ஜெர்மனி , ஜப்பான் முதலியவற்றில் வேளாண்மை முன்னேற்றம் தொழில் வளத்திற்கு கொண்டு சென்றதாக பொருளாதார வரலாறு கூறுகிறது. இன்று தொழில்வளமிக்க நாடுகளாக உள்ள பல, ஒரு காலத்தில் விவசாய நாடுகளாகவே இருந்தன. இங்கிலாந்தில் வேளாண்மை புரட்சி தொழில்புரட்சிக்கு முன்னோடியாக விளங்கியது. ஜெர்மனியில் விவசாய வளர்ச்சியும் தொழில் வளர்ச்சியும், தொழில் வளர்ச்சியும் ஒரே நேரத்தில் நிகழ்ந்தன.

வேளாண்மை உற்பத்தி மற்றும் உற்பத்தித்திறன் அதிகமானால் விவசாயிகளது வருமானம் அதிகரிக்கும் . இதனால் கிராமப்புறங்களில் சேமிப்பு அதிகமாகும். அதிகரிக்கும் சேமிப்பை விவசாய வளர்ச்சியை மேலும் அதிகமாகும். அதிகரிக்கும் சேமிப்பை விவசாய வளர்ச்சியை மேலும் பெருக்கவோ, விவசாயம் அல்லாத துறை அல்லது தொழில் வளர்ச்சிக்கோ பயன்படுத்தலாம். வேளாண்மைத் துறையிலிருந்து வேளாண்மை அல்லாத துறைக்கு சேமிப்பு மாற்றப்படுதல் தன்னிச்சையாகவோ கட்டாயமாகவோ நிகழலாம்.

**வேளாண்மை வளர்ச்சி முதல் திரட்சிக்கும் தொழில் வளத்திற்கும் கொண்டு செல்வதோடு வேறுபல நன்மைகளையும் உருவாக்குகிறது.**

1. **வளர்ந்துவரும் தேவையைச் சமாளிக்க உணவு உற்பத்தி அதிகரித்தல்**

குறிப்பு

வளர்ந்துவரும் நாடுகளிலும் வளர்ச்சிக்குறைவான நாடுகளிலும் மக்கள்தொகை வேகமாக வளர்ந்து வருகிறது. ஆனால் மக்களது நுகரும் அளவு மிகமிகக் குறைவாக உள்ளன. எனவே உணவுப் பொருள் உற்பத்தியை அதிகரிப்பது அவசியம் இன்றுள்ள நுகர்வு நிலையை பராமரிக்க உணவுப்பொருள் உற்பத்தி மக்கள் தொகை வளர்ச்சிக்கு சரிசமமாக இருக்க வேண்டும் , மக்களது வருமானம் அதிகரிக்கும்பொழுது, அவ்வாறு அதிகமாகும் வருமானத்தில் பெரும் பகுதியை உணவுக்காக செலவிடுவர். எனவே மக்களது வாழ்க்கைத்தரத்தை நியாயமன அளவுக்கு உயர்த்த உணவு உற்பத்தியின் வளர்ச்சி விகிதம் மக்கள்தொகை வளர்ச்சி விகிதத்தை விட மிக அதிகமாக இருத்தல் வேண்டும்.

.

**2. வளர்ந்துவரும் தேவையைச் சமாளிக்க மூலப்பொருள் உற்பத்தியைப் பெருக்குதல்**

தொழில்மயமாக்குதல் விவசாய மூலப்பொருட்களின் தேவையை உயர்த்தும், பஞ்சாலை , சர்க்கரை, காகிதம் மற்றும் வனஸ்பதி உற்பத்திக்கு விவசாயத்தையே நம்பியுள்ளன. மக்களது வருமானம் அதிகரிக்கும்பொழுது நுகர்வோர் பொருள் தேவை அதிகரிக்கிறது. இதனால் பஞ்சாலைப் பொருள் போன்ற நுகர்வோர் பொருளின் தேவை அதிகரிக்கிறது. எனவே வளரும் தேவைக்கேற்ப மூலப்பொருட்கள் உற்பத்தி பெருமளவு அதிகரிக்கப்பட வேண்டும் இல்லையேல் தொழில் விரிவாக்கம் குறையும்.

**3. பணவீக்கத்தை மட்டுப்படுத்துகிறது அல்லது எதிர்த்துச் செயலாற்றுகிறது**

பொருளாதார வளர்ச்சியின் துவக்க காலங்களில் பெரிய தொழில்கள் மின்சக்திக் திட்டங்கள் மற்றும் நீர்ப்பாசன வேலைகள் முதலியவற்றில் அதிக முதலீடு செய்வதால் மக்கள் அதிக வருமானம் பெறுவர். சில நேரங்களில் இத்திட்டங்களை முடிக்க மூன்றிலிருந்து எட்டு ஆண்டு கூட ஆகலாம். இடைப்பட்ட காலத்தில் உணவு, உடைக்கான தேவை மற்றும் வாழ்க்கைக்கு இன்றியமையாதவற்றின் தேவை அதிகரிக்கும் . எனவே வளரும் தேவையை சமாளிக்க போதுமான அளவு உணவு மற்றும்

மூலப்பொருட்களின் உற்பத்தியை அதிகரிக்க வேண்டும் . இவற்றில் பற்றாக்குறை தோன்றினால் பணவீக்கம் தோன்றி மக்கள் பாதிக்கப்படுவர். உற்பத்தீச் செலவு அதிகரிப்பதால் பொருளாதார வளர்ச்சி குன்றிவிடும்

**4 அந்நியச் செலவாணியைச் சம்பாதிக்க**

பொருளாதார வளர்ச்சியின் துவக்க காலத்தில் ஒரு நாட்டிற்கு எந்திரங்கள், கருவிகள் மற்றுமுள்ள முக்கிய மூலதனப் பொருட்கள் தேவைப்படுகின்றன. இவை அந்நிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட வேண்டும் இந்நிலையில் வேளாண்மைத் துறையில் உபரி செய்ய வேண்டும். எந்திரங்களை இறக்குமதி செய்ய வேளாண்மைப் பொருள் ஏற்றுமதி அந்நியச் செலவாணியை ஈட்டித்தர வேண்டும்.

குறிப்பு

**5 ஆலைப் பொருளுக்கு அங்காடியை ஏற்படுத்த**

தொழில் துறையில் ஆலைப் பொருட்களுக்கு அங்காடியை உருவாக்குவதன் மூலம் வேளாண்மைத்துறை பொருளாதார வளர்ச்சிக்கு உதவுகிறது. அதிகரிக்கும் வேளாண்மை உற்பத்தி விவசாயிகளின் வருமானத்தை அதிகரிக்கிறது. போக்குவரத்து மற்றும் தொடர்பு வசதியின் வளர்ச்சி காரணமாகவும், நகர்ப்புறங்களோடு அடிக்கடி ஏற்படும் தொடர்பு காரணமகவும் , விவசாயிகளின் தேவையின் வடிவம் மாறுகிறது. இதனால் கைவிளக்குகள், துணி , சர்க்கரை, காலணி, கைக்கடிகாரங்கள், வானொலிப்பெட்டிகள், மின்விசிறிகள் மற்றும் சைக்கிள் முதலிய ஆலைப் பொருட்களின் தேவை அதிகமாக அதிகரித்தது. இதனால் தொழில் விரிவாக்கம் பெருகியது. இவ்வாறு வேளாண்மை வளர்ச்சி ஆலைப் பொருட்களுக்கு அங்காடியை பெருமளவு அதிகரிக்கிறது.

**6 தொழில்களுக்கு உழைப்பாளரின் அளிப்பை உறுதிப்படுத்துகிறது**

பொதுவாக வளரும் நாடுகளில் வேளாண்மைத்துறையில் அதிகப்பேர் இருப்பர். உபரி தொழிலாளர் இருப்பதால் வேளாண்மைத் தொழிலாளரது இறுதிநிலை உற்பத்திதிறன் சைபராக இருக்கும் சுருங்கச் சொன்னால் உற்ப்பத்தியை அதிகரிக்காமல் , வேளாண்மைத் துறையில் மறைமுக வேலையின்மை நிலவும் . மாறாக , தொழில் மற்றும் போக்குவரத்துத் துறையிகளில் அதிக வேலைவாய்ப்புக்கு வழியுள்ளது. வேளாண்மையில் உள்ள உபரி விவசாயத் தொழிலாளர்கள் தொழில்களுக்கு மாற்றப்படலாம். தொழில்களில் தொழிலளாரது உற்பத்தித் திறனும், வருமானமும் அதிகரிக்கும். இவ்வாறு வேளாண்மைத் துறை தொழிலாளர்களுக்கு உழைப்பாளரை அளிக்கலாம். மேலும் குறைவான

வேலையுடையவர்களது உற்பத்தித் திறனைப் பெருக்கி பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கலாம். இவ்வாறு ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு விவசாயத்துறை பெரும்பங்கு ஆற்றுகிறது.

## 1.4 வேளாண்மையும் தொழிலும்

குறிப்பு

வேளாண்மை என்பது விவசாயம் பொருட்களை உற்பத்தி செய்து, பதப்படுத்தி அங்காடிகளில் விற்று பலர் கைக்கு அப்பொருட்களை சென்றடைய செய்வதாகும் மாறாக ஆலைத் தொழில் என்பது மூலப் பொருட்களை பெற்று முடிவுவுற்ற பொருளாக அதனை மாற்றி அங்காடிக்கு அனுப்புதலைக் குறிக்கும

வேளாண்மைத் தொழிலிலும், ஆலைத் தொழிலிலும் இடுமானம் உற்பத்தி முதலியன உண்டு. எனினும் அவற்றிடையே கீழ்காணும் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

.

வேளாண்மைத் தொழிலானது ஒரு விநோதமான தொழில். ஏனெனில் வேளாண்மையில் தொழிலும், வாழ்க்கையும் ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. அது மட்டுமின்றி, வேளாண்மைத் தொழிலானது சமூக அமைப்பு, அரசியல் உணர்வு இவைகளை சார்ந்ததாக உள்ளது. ஆனால் ஆலைத் தொழிலில் தொழில் வேறு. வாழ்க்கை வேறாக உள்ளன.

வேளாண்மையில் ஈடுபட்டுள்ளோர் தங்கட்கு வேண்டிய பொருட்களை தாங்களே உற்பத்தி செய்கின்றனர். இதனைத் தன்னிறைவுப் பொருளாதாரம் என்கிறோம். தற்காலத்தில் விவசாயி தனது தேவை போக மீதியை அங்காடிக்கு அனுப்புகின்றனர். ஆனால் ஆலைத் தொழிலில் ஈடுபடும்தொழில் முயல்வோர் தமக்கு வேண்டியதை தாமே உற்பத்தி செய்வதில்லை. ஆலைத் தொழிலில் அங்காடிக்குப் போக மீதப் பொருளையே வைத்துக் கொள்கின்றனர்.

வேளாண்மைப் பொருட்கள் கூட்டுப் பொருட்கள் (joint Products) ஆகும். எடுத்துக்காட்டு நெல்லுடன் வைக்கோல் கிடைக்கின்றது. ஆடு உரிக்கும்பொழுது மாமிசம், தோல் முதலியன கிடைக்கின்றன. இதனால் வேளாண்மைப் பொரட்களின் உற்பத்திச் செலவையும் அவற்றின் அளிப்பிற்கான விலையையும் துல்லியமாக நிர்ணயிப்பது கடினமாக உள்ளது. ஆனால் பெரும்பாலான ஆலைப் பொருட்கள் தனித்தனியாக உற்பத்தி செய்யப்படுவதால் உற்பத்திச் செலவைக் கணக்கிட்டு விலை வைத்து விற்க முடிகிறது.

வேளாண்மைக்கு அதிகமாகவளம் நிறைந்த நிலம் தேவை. ஆலைத் தொழிலுக்கு வளமற்ற நிலமாக இருந்தாலும் போதும். நல்ல நிலம் தேவையில்லை.

வேளாண்மையில் குறைந்துசெல் விளைவு விதி வேகமாக துரிதமாகச் செயல்படும். ஆனால் தொழிலில் வளர்ந்தசெல் விளைவு விதி துவக்கத்தில் செயல்பட வாய்ப்புண்டு. விவசாயத்தில் நிலக் குத்தகை, நில அமைப்பு முறை முதலியன கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. ஆனால் பொறிசெய் தொழிலில் இப்படிப்பட்ட நிலை இல்லை.

குறிப்பு

வேளாண்மையில் நிலவுடைமைகள் சிறுசிறு பண்ணைகளாக இருப்பதால் பேரளவுச் சிக்கனங்களை அடைய இயலவில்லை. மேலும் நிலங்கள் துண்டுபட்டு, சிதறுண்டு உள்ளன. எனவே இதில் வேலைப்பகுப்பு முறைக்கு வாய்ப்பில்லை. தொழில் நுட்பங்களைப் புகுத்த இயலாது மாறாக, ஆலைத் தொழிலில் பேரளவு உற்பத்தியும், வேலைப்பகுப்பும் உள்ளன.

சிறு சிறு பண்ணைகளை வேளாண்மைத் துறையில் பெரிய பண்ணைகளாக உருவாக்குவது கடினம். ஆனால் ஆலைத் தொழிலில் விரிவாக்கத்திற்கு எந்நாளும் வாய்ப்புண்டு.வேளாண்மைத் தொழிலில் இயற்கையின் ஆதிக்கம் அதிகம். எனவே தான் “வேளாண்மை என்பது பருவநிலையின் சூதாட்டப் பிடியில்” உள்ளது என சொல்லப்படுகிறது. ஆனால் ஆலைத் தொழிலில் இயற்கையை மீறி மனிதன் செயல்பட முடியும்.வேளாண்மையை விவசாயிகளின் கட்டுப்பாட்டிற்குள் முழுவதும் கொண்டு வருவது கடினம். ஏனெனில் விலை அதிகமாகின்றது என்பதற்காக உடனடியாக அந்தப் பொருளை உற்பத்தி செய்ய முடியாது. ஆனால் ஆலைத் தொழிலில் உடனடியாக பொருட்களை அதிகமாக உற்பத்தி செய்ய முடியும்.

### 1.4.1 வேளாண்மையில் தோன்றும் சிக்கல்கள்

இன்றும் கூட வேளாண்மையில் இயற்கையின் பங்கு அதிகமாக உள்ளது வேளாண்மைப் பொருட்களின் உற்பத்தியில் மழையும் பருவநிலையும் பெருமளவு பங்கு கொள்கின்றன. ஒரே நிலத்தில் திரும்பத் திரும்ப விவசாயம் நடைபெறுவதால் நிலத்தின் செழுமை நாளடைவில் குறைகிறது. விவசாயப் பொருட்களின் விலைகள் அதிக ஏற்றத் தாழ்வுக்கு உட்படுகின்றன.

குறிப்பு

விவசாயத்தின் சிக்கல்களில் சில

**1. நீர்ப்பாசனம் மற்றும் பருவநிலை**

ஒரு மண்டலத்தில் உள்ள பருவ நிலையைப் பொறுத்துத் தான் பயிர் செய்யப்படுவது நிர்ணயிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக ஐஸ்லாந்தில் நெல் பயிரிட முடியாது . காரணம் நெல்லுக்கு வேண்டிய சீதோஷ்ணநிலை அங்கு இல்லை. அதைபோல சஹாரா பாலைவனத்திலோ, இமாச்சலப் பிரதேசத்தின் உச்சியிலோ கால்நடைகள் வளர்க்க முடியாது.

நீர்ப்பாசன வசதிகள் கிடைப்பதைப் பொறுத்துத் தான் எந்தவிதப் பயிரையும் விளைவிக்கலாம் என்பதும் வருடத்திற்கு எத்தனை முறை அதனைப் பயிரிடலாம் என்பதும் நிர்ணயமாகிறது. உலகம் முழுவதிலும் மழை ஒரே அளவாக இல்லை. மேலும் அது உறுதியற்றும் உள்ளது. சில இடங்களில்ல் மழை அபரிமிதமாகவும் , வேறு சில இடங்களில் பற்றாக்குறையாகவும் உள்ளது. பருவநிலையையே நம்பியிருக்கும் நாடுகளில் , வானம் பொய்த்தால் வறட்சி ஏற்பட்டுவிடும் எல்லையை மீறி மழை பெய்தால் வெள்ளம் ஏற்பட்டு விடும். இயற்கையின் இந்த முரண்பாட்டை வெல்ல அணைகள், குழாய்க்கிணறுகள் போன்ற பாசன வசதிகள் ஏற்படுத்தப்படலாம். ஆனால் இவ்வசதியை உருவாக்க முதலீடு தேவைப்படுகிறது. முதலீட்டுக்கான மூலதனம் பற்றாக்குறையாக உள்ளது. பாசனத் திட்டங்களை உருவாக்க கட்டுமானச் செலவு அதிகரிக்கிறது.

இந்தியாவில் தண்ணீர் சிக்கல் பெரிதாக உள்ளது. வட இந்தியாவில் ஏற்படும் பாய்ந்தோடும் ஆறுகள் உள்ளன. அவை கிழக்கு மற்றும் வடகிழக்குப் பகுதிகளில் எப்பொழுதும் வெள்ளத்தை உருவாக்குகின்றன. இதனைத் தடுக்க ஆறுகளை இணைப்பது குறிப்பிடப்படுகிறது. எனினும் வேளாண்மை மற்றும் நீர்ப்பாசனம் மாநில அரசுகளின் அதிகாரத்திற்கு உட்பட்டவையாக இருப்பதால் நீர்பபங்கீட்டில் தகராறு நீடித்தே வருகிறது.

**2 பண்ணைகளின் அமைப்பு**

பண்ணைகளின் அமைப்பு உழவர், விவசாயத்துறை மற்றும் பொருளாதார வளர்ச்சியை நிர்ணயிக்கிறது. பல நாடுகளில் பண்ணைகளின் அமைப்பு பல்வேறுபட்டு அமைகிறது. ஆசிய நாடுகளில் பெரிய பண்ணைகள் இல்லை. சிறிய நிலவுடைமைகளே உள்ளன. அவையும் பல இடங்களில் அமைந்தும் துண்டாப்பட்டும் உள்ளன. இந்நாடுகளில் நிலச்சீர்திருத்தம் என்பது நில உடைமையாளரிடமிருந்து உழவருக்கு உரிமையை மாற்றிக்

கொடுப்பதையே குறிப்பிடுகிறது. ஆனால் பெரிய நிலவுடைமையாளர்கள் மேலும் மேலும் நிலத்தை வாங்கிக்கொண்டே போகிறார்கள் தாராளமாகச் செலவு செய்கிறார்கள் ˙ விவசாயிகளுக்கு மிக அதிக வட்டிக்கு கடன் கொடுக்கிறார்கள்.

குறிப்பு

### 3 நிதி

பெரும்பாலான வளர்ந்துவரும் நாடுகளில் சராசரி விவசாயி வாய்க்கும் கைக்கும் வாழ்க்கை என்பதையே நடத்துகிறாரகள். அவர் கடன் பொறியில் சிக்கியுள்ளாரகள் . அவர் எளிதில் கடன் பெற இயலவில்லை என்பது சிக்கலைப் பெரிதாக்குகிறது. விவசாயிகளுக்கு போதிய கடன் உரிய காலத்தில் கிடைத்தால் தான் வேளாண்மை உற்பத்தி பாதிக்காது. முதலீட்டு அங்காடி செம்மையற்று உள்ளதால். விவசாயத்தைப் பாதிக்கிறது .

### 4 பொருட்களைப் பாதுகாத்தல் மற்றும் சந்தையிடுதல்

விவசாயிகள் தங்கள் பொருட்களை நீண்ட காலத்திற்க்கு பாதுகாத்து வைக்க முடியவில்லை . எனவே அவர்கள் அறுவடையானதும் குறைவான விலைக்கு பொருட்களை சந்தையில் விற்கிறர்கள். வளர்ச்சியடையாத போக்குவரத்து, தொலை தொடர்பு வசதிகள் விவசாயிகளுக்கு பெரும் தடையாக உள்ளன. மேலும் இடைத்தரகர் இருப்பதும் , பொருட்கள் தரம் பிரிக்கப்படாமல் இருப்பதும் விவசாயிகளின் நிகர வருமானத்தை பாதிக்கிறது.

### 5 மண்ணின் செழுமை பாதிக்கப்படுதல்

நிலத்தின் செழுமை நிலத்தை திரும்பத் திரும்ப உழுவதால் பாதிக்கப்படுகிறது. மண் அரிப்பும் நிலத்தின் செழுமையை பாதிக்கிறது. ரசாயன உரம் மற்றும் பூச்சிக் கொல்லிகளைப் பயன்படுத்துதல் இயற்கையான செழுமையைப் பாதித்து மாசுச் சிக்கலை உருவாக்கிறது.

### 6. பல்வகைப்படாமை

வளரும் நாடுகளில் விவசாயத்தில் ஒரே ஒரு பயிர் மட்டுமே விளைவிக்கப்படுகிறது. விவசாயிகளின் பிழைப்புக்குரிய ஊதியத்தைப் பெறவே உற்பத்தி செய்கின்றனர். இவ்விதச் சிறப்புச் தேர்ச்சி உற்பத்திச் செலவைக் குறைப்பதாகவும் தரமான உற்பத்திக்கு கொண்டு செல்வதாகவும் சிலர் குறிப்பிடுகின்றனர். எனினும் நோய் ஏற்பட்டலோ, விலை குறைந்தாலோ பெரும் நட்டம் ஏற்படுகிறது. சிறப்புத் தேர்ச்சி

குறிப்பு

தொழிலாளர் பிரச்சனை உருவாக்குகிறது. பருவ காலம் துவங்கியதும் எல்லோருக்கும் வேலையாள் தேவைப்படுகிறது. வேலையாள் பற்றாக்குறை ஏற்படுவதால் அதிக வேலயாளை ஈர்க்க அதிகக் கூலி கொடுக்கப்படுகிறது

**7 பருவகாலம் மற்றூம் சுழற்சியான ஏற்றத்தாழ்வுகள்**

பருவகாலம் ஏற்றத்தாழ்வுகளால் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. பருவநிலை மாற்றங்கள் எல்லாப் பயிர்களையும் பாதிக்கிறது. எனினும் அழுகும் பொருட்களான தக்காளி, உருளைக்கிழங்கு, வெங்காயம் முதலியவற்றில் பாதிப்பு அதிகம் உள்ளது

## 4.4 1 வேளாண்மையும், தொழிலும் ஒன்றையொன்று சார்ந்து இருத்தல்:

வேளாண்மையும் தொழிலும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன.

.

1. வேளாண்மையும் தொழிலும் ஒன்றுக்கொன்று சார்ந்து விளங்குகின்றன. எடுத்துக்காட்டாக பஞ்சாலைக்குத் தேவையான பருத்தியும், தோல் தொழிற்சாலைக்குத் தேவையான தோலும் வேளாண்மையிலிருந்து கிடைக்கின்றன. அதுபோல வேளாண்மைக்குத் தேவையான கருவிகள், உரங்கள், பூச்சி மருந்துகள், விவசாயிக்கு வேண்டிய முற்றுப்பெற்ற பொருட்கள் ஆலையிலிருந்து கிடைக்கின்றன.

2. ஆலை தொழிலாளர்க்கு வேண்டிய உணவுப் பொருட்களை வேளாண்மை வழங்குகிறத. அதுபோல வேளாண்மை செய்பவர்களுக்குத் தேவையான ஆடை போன்ற நுகர்வுப் பொருட்களை ஆலைகள் வழங்குகின்றன.

3. வேளாண்மைப் பொருளானது வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படும்பொழுது அயல்நாட்டுச் செலவாணி கிடைக்கிறது. இதனைக் கொண்டு ஆலைகளுக்கு வேண்டிய இயந்திரங்களையும், கச்சாக்பொருட்களையும் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்கிறோம். வேளாண்மையை இயந்திரமாக்கும்பொழுது, அதிலிருந்து தோன்றும் உபரித் தொழிலாளர்களை ஆலையில் அமர்த்தலாம். ஆகவே இவை ஒன்றோடொன்று தொடர்புடையன.

4. வேளாண்மையிலிருந்து வரக்கூடிய பொருட்களிலிருந்து ஒரு பகுதியைச் சேமித்து அதை நிதியாக்கி, அந்த நிதியை ஆலை

வளர்ச்சிக்கும், போக்குவரத்துக்கும், இதர துறைகளின் வளர்ச்சிக்கும் பயன்படுத்தலாம்.

5. ஆலை வளர்ச்சிக்கும், விரிவாக்கத்திற்கும் வளமான வேளாண்மை இன்றியமையாததாகும். செழிப்பான வேளாண்மை வணிகத்திற்கும், ஆலைப் பொருள் உற்பத்திக்கும் அடிப்படையானது என்றால் மிகையாகாது.

குறிப்பு

இவ்விதமாக முக்கியத்துவம் வாய்ந்ததாக வேளாண்மைத் துறை இருப்பதால் அரசு அதனைப் பலப்படுத்த முனைகிறது. வீரியரக விதைகள் புகுத்தப்பட்டுள்ளன் பலமுனைப் பயிர் செய்தல் மானாவாரி நிலங்களில் பயிர் விரிவாக்கம் போன்றவை அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. சிறு விவசாயிகளுக்கு உதவ பல நிறுவனங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. கிராமத் திட்டங்களை வெற்றிகரமாக்க கூட்டுறவுத்துறை முனைந்து செயல்பட்டு வருகிறது.

**வேளாண்மை உற்பத்தியும் உற்பத்தித் திறனும் அதன் போக்கும் - குறைவான உற்பத்தித் திறனுக்கான காரணங்கள்:**

அகில இந்திய கிராமக்கடன் ஆய்வு அறிக்கை குறிப்பிட்டதைப் போல, இந்தியா என்பது கிராமங்களில் அடங்கியுள்ளது் கிராமங்கள் அடங்கிய இந்தியா என்பது உண்மையாக உழவரைத் தான் குறிப்பிடுகிறது". வேளாண்மையில் ஒரு தனி வேலையாள் கணக்கிலும், ஒரு ஏக்கர் கணக்கிலும் உற்பத்திக் குறைவு டாக்டர் பல்ஜித்சிங் கூறியிருப்பதுபோல வேலையாள் கணக்கில் உற்பத்திக் திறன் இந்தியாவில் 105 ஆக உள்ளது. இது இங்கிலாந்தில் 2057 ஆகவும், ஜப்பானில் 2265 ஆகவும், அமெரிக்காவில் 2408 ஆகவும், மேற்கு ஜெர்மெனியில் 3495 ஆகவும் உள்ளன. நிலத்தின் உற்பத்தித் திறனும் இந்தியாவில் மிகவும் குறைவு.

எல்லாப் பயிர்களின் உற்பத்தியும் அண்மைக் காலங்களில் அதிகரித்துள்ளது. எடுத்துக்காட்டாக, 1950-51-ல் அரிசி உற்பத்தி ஹெக்டேருக்கு 668 கிலோகிராம், 1989-90-ல் இது 1756 கிலோ கிராமாக அதிகரித்தது. 1950-51-ல் கோதுமை உற்பத்தி 663 கிலோ கிராம் 1989-90-ல் இது 2117 ஆக அதிகரித்தது. சீனி, கடலை இவற்றைக் காட்டிலும், அரிசி கோதுமை உற்பத்தி அதிகமாக இருந்தன. கேரளா, மேற்கு வங்காளம், பஞ்சாப் முதலிய மாநிலங்களில் நிலத்தின் உற்பத்தித்

திறனும், வேலையாட்களின் உற்பத்தித் திறனும் அதிகம். மத்திய பிரதேசம், பீகார் முதலியவற்றில் இவை குறைவு.

**குறைவான உற்பத்தித் திறனுக்கான காரணங்கள்**

குறைவான உற்பத்தித் திறனுக்கான காரணங்கள் நான்கு வகையாகப் பிரிககிறோம்: 1) இயற்கைக் காரணங்கள் 2) நிறுவனக் காரணங்கள் 3) தொழில் நுட்ப காரணங்கள் 4) சமூக பொருாதார காரணங்கள்.

குறிப்பு

**1. இயற்கைக் காரணங்கள்:**

இந்தியாவில் வேளாண்மை இயற்கையை நம்பியுள்ளன. வேளாண்மை பருவ மழையை நம்பியுள்ளது. இருக்கின்ற நிலத்தில் 81மூ பருவ மழையை நம்பியுள்ளது. 19மூ தான்குளம், கால்வாய் பாசன வசதியுடையது. பருவமழை உறுதியற்றது. சில வேலைகளில் மிக அதிகமான மழை பெய்து (இந்த ஆண்டு போல) வெள்ளம் ஏற்படுகிறது. இது தவிர இடி மின்னல் உறைபனி, பூச்சிகடித்தல் முதலியனவும், வேளாண்மை உற்பத்தியைப் பாதித்துள்ளன. மண்களும் வளவேறுபாடு உடையவை எனவே உற்பத்தித்திறனும் குறைவாக உள்ளது.

**2. நிறுவனக் காரணங்கள்:**

**1. நிலவுடைமையின் அளவு:**

வேளாண்மைக்கு எடுத்துக்கொள்ளும் நிலத்தின் அளவு மிகவும் சிறியது. ஒவ்வொருவரும் பயிர் செய்யும் நிலத்தின் அளவு குறைவு என்பதோடு அவை பல இடங்களில் பிரிந்தும் அமைந்துள்ளன. இதனால் சிறந்த எந்திரங்களைக் கொண்டு விஞ்ஞானப் பூர்வமாக வேளாண்மையை நடத்திச்செல்ல இயலவில்லை. மாடுகளைப் பயன்படுத்துதல், எல்லைத் தகராறுகள் முதலியன உழவர்களின் முயற்சிக்கு முட்டுக்கட்டையாக உள்ளன.

**2. நிலவுடைமையின் வகை:**

பெரிய நிலச்சுவான்தாரர்களிடம் உழவுக்குரிய நிலத்தில் 50மூ உள்ளது. இடைத்தரகர்கள் ஒழிக்கபட்டாலும், குத்தகைக்கு நிலங்களை உழுவோரின் நிலை மோசமாகவே உள்ளது. உழுபவர் நிலத்தில் வருவதில் பெரும் பகுதியை வாரமாக நிலச்சுவான்தாரர்க்கு அளித்தவிடுகிறார். நிலம் சிறிதாக இருப்பதனாலும், கடன்வசதி, அங்காடி வசதி இல்லாததாலும், நிலத்தை உழுபவருக்கு அதனை அபிவிருத்தி செய்யம் எண்ணமே வருவதில்லை.

3. தொழில் நுட்பக் காரணங்கள்:

1. மிதமிஞ்சிய மனிதசக்தி:

இந்தியாவில் விவசாயத்தில் மிதமிஞ்சிய மக்கள் கூட்டம் உள்ளது. வேளாண்மையிலும் அது தொடர்புடையவற்றிலும் 67மூ மக்கள் ஈடுபட்டுள்ளனர். தனிமனிதக் கணக்கில் நிகர விதைக்கப்பட்ட நிலத்தின் அளவு குறைந்துள்ளது. விவசாயத்தில் ஈடுபட்டுள்ளோரில் 25மூ மக்கள் உபரியாக உள்ளனர். அவர்கள் மறைமுக வேலையில்லாதோர் பட்டியலில் வருகின்றனர். அவர்கள் விவசாய வருமானத்தைக் குறைக்கின்றனர். இதனால் உற்பத்தித்திறன் குறைவாக உள்ளது.

குறிப்பு

2. நிலமில்லாத பணிகள் குறைவு:

நிலத்திற்கு அப்பாற்பட்ட பணிகளான நிலவசதி, அங்காடி வசதி முதலியன இல்லாமையால் விவசாய உற்பத்தித்திறன் குறைந்துள்ளது. அதிக வட்டி விதிக்கும் வட்டிக்கடைக்காரர்கள், வேளாண்மைக்கு தேவையான நிதியில் பெரும்பகுதியை இன்னும் அளித்த வருகின்றனர். விவசாயப் பொருட்களின் விலையில் 50மூ தான் உழுபவருக்குச் செல்கிறது. மற்றையவை இடைத்தரகர்களுக்கே சென்றுவிடுகிறது. பொதுவாக இந்திய விவசாயிகள் குறைவான தரமுள்ள விதைகளையே பயன்படுத்துகின்றனர். பழைய, திறமையற்ற முறைகள் உற்பத்தியைப் பாதிக்கின்றன. இரும்புக்கலப்பை, மாடு நீரை இரைப்பதில் பழைய முறை முதலியன இன்னும் நிலவுகின்றன. நீர் பற்றாக்குறையாகவே உள்ளது. உறுதி செய்யப்பட்ட நீர்ப்பாசன வசதி குறைவு. மேலும் வேளாண்மையில் முதலீடு செய்வதைக் காட்டிலும், வணிகம், வட்டிக்குக் கடனளித்தல், வீடு, நிலம் வாங்குதல், தங்கம், வெள்ளியில் முதலீடு செய்தல் முதலியன சிறந்ததாகக் கருதப்படுகிறது. நிலச் சீர்திருத்தம் மெதுவாகவே அமுல்படுத்தப்படுகிறது. நிலவுடைமையில் உறுதியின்மை இருப்பதால் விவசாயத்தில் முதலீடு செய்யப்படுவது தடுக்கப்படுகிறது. இதனால் உற்பத்தி குறைகிறது. இந்திய வேளாண்மை ஆராச்சிக்குழு, வேளாண்மைப் பல்கலைக்கழகங்கள் முதலியன வேளாண்மை ஆராய்ச்சித்துறையில் சிறந்த பணியாற்றி வருகின்றன எனினும் பரிசோதனைச் சாலைக்கும் (விவசாயப் பண்ணைக்கும் இடையே மிகக் குறைவான இணைப்பே உள்ளது.

4.சமுதாயப் பொருளாதாரக் காரணிகள்:

கீழ்க்கண்ட சமூக பொருளாதாரக் காரணங்களும் இந்தியாவில் குறைவான உற்பத்தித் திறனுக்குத் காரணங்களாகும்.

குறிப்பு

**1. அறியாமை, கல்வியறிவின்மை**

விவசாயிகளின் அறியாமை, கல்வியறிவின்மை, பழைய நோக்கு முதலியன விவசாயம் தேக்க நிலையடையக் காரணங்கள் இந்தியாவில் விவசாயம் வாழ்க்கைக்கு ஒரு வழியாக மட்டும் உள்ளது. அது லாபகரமான தொழிலாக நடத்தப்படவில்லை. பிழைப்பிற்காக மட்டுமே அது தொடரப்பட்டு வருகிறது.

**2. தனிமனிதர் நடத்தும் தொழில்:**

விவசாயத்தை தனிமனிதர்கள் கைக்கொண்டுள்ளனர். தொழில்களில் இருக்கும் கூட்டு நிறுவன அமைப்பு விவசாயத்தில் இல்லை.

**3. துணைத் தொழிலின்மை:**

மேலை நாடுகளில் வேளாண்மை என்பது பெரும்பாலும் துணைத் தொழில்களான பால்பண்ணை, கோழிப்பண்ணை முதலிய வற்றோடு இணைக்கப்பட்டே செயல்படுத்தப்படுகிறது. ஆனால் இந்தியாவில் உழவர்கள் நிலத்தையே நம்பியுள்ளனர். எனவே ஆண்டில் பெரும்பகுதி நாட்களில் அவர்களுக்கு வேலையில்லை.

**தீர்க்கும் வழிகள்:**

இந்தியாவில் விவசாயத்தில் உள்ள தீமைகளைச் சரிசெய்ய தீவிர நிறுவன, தொழில் நுட்ப, நிர்வாக மாற்றங்கள் தேவைப்படுகின்றன.

1. நீர்ப்பாசன வசதிகள் விரிவாக்கப்பட வேண்டும். தண்ணீர் தேங்கி நிற்பதையும், மண் அரிப்பையும் விலக்க முயற்சி மேற்கொள்ளப்பட வேண்டும்.
2. நிலங்கள் பிரிக்கப்படுவதும் துண்டாடப்படுவதும் நிறுத்தப்பட வேண்டும். கூட்டுறவு முறை விவசாயம் பின்பற்றப்பட வேண்டும்.
3. குத்தகைச் சட்டங்கள் அமுலாக்கப்பட வேண்டும்.
4. மற்ற துறைகளில் வேலை வாய்பப்பைப் பெருக்கி நிலத்தை நம்பி வாழ்வோர் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டும்.
5. நிதி வசதி, அங்காடி வசதி, வீரிய விதைகள், உரம், பயிர் பாதுகாப்பு முறைகள் கையாளப்படவேண்டும்.
6. சிறந்த எந்திரங்கள், கருவிகள் முதலியவற்றைப் பயன்படுத்தினால் விளைச்சல் அதிகரிக்கும்.
7. அரசின் உதவி ஊக்கத்தையும், சக்தியையும் அளிக்கும் ஆராய்ச்சிக்கு உறுதுணை புரியும்.
8. விவசாயப் பொருட்களின் விலை போதுமானதாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் விவசாயத்தில் தொடர்ந்து ஈடுபடமுடியும்.

9. உழவர்கள் வேளாண்மையோடு, அது தொடர்புடைய நடவடிக்கைகளிலும் ஈடுபடவேண்டும்.

எனவே விவசாய உற்பத்தித் திறனைப் பெருக்குவது என்பது உழவர் கூட்டுறவுச் சங்கங்கள், நிதிநிறுவனங்கள், அரசு இவர்களின் கைகளில் உள்ளது. இவை அனைத்தும் இணைந்து செயலாற்ற வேண்டும்.

## 1.5 உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

குறிப்பு

1. வேளாண்மை என்பது ஒரு வாழ்க்கை முறையாகும். விதை விதைப்பது, களை எடுப்பது, அறுவடை செய்வது போன்ற நடவடிக்கைகளை அது உள்ளடக்கியது. விவசாயி பல நேரங்களில், தன் சொந்தத் தேவையை நிறைவு செய்ய பயிரை வளர்க்கிறார். சில நேரங்களில் அவர் பல பொருளையும் மற்றவர்களிடம் விற்கும் பொருட்டு பயிரிடுகிறார். விவசாயத்தில் பல பொருட்கள் கூட்டுப் பொருட்களாகவே அமைகின்றன.

**2.** நீண்டகாலம் பிடிக்கக்கூடியது: இயற்கையின் பங்கு மேலோங்கி இருத்தல் 3)குறைந்துசெல் விளைவு விதி வேளாண்மையில் விரைந்து செயல்படுகிறது 4) நிறைவுப் போட்டி நிலவுதல் அ) வேளாண்மைத் துறை பல்வேறுபட்டு இருத்தல் ஆ) பல்வேறு பயிர்கள்:இ) மற்ற விதங்களில் வேறுபாடுஈ) ஓரளவு வாணிப பயிர் செய்யும் முறை
உ) நிலங்கள் சமமற்ற முறையில் பகிர்ந்தளிக்கப்படுதலும் சிறிய விவசாயிகள் அதிகமாக இருத்தலும் ஊ) ஏழ்மை நிலவுதல் எ) விவசாயிகள் அதிக கடன்படுதல் ஏ) குறைவான உற்பத்திதிறன்.ஐ) பெருமளவு வேலையின்மையும் வேலைக்குறைவும்.

# அலகு - 2 பயிா் முறை



குறிப்பு

## 2.1 நோக்கங்கள்

1. பயிா் முறை முக்கியத்துவம் தெரிந்து கொள்ள
2. ஐந்து ஆண்டு திட்டத்தின் கீழ் விவசாய வளா்ச்சி மற்றும் பசுமைபுரட்சிபற்றி அறிந்து கொள்ள

## 2.2 பயிரிடும் அமைப்பு அல்லது மூறை

பயிா் செய்யும் மாதிரி என்பது ஒரு குறிப்பிட்ட காலத்தில் பல்வேறு பயிா்களுக்கான நிலப்பரப்பின் விகிதம் ஆகும். பயிா் செய்யும மூறையில் மாற்றம் என்பது பயிா்களுக்கான பரப்பளவின் விகிதத்தில் ஏற்படும் மாற்றத்தை குறிப்பிடுகிறது. இந்தியாவில் பல்வேறு பயிா்கள் வளா்க்கப்படுகின்றன.

**பயிா்செய் மாதிரியைப் பாதிக்கும் காரணிகள்** (Factors affecting cropping pattern)

வேளாண்மையில் பயிா்செய் மாதிரி என்பது தனிப்பட்ட பண்ணைகளில் விவசாயிகளது பயிா்செய் உரிமைகளை அடிப்படையாகக் கொண்டது. எந்தப் பகுதியிலும் பயிா்செய் மாதிரி என்பது சோதனைகள் மற்றும் விருப்பத்தக்க முறையில் சரிப்படுத்துவதின் விளைவாக அமைவது ஆகும். பயிா்செய் மாதிரியை கீழ்க்கண்ட காரணிகள் பாதிக்கின்றன.

**1. பருப்பொருள் சாா்ந்த மற்றும் தொழில்நுட்ப காரணிகள்:**

எந்தப் பகுதியின் பயிா்செய் மாதிரியும் நிலம், தன்வெட்பநிலை, பருவநிலை, மழை அளவு முதலிய பருப்பொருள் சாா்ந்த இயல்புகளை அடிப்படையாக கொண்டது. உலா்ந்த பகுதிகளில் பருவமழை உறுதியாக இல்லை. இப்பகுதிகளில் கம்பு, கேழ்வரகு, சோளம் போன்றவற்றை மக்கள் அதிகம் நம்பி உள்ளனா். இவற்றிற்கு அதிகத் தண்ணீா் தேவையில்லை. பஞ்சாபிலுள்ள லூதியானா மற்றும் சங்குரூா் மாவட்டங்களின் சில பகுதிகளில் தண்ணீா் தேங்கிருப்பதால் நெல்

சாகுபடியின் பரப்பளவு அதிகரித்துள்ளது. காரணம் மற்ற பயிர்களைக் காட்டிலும் அரிசி கூடுதல் தண்ணீரை ஈர்த்துக் கொள்ள முடியும்.

பயிர்செய் மாதிரி நீர்ப்பாசன வசதிகளின் இயல்பையும் கிடைக்கக்கூடிய நிலையையும் பொறுத்தது. பாசன வசதி உடைய பரப்பளவுகளில் அரிசி, சணல், கரும்பு மற்றும் புகையிலை பயிரிடப்படுகின்றன. பயிர்செய் மாதிரியை நிலம் பாதிக்கிறது. மணற்பாங்கான நிலத்தில் பயிரிட முடியாது. வண்டல்மண் படிந்த நிலத்தில் கோதுமை, அரிசி, கரும்பு, சணல் புகையிலை முதலியன பயிரிடப்படலாம். கருப்பு நிலத்தில் பருத்தி, கோதுமை முதலியன பயிர் செய்யப்படலாம். கொய்னா மரம் (Cinchona) காபி ரப்பர் போன்றவற்றிற்கு சிறப்பான நிலம் தேவைப்படுகிறது.

குறிப்பு

**2. வரலாற்று அடிப்படையிலான காரணிகள்:**

பயிர்செய் மாதிரியை உருவாக்குவதில் காலங்காலமாக நிலவி வந்த நில உரிமை முறை ஒரு முக்கிய காரணியாக உள்ளது. ரயத்துவாரி முறையில் ஒரு சிறிய விவசாயி, சொந்த நிலத்தை வைத்திருப்பவா் தன்னால் முடிந்தவற்றை உற்பத்தி செய்கிறார் தன் நுகர்வுக்கான உற்பத்திக்கு முன்னுரிமை கொடுக்கிறார். மாறாக, ஜமீன்தாரா் முறையில் தனக்கு மனநிறைவு தருகிற பயிர்செய் மாதிரியை நிர்ணயம் செய்கிறார்.

**3. சமுதாயக் காரணிகள்:**

மக்கள் தொகையின் அடர்த்தி, பழக்கவழக்கங்கள், மரபுகள், பருப்பொருள் பற்றிய மனப்போக்கு, மாற்றத்திற்கான விருப்பமும் திறனும் போன்ற சமுதாயக் காரணிகள் பயிரிடப்படும் பயிர்களின் வகையின் மீது முக்கிய தாக்கத்தை உண்டு பண்ணுகின்றன. விடுதலைக்கு முன்னர் விவசாயி விதியை நம்புவராகவும் மரபுவழி வந்தவராகவும் இருந்தார். இதனால் வழிவழி வந்த பயிர்செய் முறையை விவசாயி தொடர்ந்து கடைப்பிடித்தார். விடுதலைக்குப் பின் சில மாற்றங்கள் தோன்றின. இதன் காரணமாக சில பயிர்களுக்கான நிலப்பரப்பில் மாற்றம் ஏற்பட்டது. இது நவீன இடுமானம், புதிய அறிவு மற்றும் விவசாய நடவடிக்கைகளில் புதிய வசதிகள் ஆகியவற்றின் மூலம் விளையும் நன்மைகளை எடுத்துக்கொள்ளும்.

**4. பொருளாதார காரணிகள்:**

ஒரு நாட்டில் பயிர்செய் மாதிரியை தீர்மானிப்பதில் முக்கியமானது பொருளாதார தூண்டுதல்களே. பொருளாதார காரணிகளில் கீழ்க்கண்டவற்றை குறிப்பிடலாம்.

குறிப்பு

**அ) விலை மற்றும் வருமான உச்சபட்ச நிலை:** ஏக்கர் மாற்றங்களுக்கு கொண்டு செல்வதில் விலை வேறுபாடுகள் முக்கியப் பபங்கு வகிக்கின்றன. இரண்டு வழிகளில் பயிர்செய்யும் ஏக்கர் பரப்பளவை விலைகள் பாதிக்கின்றன. 1. ஊடு பயிர்கள் பயிரிடும்போது அவற்றில் தோன்றும் விலை வேறுபாடுகளால் பல்வேறு பயிர்களுக்கு ஒதுக்கப்படும் ஏக்கர் அளவில் மாற்றம் ஏற்படலாம். 2. அதிக விலை மட்டத்தைக் காட்டிலும் நிலையான விலை மட்டத்தை பராமரிப்பதனால் உற்பத்தியாளர் உற்பத்தியைப் பெருக்க ஊக்கம் பெறுகிறார். அதோடு வருமானப் பெருக்க வாய்ப்பு பயிர்செய் மாதிரியில் அதிகச் செல்வாக்குடையதாக உள்ளது. பயிர்களின் எந்தக் கலவையில் அதிக வருவாய் கிடைக்கிறதோ அதைத் தான் விவசாயி தேர்தெடுக்கிறார்.

**ஆ) பண்ணை அளவு:** பண்ணையில் அளவும் பயிர்செய் மாதிரியை பாதிக்கிறது. சிறிய விவசாயிகள் முதன்முதலில் தங்கள் தேவைக்கு வேண்டிய உணவுதானியங்களை உற்பத்தி செய்வதில் ஆர்வம் கொண்டுள்ளனர். தங்கள் தேவையை நிறைவேற்றிய பின்னர் தான் பணப்பயிருக்கு அவர்கள் செல்கின்றனர். எனவே சிறிய அளவிலேயே நிலத்தை பணப்பயிருக்கு ஒதுக்குகின்றனர். ஆனால் உத்திரப் பிரதேசத்தில் தோரியா மாவட்டத்தில் அண்மையில் செய்யப்பட்ட ஆய்வின்படி சிறிய பெரிய விவசாயிகள் உட்பட எல்லா விவசாயிகளும் ஓரளவு பணப்பயிர் வளர்க்க முயற்சி செய்கின்றனர்.

**இ)இடருக்கான காப்பீடு:** பயிர்கள் வளராத இடரைக் குறைக்க, பல்வகைப்படுத்தும் முறை கையாளப்படுகிறது. திணை, சாமை போன்றவை பருவநிலை பொய்த்த காலங்களில் வறண்ட பகுதிகளில் பயிரிடப்படுகிறது. தீங்கான பருவங்களில் காப்பீடாக இது கையாளப்படுகின்றன.

**ஈ) இடுமானம் கிடைத்தல்:** பயிர்செய் மாதிரியை விதை, உரம், தண்ணீர் சேகரிப்பு, அங்காடி, போக்குவரத்து, தொடர்பு வசதி முதலியனவும் பாதிக்கின்றன.

**உ) நில உரிமைகள்:** பயிர்ப் பங்கீடு முறையின் கீழ் பயிர்செய் மாதிரியைத் தேர்தெடுப்பதில் நிலவுடைமையாளருக்கு அதிக கருத்துக் கூறும் உரிமை உள்ளது. வருமானத்தை உச்ச அளவினதாக்கும் பயிர்செய் முறைகளை கையாள இது உதவுகிறது.

5. **பூச்சிக் கொல்லிகள் மற்றும் நோய்கள்:** பூச்சிக் கொல்லிகள் மற்றும் நோய்கள் பாதிக்காத, சுற்றுச்சூழலுக்கேற்ற பயிர்களையே பொதுவாக விவசாயி பயிர் செய்கிறார்.

6. **தொழில்நுட்பத்தின் செல்வாக்கு:** பயிர்செய் மாதிரியை உற்பத்தியின் நவீன தொழில்நுட்பம் பாதிக்கிறது. பசுமைப் புரட்சி தொடங்கிய காலத்திலிருந்து பயிர்செய் மாதிரி பெருமளவு மாறியுள்ளது. வீரியரக வித்துக்கள், நீர்ப்பாசனம், ரசாயன உரம் மற்றும் எந்திரங்களைப் பயன்படுத்தல் போன்றவை பலவகைப் பயிர்களை அடிப்படையாக அமைகிறது.

குறிப்பு

7. **அரசின் கொள்கை:** பல்வேறு பயிர்களுக்கு அளிக்கப்படும் முன்னுரிமை, ஏற்றுமதி, வரிகள், கடன் அளிப்பு, பின் தங்கிய பகுதியை வளர்த்தல் போன்றவை பயிர்களின் தன்மையையும், அவற்றுக்கான பரப்பளவையும் தீர்மானிக்கின்றன. அரசின் கொள்முதல் விலைகள், ஆதரவு விலை போன்ற அரசின் சிறப்பு வசதிகள் விவசாயிகளுக்கு அளிக்கப்பட்டதால் பயிர்செய் மாதிரியில் மாறுதல் ஏற்பட்டுள்ளது.

**இந்தியாவில் பயிர்செய் மாதிரி** (Cropping Pattern in India)

இந்தியாவின் பயிர்செய் மாதிரியின் முக்கிய இயல்புகள் வருமாறு:

1. பயிர்களின் வியக்கத்தக்க வகைகள்
2. உணவு அல்லாத பயிர்களை ஒப்பிடுகையில் உணவுப் பயிர்களின் மேலோங்கிய நிலை.

**பயிர்களின் வியக்கத்தக்க வகைகள்** (Amazing Variety of Crops):

இந்தியாவின் பரப்பளவு அதிகம். இயற்கை வளங்கள் ஏராளம். தட்பவெட்ப நிலை பல்வேறு இடங்களில் பல மாதிரியாக உள்ளது. மண்ணில் இயற்கை வளம் உள்ளது. இதனால் பலவற்றை உற்பத்தி செய்ய முடிகிறது. மிதமான வெப்ப மண்டலத்தில் உற்பத்தியாகும் வெப்பமண்டலப் பொருட்கள் அரிசி, காபி, கரும்பு, சணல், சின்கோனா, வாசனைத் திரவியங்கள், ரப்பர், பைன் ஆப்பிள் வாழைப்பழம் முதலியன ஆகும். ஏறத்தாழ வெப்பமண்டலத்தில் உள்ள முக்கியப் பயிர்கள் பருத்தி, கஞ்சா மற்றும் தேயிலை முதலியன. மிதமான தட்பவெட்ப நிலையில் கோதுமை, சோளம், வாற் கோதுமை, பருப்பு வகைகள், கம்பு, தினை, சாமை, உருளைக்கிழங்கு சணல் செடி வகை மற்றும் சணல்

நார், நார்த்தை போன்றவை. மேலும் பல சில்லரைப் பொருட்களான எண்ணெய் வித்துக்கள், மரம், கோந்து, நீலச்சாயம் போன்றவையும் உற்பத்தி செய்யப்படுகின்றன. இவ்வாறு இந்தியாவில் பயிர் செய் மாதிரியில் வியக்கத்தக்க வகையிலான பயிர்கள் உள்ளதைப் பார்க்கிறோம்.

குறிப்பு

**உணவல்லாத பயிர்களை ஒப்பிடுகையில் உணவுப் பயிர்கள் மேலோங்கியிருத்தல்** (Dominance of Food over Non- Food Crops):

ஒரு தனித்தன்மையான இயல்பு யாதெனில் மொத்தம் பயிரிடப்பட்ட பரப்பளவில் மூன்றில் இரண்டு பகுதி உணவுப் பயிரின் கீழ் உள்ளது. இது பல மில்லியன் மக்களுக்கும், கால்நடைகளுக்கும் உணவளிக்க உதவுகிறது.

உணவு உற்பத்தி மூன்று பயிர்களையே பெருமளவு ஒருமுனைப்படுத்துகிறது. அதாவது அரிசி, திணை, சாமை மற்றும் கோதுமையுடன் கொஞ்சம் சோளம், பார்லி முதலியன. விதைக்கப்பட்ட பரப்பளவில் இவை 71 சதவிகிதம் ஆகும். பரப்பளவில் அடுத்தது பருப்பு வகை வருகிறது. தண்ணீர் அளிப்பைப் பொறுத்து பயிர் வினியோகம் நடைபெறுகிறது. அரிசி, சணல், தேயிலை மற்றும் கரும்புக்கு அதிக தண்ணீர் அளிப்பு வேண்டும். எனவே அதிக மழை பெய்யும் இடங்களில் அவை பயிரிடப்படுகின்றன. இதற்கு மறுதுருவத்தில் வருவது திணை, சாமை மற்றும் குறுகிய இழை பருத்தி இவை உலர்ந்த நிலையிலும், குறைவான மழைப் பகுதிகளிலும் பயிரிடப்படுகின்றன. இவை இரண்டுக்கும் இடைப்பட்டதாக கோதுமை, பருப்பு வகைகள், எண்ணெய் வித்துக்கள், நீண்ட இழைப் பருத்தி முதலியன வருகின்றன. இவற்றிற்கு மிக அதிக தண்ணீர் தேவையில்லை, நியாயமான அளவு தண்ணீர் போதுமானது. இவை எல்லாவற்றிலும், அரிசி மிக முக்கியப் பயிராகும். இது மொத்தம் பயிரிடப்பட்ட பரப்பளவில் 23 சதவிகிதம் அளவுடையதாக உள்ளது. அரிசி வளையம் (Rice Belt) அஸ்ஸாம். மேகாலயா, மேற்கு வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா, ஆந்திரப் பிரதேசம், தமிழ்நாடு, கேரளா போன்றவற்றை உள்ளடக்கியுள்ளது. தட்பவெட்பச் சூழ்நிலை, நுகர்வோர் விருப்பம், நல்ல வருவாய் முதலியவை காரணமாக அரிசி முக்கியமாக உள்ளது.

தேங்காய், பனை, வெத்திலைக் கொடி, பாக்குமரம் போன்றவை அரிசி போன்றே அமைகின்றன. அதோடு வெட்பநிலைப் பழங்கள், மாம்பழம், வாழைப்பழம், வாசனைத் திரவியங்கள் முதலியனவும் இம்மாதிரியை ஒத்து அமைகின்றன.

குறிப்பு

அரிசிக்கு அடுத்து, திணை, சாமை போன்றவை பொதுவான முக்கிய உணவுகள். கேழ்வரகு, கம்பு போன்றவை வரட்சியைத் தாங்கக் கூடியவை. அவை தக்காணப் பிரதேசத்திலுள்ள மலைப் பகுதிகளிலும் வடமேற்குப் பகுதிகளில் உள்ள மலைகளிலும் பயிரிடப்படுகின்றன. ராஜஸ்தான், மஹாராஷ்டிரா, குஜராத் மற்றும் கர்நாடகாவில் இப்பயிர்கள் மொத்த நிலப்பரப்பில் 45 சதவிகிதம் அளவிற்கு பயிரிடப்படுகின்றன. இந்தியாவில் நிகர பயிரிடப்பட்ட பகுதியில் 60 சதவிகிதம் அளவிற்கு பாசன வசதியே கிடையாது.

தண்ணீர்த் தேவையில் அரிசிக்கும், சாமை, திணைக்கும் இடைப்பட்டதாக கோதுமை அமைகிறது. அது அதிக வெப்பத்தை தாங்காது. அது மத்தியப் பிரதேசம், குஜராத், மஹாராஷ்டிரா, பஞ்சாப், ஹரியானா, வடக்கு ராஜஸ்தான், மேற்கு உ.பி போன்றவற்றின் பகுதிகளில் பயிரிடப்படுகிறது. மலைப்பழங்கள், வால்நட், சீமை வாதுமைப்பழம், பேரிக்காய், திராட்டைப்பழம், முலாம்பழம் முதலியவை கோதுமை மண்டலத்தில் பயிரிடப்படுகின்றன. அவை வடக்குப் பகுதியிலும், மலைப் பகுதிகளிலும் காணப்படுகின்றன.

மேலும் மிக அதிகமான பரப்பளவு புகையிலை, உருளைக்கிழங்கு, பழங்கள், காய்கறிகள், தேயிலை, காபி, ரப்பர் மற்றும் தென்னை போன்றவற்றை உள்ளடக்கியுள்ளது. ஆனால் மொத்த பயிரிடப்பட்ட பகுதியில் இவற்றின் பங்கு மிகக் குறைவு.

மொத்தம் பயிரிடப்படும் பரப்பளவில் உணவுப் பயிர் அல்லாதவற்றுக்கான நிலத்தின் அளவு 35 சதவிகிதம் அதிகரித்தாலும், உணவு தானியத்திற்கான பரப்பளவே பயிர்செய் மாதிரியில் இன்றும் இந்தியாவில் அதிகமாக உள்ளது.

## 2.3. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. ஐந்தாண்டுத்திட்டம் எப்பொழுது தொடங்கப்பட்டது?
2. பசுமைப்புரட்சி என்றால் என்ன?

**பொதுவான கருத்துரைகள்:**

1. மக்களது நுகர்வுத் தேவை அதிகமாகி இருப்பதால் இருக்கின்ற எல்லாப் பயிர்களின் உற்பத்தியும் அதிகரிக்கப்பட வேண்டும்.
2. அதிக மதிப்புள்ள வணிகப் பயிர்களுக்கு மாற வேண்டும். இதனால் உற்பத்தியின் மதிப்பு கூடுதலாகும்.

3. வெளிநாட்டுத் தேவை உள்ள பயிர்களின் உற்பத்தி பெருக்கப்பட வேண்டும்.
4. மட்டரக தானியங்களுக்கான தேவை குறையும். காரணம் மக்களின் வருமானம் பெருகி வருகிறது. எனவே மட்டரக தானியங்களுக்கான நிலப்பரப்பை குறைத்துக் கொண்டு உயர்ந்தரக தானியங்களுக்கான பரப்பளவை அதிகப்படுத்தலாம்.

குறிப்பு

## 2.4 ஐந்தாண்டு திட்டத்தில் கீழ் விவசாய வளர்ச்சி

**முதல் ஐந்தாண்டுத் திட்டம் 1951-1956**

1. விவசாயத்துறைக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டது.
2. வேளாண்மை தவிர நீர்ப்பாசனம், மின்உற்பத்தி, போக்குவரத்து தொழில்துறைக்கு முக்கியத்துவம் தரப்பட்டது.

**முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் கட்டப்பட்ட முக்கிய அணைகள்**

தாமோதர் அணை, ஹிராகுட் அணை, பக்ராநங்கல் அணை, கோசி அணை, சம்பல் அணை, நாகஅர்ஜீனா அணை, மயூராக்ஸி அணை போன்றவை.

**இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் 1956-1961**

முக்கியத்துவம் தரப்பட்டத் துறை தொழில்துறை

**மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் 1961-1966**

முக்கிய நோக்கம் தற்சார்பு திட்டமாகும்.

சீனர் படையெடுப்பு பாகிஸ்தான் போர், பஞ்சம் போன்ற காரணங்களால் மூன்றாம் ஐந்தாண்டுத் திட்டம் படுதோல்வியடைந்தது.

**ஆண்டுத் திட்டம் 1966-1969**

இந்த திட்டத்தில் பசுமை புரட்சி அறிமுகப்படுத்தப்பட்டது. இதில் விவசாயம், நீர்பாசனம் மற்றும் தொழில்துறைக்கு முக்கியத்துவம் தரப்பட்டது.

**நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் 1969-1974**

இதனுடைய குறிக்கோள் நிலையான வளர்ச்சி மற்றும் தன்னிறைவு.

பங்காளதேஷ் அகதிகள் வருகை, பணவீக்கம் உயர்தல் ஆகியவற்றால் இத்திட்டம் தோல்வியடைந்தது.

**ஐந்தாம் ஐந்தாண்டுத் திட்டம் 1974-1979**

1. முக்கிய குறிக்கோள் வறுமையை ஒழித்தல்
2. இந்திராகாந்தி அவர்களால் 20 அம்ச திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.
3. கரிபீ ஹட்டாவோ என்ற வறுமை ஒழிப்புத் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.
4. ஊரக வளர்ச்சி திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.

குறிப்பு

**சுழற்சி திட்டம் 1978-1980**

1. இது ஜனதா அரசு திட்டம்
2. விவசாயத்திற்கு முக்கியத்துவம் தரப்பட்டது.
3. குடிசை மற்றும் சிறுதொழிலை மேம்படுத்துதல் குறைந்தபட்ச வருமானம் பெறுவோர்க்கு முக்கியத்துவம் தரப்பட்டது.

**ஆறாம் ஐந்தாண்டுத் திட்டம் 1980-1985**

வருமான ஏற்றத் தாழ்வுகளை குறைப்பதன் மூலம் வறுமையை அகற்றுதல் குறைந்தபட்ச தேவைத்திட்டமும் ஒருங்கிணைந்த கிராம வளர்ச்சி திட்டமும் கொண்டுவரப்பட்டன.

**ஏழாம் ஐந்தாண்டுத் திட்டம் 1985-1990**

1. இதனுடைய நோக்கம் உணவு வேலைவாய்ப்பு உற்பத்திதிறன் தற்சார்பு ஆகியவற்றை பெருக்குதல்.
2. இந்தத்திட்டத்தில் தேசிய ஊரக வேலைவாய்ப்பு திட்டத்தையும் ஊரக நிலமற்றோர் வேலைவாய்ப்பு திட்டத்தையும் இணைத்து ஜவஹர் ரோஜ்கர் யோஜனா திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.
3. வேலைக்கு உணவு திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.

**ஆண்டுத்திட்டம் 1990-1992**

இந்த திட்டத்தில் சமூக மற்றும் வேலைவாய்ப்புக்கு முக்கியத்துவம் தரப்பட்டது.

**எட்டாம் ஐந்தாண்டுத் திட்டம் 1992-1997**

1. இதனுடைய நோக்கம் முழு வேலைவாய்ப்பு தொடக்கக்கல்வி மனிதவள மேம்பாடு மக்கள் தொகை கட்டுப்பாடு வேகமான பொருளாதார வளர்ச்சி அடைதல்

2. இந்த திட்டத்தில் புதிய பொருளாதார கொள்கை நடைமுறைப்படுத்தப்பட்டது. பிரதம மந்திரி ரோஜ்கர் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.

**ஒன்பதாம் ஐந்தாண்டுத் திட்டம் 1997-2002**

1. இந்ததிட்டத்தின் நோக்கம் வேளாண்மை கிராம வளர்ச்சி வறுமை ஒழிப்பு மற்றும் 2004-க்குள் முழு கல்வி தருதல்.
2. இந்த திட்டத்தின் முக்கிய கொள்கை வளர்ச்சியுடன் கூடிய சமநீதி மற்றும் சமத்துவம்.
3. இந்த திட்டத்தில் சர்வ சிக்ஷ அபியான் என்ற திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.

குறிப்பு

**பத்தாம் ஐந்தாண்டுத் திட்டம் 2002-2007**

1. இந்த திட்டத்தின் முக்கிய நோக்கம் நேரடி அந்நிய முதலீடு, தொழிலாளர் முன்னேற்றம், பொருளாதார சீர்திருத்தங்கள் மற்றும் கிராம வளர்ச்சி
2. தலா வருமானத்தை பத்து ஆண்டுகளுக்குள் 2 மடங்கு அதிகரித்தல்.

**பதினோறாவது ஐந்தாண்டுத் திட்டம் 2007-2012**

1. மொத்த உள்நாட்டு உற்பத்தியை 8 முதல் 10 சதவிகிதம் அதிகரித்தல்
2. வேளாண்மை உற்பத்தியை ஆண்டுக்கு 4 சதவிகிதம் அதிகிரித்தல்
3. 70 மில்லியன் புதிய வேலைவாய்ப்பை உருவாக்குதல்
4. வறுமையை 10 சதவிகிதம் குறைத்தல்.

**பனிரெண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் 2012-2017**

1. மொத்த உள்நாட்டு வளர்ச்சியை 8 சதவீத மாக்குதல்
2. விவசாயத் துறை வளர்ச்சியை 4 சதவிகிதம் ஆக்குதல்
3. உற்பத்தித்துறை வளர்ச்சியை 7 சதவிகிதம் ஆக்குதல்
4. 10 சதவிகித வறுமையை ஒழித்தல்
5. 50 மில்லியன் வேலைவாய்ப்பு உருவாக்குதல்.

முதல் ஐந்தாண்டுத் திட்ட தொடக்கத்தில் மொத்த சாகுபடி செய்த 313 மில்லியன் ஏக்கர் நிலத்தில் 515 மில்லியன் ஏக்கர் நிலம் நீர்பாசனம் பெற்று நீர்பாசனத்தை பெருமளவில் பெருக்க வாய்ப்பிருந்தது.

முதல் திட்ட காலத்தில் பெரிய நடுத்தர திட்டங்களினால் 6.3 மில்லியன் ஏக்கர் நிலமும் சிறிய திட்டங்களினால் 10 மில்லியன் ஏக்கர் நிலமும் நீர்பாசன வசதி பெற்றன.

குறிப்பு

1993, 94-ல் 25 சதவீதமாக இருந்த வேளாண்மை உற்பத்தி 2005, 2006-ல் 13.03 சதவீதமாக சரிந்துள்ளது அதே போல் 2001, 02-ல் 76.89 லட்சம் டன்னாக இருந்த உணவு தானிய உற்பத்தி 2004, 05-ல் 61.40 லட்சம் டன்னாக குறைந்துள்ளது.

முதல் ஐந்தாண்டு திட்டத்தில் விவசாயத்திற்கு வழங்கப்பட்ட முதலீடு 15 சதம் .2002-2007-ல் வேளாண்மைக்கு ஒதுக்கீடு செய்தது வெறும் 1.3 சதம். மேலும் சிறப்பு பொருளாதார மண்டலங்கள் என்ற பெயரில் பன்னாட்டு நிறுவனங்களின் படையெடுப்பு வயல்வெளிகளில் வீட்டுமனைகள் தோற்றம் பெற்றமை ஆகியவையும் வேளாண்மைக்கான ஒரு சிக்கலாக உள்ளது .முற்காலத்தில் ஆட்சியின் பெரும் வருவாய் விவசாயத்தில் இருந்து பெறப்பட்டது. இதனால் விவசாயிகளுக்கும் சமூகத்தில் மரியாதை இருந்தது இன்றைய இந்தியாவில் ஆட்சியின் பெரும்பாலான வருவாய் வருமான வரி, தொழில் வரி, சுங்க வரி, விற்பனை வரி என்று வேறு தொழில்களிலிருந்து பெறப்படுகிறது.

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியை அந்த நாட்டின் மொத்த உள்நாட்டு உற்பத்தியை வைத்தே கணக்கிடுவார்கள். மொத்த உள்நாட்டு உற்பத்தி என்பது ஒரு நாட்டில் ஓர் ஆண்டில் உற்பத்தியாகக் கூடிய பண்டங்கள் மற்றும் பணிகளின் மதிப்புகள்தான் ஒரு நாட்டின் பொருளாதாரம் வலுப்பெற, வேளாண்மை, தொழில், கட்டுமானம், சேவைத் துறை ஆகியவற்றின் பங்கு மிகவும் முக்கியம்.

இந்தியாவில் அதிகபட்சமாக 60 சதவீதம் பேர் வேளாண்மைத் துறையை முழுவதுமாகச் சார்ந்து வாழ்கின்றனர். இந்திய விவசாய நிலங்களில் 55 சதவிகித நிலம் வறட்சி மற்றும் நீர்வளம் இல்லாததால் மழையையே விளைச்சலுக்கு நம்பி இருக்கின்றனர்.

மொத்தம் உள்ள 141.23 மில்லியன் ஹெக்டேர் இந்திய வேளாண் நிலைகளில் 77.55 மில்லியன் ஹெக்டேர் நிலங்கள் வறட்சியானவை. பருவநிலை மாற்றம் வீரிய விதைகள் பயன்படுத்தாமை, மண்வளம் மங்கிப்போதல் ஆகியவை முக்கிய சவால்களாக இருக்கின்றன. மக்கள்

தொகை பெருக்கத்தால் உணவு உற்பத்தியின் தேவை உயர்ந்து கொண்டே வருகிறது. 11-வது ஐந்தாண்டு திட்டத்தில் 3.7 சதவீதம் 12-வது ஐந்தாண்டு திட்டத்தில் 4.0 சதவீதம் எனக் குறைந்த வளர்ச்சியையே வேளாண்துறை காட்டுகிறது.

குறிப்பு

வளர்ந்து வரும் இந்தியப் பொருளாதாரத்தில் மக்கள் வேளாண்துறையைச் சார்ந்திருப்பது குறைந்து கொண்டே செல்கிறது. மேலும் உபரி தொழிலாளர்கள் மற்ற துறைகளை நாடிச் செல்கின்றனர். விவசாயத்தை மட்டுமே பிழைப்பாக நம்பி கிட்டத்தட்ட 65 கோடி பேருக்கு மேல் இருக்கும் இந்தியாவில் கடந்த 6 மாதங்களாக தமிழ்நாடு மகாராஷ்டிரா தொடங்கி தற்போது மத்திய பிரதேசம் வரையில் விவசாயப் போராட்டங்கள் வெடித்து வருகிறது.

**இந்தியாவில் விவசாயத்தின் நிலை:**

- இந்தியாவில் மொத்தம் 24.7 கோடி குடும்பங்கள் உள்ளன.
- அதில் 16.8 கோடி குடும்பங்கள் கிராமங்களில் வசிக்கின்றன.
- 9.2 கோடி குடும்பங்கள் விவசாயத்தை மட்டுமே நம்பியே உள்ளன.
- விவசாயத்தில் கிடைக்கும் வருமானம் 7.8 கோடி குடும்பங்களுக்கு போதுமானதாக இல்லை.
- 6.2 கோடி விவசாயக் குடும்பங்கள் 2.5 ஏக்கருக்குக் குறைவான நிலமே வைத்துள்ளன.
- இந்தியாவில் விவசாயத்திற்காக பயன்படுத்தப்படும் நிலங்களின் சராசரி அளவு 4 ஏக்கர்கள்
- உலகில் விவசாயத்திற்காக பயன்படுத்தப்படும் நிலங்களின் சராசரி அளவு 14 ஏக்கர்கள்.
- 26% விவசாயிகள் அதிக வட்டிக்குக் கடன் வாங்கித் தவிப்பவர்கள்
- விவசாயத்திற்கான காப்பீடு 1% மட்டுமே எடுத்துள்ளனர்.

**விவசாயிகளின் முக்கிய பிரச்சனைகள்:**

- விவசாய உற்பத்திப் பொருட்களுக்கான தகுந்த சேமிப்பு வசதிகள் இல்லை.
- பாசன மின்சார வசதிகள் சரிவர இல்லை
- ஒழுங்கற்ற வகையில் கொடுக்கப்படும் உரங்கள்
- சிறு விவசாயிகளுக்கு போக்குவரத்து செலவினால் மேலும் கடன

.

குறிப்பு

மனிதனின் சுயதேவைகளைப் பூர்த்தி செய்யும் எந்த ஒரு பொருளானாலும் விளம்பரத்தின் மூலம் அந்த புதிய தொழில் நுட்பங்களை உடனடியாக மக்களிடம் சென்று சேர்க்கிறார்கள். அதனால் மக்கள் தங்களுடைய வாழ்க்கை முறைக்குத் தேவையான புதிய மாற்றங்களை உடனடியாக ஏற்றுக்கொள்கிறார்கள். அதுவே விவசாயத்தில் புதிய தொழில்நுட்பம் மூலம் கண்டுபிடிக்கப்படும் விதைகள், உரங்கள், விவசாய உபகரணங்கள் பயன்பாட்டில் பல எதிர்ப்புகள் வருகின்றன.

முன்பு ஒரு விவசாயியின் குடும்பத்தில் குறைந்தது 5 முதல் 10 வரை உறுப்பினர்கள் விவசாயத்தை கவனித்து வந்தார்கள். ஒரு வீட்டில் 10 முதல் 20 மாடுகள் வரை இருக்கும். மாட்டுச் சாணம் குப்பைத் தொட்டியில் போட்டு மக்கிய உரம் அந்த வருடத்தில் பயிரிடப்படும் பயிர்களுக்குக் கிடைக்கும். வயல்வெளிகளைச் சுற்றி நிறைய மரங்கள் இருக்கும். புங்கம் வேப்பம் போன்ற மரங்களின் தழைகள் நெல் பயிரிடப்படும் சேற்றில் மிதித்து நெல் நடவு செய்வார்கள்.

இந்த நிலையைத் தற்போதைய விவசாய வல்லுனர்கள் இயற்கை விவசாயம் அங்கக விவசாயம் (Organic Agriculture) என்று பல முறைகளாகக் கூறி வருகிறார்கள். தற்போது இயற்கை விவசாயம் செய்ய வேண்டுமானால், எத்தனை விவசாயிகளிடம் உழவு மாடுகள் உள்ளது அப்படி மாடுகள் இருந்தால் எத்தனை பேர் மாடுகளை வைத்து ஏர் ஓட்டுகிறார்கள் அப்படியே இருந்தாலும் அத்தனை மாடுகளுக்கும் தேவையான தீவனங்கள் கிடைக்கிறதா? எத்தனை விவசாயிகள் ஏர் ஓட்டுவதற்குதத் தயாராக உள்ளார்கள்.

மாறுகின்ற சூழ்நிலைக்கு ஏற்ப விவசாயத்தை மாற்றாவிட்டால் விவசாயிகளின் நிலைமை கேள்விக்குறியாக மாறிவிடும். விவசாயத் தொழில் லாபகரமாக இல்லாமல் போய்விடும். ஒரு காலத்தில் விவசாயம் செய்ய ஆட்களைத் தேட வேண்டிய நிலைக்கு நிச்சயம் செல்ல நேரிடும்.

இயற்கை வேளாண்மையைத் தவறு என்று சொல்லவில்லை மேல் சொன்னவாறு விவசாயத்திற்கு மாடுகள் அவற்றிக்கு தேவையான அங்கக உரங்கள் இருந்தால் அப்படி விளைவிக்கும் பொருட்களுக்கு உண்மையில் கட்டுபடியான விலை கிடைத்தால் கண்டிப்பாக அனைத்து விவசாயிகளும் இயற்கை வேளாண்மையைச் செய்து அனைத்து பொருட்களுக்கும் செயற்கை உரம் போடாமல் பூச்சி மருந்து அடிக்காமல் கொடுத்திருப்பார்கள்.ஆனால் அனைத்துத் துறையிலும் நாம்

உபயோகிக்கும் பொருட்களில் மாற்றங்களை சந்தித்துவிட்டு விவசாயத்தில் மட்டும் இன்னும் பழைய முறையில் செய்யப்படும் இயற்கைஉணவுகள் கிடைக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது எப்படி நியாயம்

குறிப்பு

இந்திய மக்கள் தொகை 125 கோடியைத் தொட்டுவிட்டது. 40 கோடி மக்கள் கொண்ட புதியதாக சுதந்திரம் அடைந்த இந்தியா (1947) வேறு அனைத்து இளைஞர்களையும் விவசாயத் துறையில் இருந்து சாப்ட்வேர் துறைக்கு அனுப்பிவிட்டு வயதான காலத்தில் விவசாய பூமியைப் பார்த்துக் கொண்டு இருக்கும் 2012-ல் உள்ள விவசாயிகள் உள்ள இந்தியா வேறு அப்போது 85 சதவிகிதம் விவசாயத்தை மட்டுமே நம்பி இருந்தனர் நம் மக்கள் ஆனால் தற்போது 65 சதவிகித மக்கள் மட்டுமே விவசாயத்தை நம்பி உள்ளனர்.

**புதிய கிசான் ஸ்வேதா திட்டம்!**

பிரதமர் நரேந்திர மோடி வானிலை, சந்தை நிலை பயிர் பாதுகாப்பு, நிபுணர் ஆலோசனை கிராம வியாபாரிகள் ஆகிய ஐந்து கூறுகளை கொண்ட விவசாய தகவல் வழங்கும் புதிய மொபைல் ஆன்டிராய்டு போனை அறிமுகப்படுத்தினார். இந்தியாவில் இது வரையில் 87 மில்லியன் கிராமப்புற மக்கள் ஸ்மார்ட்போனை பயன்படுத்தி வருகின்றனர். உலகின் இரண்டாவது ஸ்மார்ட்போன் சந்தையாக இந்தியா திகழ்கிறது. இந்தியாவில் உள்ள மக்களில் 60மூ மக்கள் விவசாயத் தொழிலையே செய்து வருகின்றனர். ஆதலால் இது இந்திய பொருளாதாரத்தின் முதுகெழும்பாகவே இருந்து வருகிறது. தற்போது பிரதமர் அறிமுகப்படுத்திய இத்திட்டம் விவசாயிகளுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

தற்போது விவசாயம் சார்ந்த செய்திகள் அனைத்தும் ஸ்மார்ட்போனில் இந்தி மற்றும் ஆங்கிலத்தில் கிடைக்கிறது மேலும் இது பண்ணை ஆலோசனைகளையும் உடனுக்குடன் அளிக்கிறது. நுமபயழெ டெக்னாலஜிஸ் இரண்டு மட்டங்களில் விவசாயத்தின் பிரச்சினை சமாளிக்கும் மகசூல் அதிகரிக்க Ekgaon டெக்னாலஜிஸ் ஒரு கிராமம் மூலம் உலக நெட்வொர்க் ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது மேலும் ekgaon.com ஆரோக்கியமான இயற்கை மற்றும் கரிம உணவினை உற்பத்தி செய்யவும் உதவியாக உள்ளது அதுமட்டுமல்லாது வாடிக்கையாளர்களையும் விவசாயிகளையும் நேரடியாக இணைக்கும் வகையில் நேரடி பண்ணை அமைப்பினை உருவாக்கியுள்ளனர். இச்சேவைக்கு விவசாயி பருவம் ஒன்றுக்கு ரூ.150 செலுத்தினால் போதும்

அனைத்து விவசாய தகவலும் உடனுக்குடன் கிடைக்கும் இத்திட்டத்தின் முக்கிய நோக்கம் விவசாய உற்பத்தியினை அதிகரித்து சாகுபடி செலவுகளை குறைக்க வேண்டும் என்பதாகும்

குறிப்பு

குறு விவசாயிகள் Ekgaon சேவையை 'OneFarm' மூலம் பெற்றுக்கொள்ளலாம் இதன் மூலம் அவர்களுடைய நிலத்திற்கு ஏற்றவாறும் பயிருக்கு ஏற்றவாரும் ஊட்டச்சத்து மேலாண்மை மற்றும் வானிலை, நோய் எச்சரிக்கைகள் மற்றும் சந்தை விலைகள் அத்துடன் முக்கியமான தகவல்களை வழங்குகிறதுகாரிகள் மேலும் உள்;ர் விவசாய அதிபற்றியும் கூறுகிறது Ekgoan ஒவ்வொரு பயிர்விவசாய திட்டமிடல் ஆகியவற்றை உள்ளு;ர் மொழி மூலம் தொலைபேசியில் அறிந்துகொள்ளும் வசதி மற்றும் எஸ்எஸ் வசதிகளும் ஏற்படுத்தி எம்.எஸ் அல்லது எம் ஒரு விவசாயி எஸ் தரப்பட்டுள்ளது நுமபழயபெ எண் அழைப்பு மூலம் ஸ்மார்ட்போன் தயாரிக்கப்பட்டுள்ளது தற்போது இதற்கென்று தமிழ்நாடு மத்தியபிரதேசம் மற்றும் சத்தீஸ்கரில் உள்ள 456 கிராமங்களில் சுமார் 20,000 விவசாயிகள் வேலை செய்து வருகின்றனர்.

இத்திட்டத்தின் மூலம் 10000 விவசாயிகள் விவசாயம் மேற்கொண்டதில் ஏக்கருக்கு சராசரி உற்பத்தி அளவான 12.05 குவிண்டாலை தாண்டி 24.91 குவிண்டால் மகசூல் கிடைத்தது இத்திட்டத்தின் மூலம் ஒரு வருடம் முன்பு ஒரு கிலோ உளுத்தம் பருப்பு 65-க்கு விற்கப்பட்டது. ஆனால் இந்த வருடம் ரூ.80-ற்கு விற்கப்பட்டது ஆண்டுகளில் இத்திட்டத்தின் மூலம் அதிக லாபத்தை கடந்த மூன்று விவசாயிகள் பெற்றுள்ளது ஆய்வுப்படி தெரியவந்துள்ளது தற்போது மேற்கொள்ளப்பட்ட திட்டத்தின் மூலம் விவசாயிகள் நான்கு மடங்கு மேலும் விவசாயிகளே நேரடியாக இலாபத்தை சம்பாதிக்கிறார்கள் கடந்த வழி வகுக்கிறது ஆன்லைன் சந்தையில் நுழையவும் இத்திட்டம் ஆண்டு நுமபழயபெ ஆன்லைன் தொடங்கப்பட்டது தற்போது ஒரே ஆண்டில் 5,000ற்கும் மேற்பட்ட வாடிக்கையாளர்களை கொண்டுள்ளது மேலும் 50-ற்க்கும் மேற்பட்ட பொருட்கள் அங்கு விற்கப்படுகிறது அடுத்த ஐந்து ஆண்டுகளில் சுமார் 15 மில்லியன் விவசாயிகளை உறுப்பினராக்கி அதன் மூலம் விவசாயிகளுக்கு சுமார் ரூ.100 கோடி வருவாயினை பெற்று தருவதே தங்களுடைய லட்சியம் என்று விஜய் பிரதாப் தெரிவித்தார்.

## 2.5.பசுமைப் புரட்சி அல்லது வேளாண்மை உத்தி

**(Green Revolution or New Agricultural Strategy)**

குறிப்பு

1967-68-லிருந்து இந்தியாவில் புதிய வேளாண்மை உத்தி கையாளப்பட்டு வருகிறது. இதனால் விவசாயத்தில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டுள்ளது. இதனையே பசுமைப் புரட்சி என்கிறோம். பசுமைப் புரட்சி என்பது விவசாய நடவடிக்கைகளின் கூட்டு ஆகும். எடுத்துக்காட்டாக 1967-க்குப் பின்னர் உழவர்கள் புதிய பயிர் பாதுகாப்பு முறைகளைப் பின்பற்றினர். அவர்கள் ரசாயன உரம், பூச்சிக் கொல்லிகள் நவீன கருவிகள் முதலியவற்றைப் பயன்படுத்துகின்றனர். நீர்ப்பாசன முறைகளை மாற்றிவிட்டனர். எனவே புதியதொழில்நுட்ப முறை வேளாண்மையில் அமைப்பு மாற்றத்தைக் கொண்டுவரும் என நம்பப்படுகிறது.

**பசுமைப் புரட்சியின் முக்கிய இயல்புகள்**

**1. அதிசய விதைகள்:**

வேளாண்மைப் புரட்சியில் குறிப்பிடத்தக்கது. அதிக விளைச்சல் தரும் விதைகள் ஆகும். இவை கோதுமை, நெல், சோளம், கம்பு, மக்காச்சோளம் போன்றவற்றில் பயன்படுத்தப்பட்டன. இந்திய வேளாண்மை ஆராய்ச்சி நிலையம் மெக்சிகோவிலிருந்து வீரியாக கோதுமை விதைகளை இறக்குமதி செய்தது. புதிய வீரியரக விதைகள் உற்பத்தி செய்யப்பட்டன. அவையாவன : கோதுமையில் கல்யாண மக்காச்சோளம் ர்டீ-1இ விஜ்: அரிசியில் 1சு-8இ 1சு-20இ யுனுவு-27 கரும்பில் ஊழு-1148.

**2. உரம்:**

புதிய வேளாண்மை உத்தி ஒவ்வொரு பயிருக்கும் குறிப்பிட்ட அளவு ரசாயன உரத்தைப் பரிந்துரைத்தது. எனவே ஐந்தாவது திட்டக் காலத்தில் உர நுகர்வு 26 லட்சத்திலிருந்து 35 லட்சம் டன்னாக உயர்ந்தது. நைட்ரஜன் உரம், பொட்டாசிய உரம் பாஸ்பரஸ் உரம் மதலியன அதிகமாகப் பயன்படுத்தப்பட்டன.

**3. பல்வகைப் பயிர் விளைச்சல்:**

குறுகிய காலத்தில் பலன் தரும் விளைச்சல் பயன்படுத்தப்பட்டதால் இருபோகம் மூன்று போகம் விளைச்சல் ஆனது. இதனை பசுமை முக்கோணம் என்கிறோம்.

**4. நவீன கருவிகள்:**

காலம் செல்லச்செல்ல இந்திய விவசாயிகள் நவீன பண்ணைக் கருவிகளான டிராக்டர்கள். அறுவடை எந்திரங்கள்,நீர் இறைவை

இயந்திரங்கன் பம்புசெட் முதலியவற்றைப் பற்றி அறிந்துகொண்டுள்ளனா். பூச்சிக்கொல்லிகள் பயன்படுத்தப்பட்டு பயிர்கள் பாதுகாக்கப்பட்டன. நவீன கருவிகளைப் பயன்படுத்த உழவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டன.

**5. அதிகமான தண்ணீர் பயன்படுத்தப்பட்டமை:**

புதிய உற்பத்தியில் சிறிய நீர்ப்பாசனத்திற்கு முன்னுரிமை கொடுக்கப்பட்டது. நீர்ப்பாசனம் இல்லையேல் வீரியரக வித்துக்களைப் பயன்படுத்தி இருக்க முடியாது. தண்ணீர் வசதி உறுதி செய்யப்பட்ட இடங்களில் தான் இத்திட்டம் செயல்படுகிறது.

**குறிப்பு**

**6. விலை ஊக்கம்:**

பசுமைப் புரட்சியில் விவசாயிகளுக்கு விலைபற்றிய தூண்டுதல் அளிக்கப்பட்டது. பல்வேறு விவசாயப் பயிர்களுக்கு அரசு முன்னதாகவே கொள்முதல் விலையை அறிவிக்கிறது. இது விவசாயிகளுக்கு ஊக்கமளிக்கிறது.

**7. கடனை விரிவுபடுத்துதல்:**

கூட்டுறவுக் கடன் வழங்கும் சங்கங்கள், ஸ்டேட்பாங்க் ஆப் இந்தியா, நிலவளவங்கி முதலிய நிதி நிறுவனங்கள் குறைந்த வட்டியில் விவசாயிகளுக்கு கடன் வசதி அளித்தன.

**இரண்டாவது பசுமைப் புரட்சியில் இயல்புகள்:**

பசுமைப் புரட்சியின் இரண்டாவது கட்டத்தில் இன்று நாம் உள்ளோம். கீழ்க்கண்டவை அதன் சிறப்பியல்புகளாகும்.

1. இதுவரை பசுமைப் புரட்சி பெரிய நிலச் சுவான்தாரர்களுக்கு மட்டுமே உதவியது. இனி அது நடுத்தர விவசாயிகளுக்கும் உதவும்.
2. கிழக்கு உத்தரப் பிரதேசம், பீகார் முதலியவற்றிற்கும் (இது வரை பயன்யடையாதவை) உதவி செய்யப்படும்.
3. மாணவாரி நிலங்களில் புதிய விவசாய முறைகள் கையாளப்படும்.

**பசுமைப் புரட்சியின் தன்மைகள் அல்லது புதிய உத்தியின் தாக்கம்:**

1. பசுமைப்புரட்சியின் விளைவாக 1965-66-ல் 72 மில்லியன் டன்னாக இருந்தது. 1989-90-ன் 170, 6 மில்லியன் டன்னாகியது. அரிசியில் உற்பத்தி 30.6 மில்லியன் டன்னிலிருந்து 74.1 மில்லியன் டன்னாக ஆகியது. கோதுமையின் உற்பத்தி 13.4 மில்லியன் டன்னிலிருந்து 49.7 மில்லியன் டன்னாக அதிகரித்தது. எண்ணெய் வித்துக்கள், பருத்தி முதலியன பெரும் வளர்ச்சியை அடைந்தன.

குறிப்பு

2. ரசாயண உரத்தின் பயன்பாடு அதிகரித்தது. அது 1960-61-ல் 1.9 மில்லியன் கிலோகிராம் இருந்தது. 1989-90-ல் 51 மில்லியன் கிலோகிராமாக அதிகரித்தது.
3. வீரியாக விதைகள் கையாளப்பட்டதால் ஹெக்டேருக்கு 1960-60-ல் 1013 கிலோகிராமாக இருந்த அரிசி விளைச்சல் 1980-90ல் 1756 கிலோகிராமாக் ஆகியது. அதே காலத்தில் கோதுமையின் விளைச்சல் 251 கிலோ கிராமிலிருந்து 2117 கிலோ கிராமாக ஆகியது. கம்பு, மக்காசோளம் முறையே 63% 26% விளைச்சல் அதிகமாகியது.

4. நீர்ப்பாசன வசதி பெற்ற நிலத்தின் அளவு அதிகரித்தது. 1970-71-ல் 38 மில்லியன் ஹெக்டேர் அளவு தான் பாசன வசதி பெற்றது. 1989-90-ல் இது 79.6 மில்லியன் ஹெக்டேராக அதிகரித்தது. பம்பு செட்டுகள் பயன்படுத்தப்பட்டமை 9 மடங்கு அதிகரித்தது.

5. புதிய பயிர்ச் சுழற்சி முறை அறிமுகப்படுத்தப்பட்டது. பயிர் பாதுகாப்பு நடவடிக்கைகள் அறிமுகப்படுத்தப்பட்டன. விவசாயிகளுக்கு அதிகக் கடன் அளிக்கப்பட்டது. முன்னால் வட்டிக்குக் கடன் கொடுப்போர் தான் கிராமக் கடன் கொடுப்போரில் தலையாய இடத்தைப் பெற்றிருந்தனர். ஆனால் இன்று அரசு கூட்டுறவுச் சங்கங்கள், வங்கிகள், மண்டல கிராம வங்கிகள் முதலியனவும் வேளாண்மைக் கடன் அளிக்கின்றன. தேசீய மயமாக்கப்படும் முன்னர். வணிக வங்கிகள் விவசாயத்திற்கு தங்கள் மொத்தக் கடனில் 1% தான் அளித்தன. ஆனால் இன்று 17% க்கு மேல் விவசாயத்திற்குக் கடன் அளிக்கின்றன.

**பசுமைப் புரட்சியின் தோல்விகள் அல்லது திட்டத்திற்கான கண்டனங்கள்:**

1. பசுமைப் புரட்சி முதலாளித்துவ உழவு முறைக்குக் கொண்டு செல்கிறது. பெரிய விவசாயிகள் தான் இந்த உற்பத்தியைக் கையாள முடியும். சராசரி இந்திய உழவர் இவ்வளவு பெரிய அளவில் முதலீடு செய்ய முடியாது. பசுமைப் புரட்சி சமநிலையின்மையை அதிகரிக்கிறது.

2. புதிய தொழில் நுட்ப முறை விளைச்சல் கூடுதலாகும் எனக் குறிப்பிடுகிறது. ஆனால் பழைய வேளாண்மை முறையை ஒப்பிடுகையில் அதிக இடர் உள்ளதாய் உள்ளது. எடுத்துக்காட்டாக தண்ணீர் அளிப்பு பற்றாக்குறையாக இருந்தாலும்

அதிகமாக இருந்தாலும் வீரியாக விதைகளைப் பாதிக்கும் மேலும் பூச்சிகளினால் இவ்விதைகள் பாதிக்கப்படலாம். எனவே திறமையான நிர்வாகமும் மேற்பார்வையும் தேவைப்படுகின்றன.

குறிப்பு

3. நிலையான நீர்பாசன வசதிகள் உள்ள இடங்களில் மட்டும் தான் இத்திட்டம் செயல்படும். நீர்ப்பாசன வசதிகள் நாடு முழுவதிலும் சமமான முறையில் பகிர்ந்தளிக்கப்படவில்லை. புதிய தொழில் நுட்ப முறையின் நன்மைகள் பெரும்பாலும் பஞ்சாப், ஹரியானா, உ.பி.யின் சில பகுதிகள் போன்ற வட மாநிலங்கள் சிலவற்றிற்கே சென்றடைந்தது

4. பசுமைப் புரட்சி சில பயிர்களுக்கே பொருத்தமுடையதாக இருந்தது. கோதுமையில் புதிய உற்பத்தி செயல்பட்டு உற்பத்தியைப் பெரிதும் பெருக்கியது. ஆனால் அரிசியில் ஓரளவு தான் செயல்பட்டு உற்பத்தி ஓரளவு அதிகமாகியது. வணிகப் பயிர்களில் இது செயல்படவில்லை. எனவே சிலர் நம் நாட்டில் நடடந்து கொண்டிருப்பது கோதுமைப் புரட்சியே தவிர பசுமைப் புரட்சியல்ல எனக் கூறியுள்ளனர்.

5. இத்திட்டத்தில் ஒரு பக்கத்தில் அதிக வேலையாள் தேவைப்படுகிறது. இன்னொரு பக்கத்தில் வேலையாள் சிக்கனமும் கையாளப்படுகிறது. நீர்ப்பாசனம் விரிவுபடுத்தப்படுதல், குழாய் கிணறு வசதிகள் ரசாயண உரம் பயன்படுத்தப்படுதல் மற்றும் அதிக விளைச்சல் தரும் வித்துக்கள் உபயோகத்தில் போன்றவற்றிற்கு அதிக ஆட்கள் தேவைப்படுகிறது. ஆனால் வேளாண்மைச் செயல் முறைகளுக்கு பல எந்திரங்கள் பயன்படுத்தப்படுவதால் வேலையாள் சிக்கனமும் கையாளப்படுகிறது. எனவே வேலையின்மை ஏற்பட்டுவிடாது தடுக்க அதிக கவனம் செலுத்த வேண்டும்.

6. புதியதொழில் நுட்ப முறையினால், உற்பத்தி பெருக்கப்பட்டதனால் நிலச் சீர்திருத்தங்கள் வேகமாகச் செயல்பட முடியவில்லைஎத்தனை குறைகள் சொல்லப்பட்டாலும், உணவு பற்றாக்குறையைச் சசமாளிக்க நம் நாட்டிற்கு புதிய உத்தி உதவியிருக்கிறது என்றால் மிகையாகாது. பஞ்சம் உணவு நெருக்கடி இவற்றிலிருந்து இந்தியாவைப் பசுமைப் புரட்சி காப்பாற்றியுள்ளது. சுருங்கச் சொன்னால் பசுமைப் புரட்சி

விவசாயிகளிடையே ஒருவித மனப் புரட்சியைத் தோற்றுவித்துள்ளது.

## 2.6. உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க



1. முதல் ஐந்தாண்டுத்திட்டம் 1951-56
   இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் 1956-61
   மூன்றாவது ஐந்தாண்டு திட்டம் 1961-66
   நான்காவது ஐந்தாண்டு திட்டம் 1969-74
   ஐந்தாவது ஐந்தாண்டு திட்டம் 1974-79
   ஆறாவது ஐந்தாண்டு திட்டம் 1980-85
   ஏழாவது ஐந்தாண்டு திட்டம் 1985-89
   எட்டாவது ஐந்தாண்டு திட்டம் 1992-97
   ஒன்பதாவது ஐந்தாண்டு திட்டம் 1997-02
   பத்தாவது ஐந்தாண்டு திட்டம் 2002-07
   பதினொன்னாவது ஐந்தாண்டு திட்டம் 2007-12
   பன்னிரெண்டாவது ஐந்தாண்டு திட்டம் 2012-17
2. 1967-68-லிருந்து இந்தியாவில் புதிய வேளாண்மை உத்தி கையாளப்பட்டு வருகிறது. இதனால் விவசாயத்தில் ஒருபெரியமாறுதல் ஏற்பட்டுள்ளது. இதனையே பசுமைப் புரட்சிஎன்கிறோம். பசுமைப் புரட்சி என்பது விவசாய நடவடிக்கைகளின்கூட்டு ஆகும். எடுத்துக்காட்டாக 1967-க்குப் பின்னர் உழவர்கள் புதிய பயிர் பாதுகாப்பு முறைகளைப் பின்பற்றினர்.

# அலகு - 3 விவசாய உற்பத்தியில் பொருளாார முடிவுகள்



குறிப்பு

## 3.1 நோக்கங்கள்

1. **விவசாய உற்பத்தி முறைகளில் பொருளாார முடிவுகள பற்றி அறிந்து கொள்ளுதல்**
2. **காப்-டக்ளஸ் உற்பத்தி சார்பு பற்றிய அறிவு பெறுதல்**

## 3.2 உற்பத்தி சார்பும் விவசாய முடிவுகள:

உற்பத்தி என்பதற்கு உள்ளீடுகளை மாற்றி அமைப்பது என இலக்கணம் கூறலாம். ஒரு நிறுவனம் தான் வாங்குகின்ற உள்ளீடுகளை வெளியீடுகளாக மாற்றுகின்றது. உள்ளீடுகள், உற்பத்தி காரணிகள் ஆகிய இரண்டும் ஒரே பொருளில் பயன்படுத்தப்படுகின்றன. அதே போன்று உற்பத்தி ஆக்கம் வெளியீடு ஆகிய மூன்றும் ஒரே பொருளில் பயன்படுத்தப்படுகின்றன.

உற்பத்தி சார்பு என்பது ஒரு நிறுவனத்தின் உள்ளீடு வெளியீடுகளுக்கு இடையேயான இயல்பான தொடர்பு ஆகும்.

உள்ளீடுகள் என்பது நிலம், உழைப்பு, மூலதனம், அமைப்பு ஆகியவற்றின் ஆக்க பணிகளை குறிக்கும்.வெளியீடுகள் என்பது உற்ப்ததியின் அளவை குறிக்கிறது. இவ்விரண்டிற்க்கும் இடையேயான தொடர்பே உற்பத்தி சார்பு எனப்படும்.உற்பத்தி சர்ாபை ஒரு குறிப்பிட்ட கால அளவு இணைத்துத்தான் குறிப்பிடல் வேண்டும். ஒவ்வொரு நிறுவனத்திற்க்கும் அதன் தொழில் நுட்பத்திற்கேற்றவாறு உற்பத்தி சார்பின் வடிவம் அமையும். பொருளியில் அறிஞர்கள் நடைமுறையில் பல உற்பத்தி சார்புகளை ஆராய்ந்துள்ளனர். உற்பத்தி சார்புகளில் புகழ் பெற்றது. காப்டக்லஸ் உற்பத்தி சார்பாகும்.

**உற்பத்திச் சார்பை நிர்ணயிக்கும் காரணிகள்**

1. நிறுவனத்தின் அளவு
2. நிறுவன அமைப்பின் தன்மை

3. உற்பத்தி காரணிகளின் ஒப்பீட்டு விலை
4. உற்பத்தி காரணிகளை உற்பத்திக்காக இணைப்பது
5. தொழில்நுணுக்க அறிவு.

இக்காரணிகளில் மாற்றம் இருந்தால் உற்பத்தி சார்பானது மாற்றமடையும்.

குறிப்பு

**உற்பத்திச் சார்பின் பயன்கள்:**

1. உற்பத்திச் சார்பு கருத்து உற்பத்திக் கோட்பாட்டை அறிய உதவுகிறது.
2. மாறும் விகிதாச்சாரவிதி, பரும விளைவு விதி ஆகியவற்றை அறிந்துகொள்ளலாம்.
3. செலவுகோடுகளின் தன்மையை அறிந்து கொள்ளலாம்.
4. உற்பத்தியை தீர்மானிக்கின்ற கருவியாக பயன்படுத்தலாம்.
5. குறிப்பிட்ட அளவு உள்ளீட்டிலிருந்து உயர்ந்த அளவு வெளியீடு எவ்வாறு பெறுவது என்பதற்கு வழிகாட்டியாக உள்ளது.
6. சம அளவு கோட்பாட்டின் மூலம் குறிப்பிட்டளவு வெளியீட்டை பெற குறைந்தபட்ச செலவீனம் எவ்வளவு ஆகும் என தெரிந்துகொள்ளலாம்.

## 3.3. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. உற்பத்தி சார்பு சார்பு என்றால் என்ன?

2. உற்பத்திச் சார்பை நிர்ணயிக்கும் ் என்ன?

## 3.4 காப்-டக்ளஸ் உற்பத்தி

காப்-டக்ளஸ் உற்பத்தி சார்பினை சி.டபின்யூ காப் (C.W.Cobb) என்பவரும் பி.ஹெச் டக்ளஸ் (P.H.Douglas) என்பவரும் உருவாகியுள்ளனர். இதில் சில குறிப்பிடத்தக்க தனித் தன்மைகள் கொண்ட இயல்புகள் இருப்பதாலும், இதனை எளிதாகக் கணக்கிட இயல்வதாலும் எல்லோரும் இதனை விரும்புகின்றனர். 1899 முதல் 1922 வரை அமெரிக்க உற்பத்திதொழில்களின் உற்பத்திக்கும், உழைப்பு மூலதன இடுமானங்களுக்கும் உள்ள தொடர்பின் அடிப்படையில் அவர்களது உற்பத்திச்சார்பு அமைந்துள்ளது.

உற்பத்தியில் இடுமானங்களைக் கூட்டுகின்ற விகிதத்திற்குச் சமமாக உற்பத்தி என்பதை காப்-டக்னஸ் உற்பத்திச்சார்பு கூறுகின்றது. இது உற்பத்தித் தொழில்களின் நடைமுறைச்சார்ந்து

உருவாக்கப்பெற்றிருந்தாலும் இப்பொழுது வேளாண்மை போக்குவரத்து உள்பட எல்லாக் துறைகளிலும் இதனைப் பயன்படுத்துகின்றனர்.

இதில் Pஎன்பது மொத்த உற்பத்தியையும; Lஎன்பது உற்பத்திக் தொழிலில் ஈடுபடுத்துகின்ற உழைப்புக் குறியீட்டிணையும் Cன்பது உற்பத்தியில் ஈடுபடுத்தும் நிலையான முதலின் குறியீட்டெண்ணையும் குறிக்கின்றது.

குறிப்பு

aமற்றும் 1-aஎன்பவை உற்பத்தியின் நெகிழ்ச்சிகளைக் காட்டுகின்றன. அதாவது a Ak; 1-aயும் உழைப்பு, முதல் ஆகியவற்றில் ஏற்படும் சதவிகிதமாற்றங்கள் உற்பத்தியும் ஏற்படுத்தும் சதவிகித மாற்றத்தின் அளவையாகும்.

**எடுகோள்கள் :**

1. காப்-டக்ளஸ் உற்பத்திச்சார்பு மாறாத அளவை விதியினைக் குறிக்கின்றது. அதாவது உற்பத்திக் காரணிகளை 1 சதவிகிதம் கூட்டினால் உற்பத்தி 1 சதவிகிதம் கூடும் என்று கூறுகிறது.
2. இது நிறைவு போட்டி நிலவுவதாக கருதுகிறது.
3. இரண்டு காரணிகள் உழைப்பு, முதல் மட்டும் இருப்பதாக கொண்டுள்ளது. பதிலீட்டு நெகிழ்ச்சி ஒன்றுக்கொன்று சமம் என கருதுகிறது.

**இயல்புகள்:**

1. இதனுடைய அடுத்து பெருக்க சார்பினை நீள்கோட்டு அமைப்பிலும் கணித முறையிலும் கூறலாம்.
2. இது முதல் நிலை சீரான சார்பு ஆகும்.
3. இதனுடைய பதிலீட்டு நெகிழ்ச்சி ஒன்றுக்கு சமமாக இருக்கின்றது.
4. a உழைப்பின் பங்கையும்,l-aமூலதனத்தின் பங்கையும் குறிக்கிறது.
5. உழைப்பினாலும், முதலினாலும் உற்பத்தியில் ஏற்படும் நெகிழ்ச்சியை இது காட்டுகிறது.
6. இது மாறாத அளவை விதியினை கொண்டிருக்கிறது.
7. இரண்டு இடுமானங்களில் எந்த ஒரு இடுமானம் பூஜ்ஜியமாக இருந்தாலும் உற்பத்தியும் பூஜ்ஜியமாக இருக்கும்.
8. உழைப்பின் இடுமானம் ஓரலகு கூடுகின்றபோது உழைப்பின் இறுதிநிலை உற்பத்திக்கு சமமாக உற்பத்தி கூடும்.
9. இதன்படி சம அளவு உற்பத்தி கோடுகள் மேலிருந்து கீழாக, இடமிருந்து வலமாக செல்கின்றன.

**சிறப்புகள்:**

1. கணிதயியல் முறையில் இதனை நீள்கோட்டு சார்பாக மாற்றலாம். இந்த உற்பத்தி சார்பில் உள்ள a l-aபோன்ற தெரியாத அளவுகளை கணக்கிடலாம். கணித பொருளியல் துறையில் இதனை விரிவாக பயன்படுத்துகின்றனர். கணித பொருளியல் ஆராய்ச்சியில் இது ஒரு பகுத்தாய்வு கருவியாக பயன்படுகிறது. கால வரிசை பகுத்தாய்விலும் குறுக்கு பகுதி பகுத்தாய்விலும் இதனை பயன்படுத்தலாம்.

குறிப்பு

**காப்-டக்ளஸ் உற்பத்திச் சார்பு-பயன்பாடுகள்**

காப்-டக்ளஸ் உற்பத்திச் சார்பு வணிக துறையிலும் மேலாண்மை நிலையிலும் முக்கியத்துவம் பெறுகிறது.

- **ஒப்பிடுவதற்கு:** பன்னாடுகளுக்கிடையிலும் பல தொழில்களுக்கிடையிலும் ஒப்பிட்டு பார்க்க இது உதவி செய்கிறது.
- **எளிமையாக கணக்கிடல்** : உற்பத்தி முறையின் நெடும் போக்கற்ற இயல்புகளையும் கருத்தில் கொள்ளவும் அவற்றை கணித முறையில் நெடும்போக்கானவைகளாக எளிமையாக கணக்கிட்டு மாற்ற முடிவதால் இது மேலாண்மை பொருளியலில் பயன்படுகிறது.
- கொள்கைகளை உருவாக்க உற்பத்தி காரணிகளின் பங்களிப்புகளை அறிந்து அவற்றிற்கு கொடுக்கின்ற கூலி போன்றவை தொடர்பான கொள்கைகளை உருவாக்க இந்த உற்பத்திச் சார்பு துணை செய்கிறது.
- குறைந்த செலவு இடுமானக்கலவையை தீர்மானிக்கப் பயன்படுகிறது.
- நீண்டகால முடிவுகள் எடுக்க இது துணை செய்கிறது.

- உச்சநிலை உற்பத்தி அடைய அதற்கேற்ற இடுமானங்களின் கலவையை தீர்மானிக்க இது உதவுகிறது. உற்பத்திக் காரணியின் இடுமான அளவை தீர்மானிக்க இச்சார்பு உதவுகிறது.

**குறைகள்**

1. சரியான அடிப்படையின்மை : பொருளியலில் உற்பத்தி சார்பை நுண்ணிய பொருளியல் கருத்தாகதான் உருவாக்கியுள்ளார்.
2. நிறைவு போட்டி இருப்பதாக கருதுகிறது. ஆனால் இது நடைமுறையில் இல்லை.
3. மூலப்பொருட்களை புறக்கணிக்கிறது.

4. இந்தச் சார்பு இரு உற்பத்தி காரணிகளை மட்டும் எடுத்துக் கொள்கிறது. மூலப்பொருள் போன்ற காரணிகளை எடுத்துக் கொள்ளவில்லை.
5. மாறாத அளவை உற்பத்தி விதியின் அடிப்படையில் உருவாக்கப்பெற்றுள்ளது. ஆனால் ஒன்று போல் எல்லா உற்பத்தி காரணிகளையும் கூட்ட முடியாது.
6. இது முழுமையற்ற ஆய்வாக உள்ளது.
7. இந்த உற்பத்தி சார்பில் தொழில்நுட்ப மாற்றமில்லை. இது நடைமுறைக்கு மாறுபட்டது.
8. சார்புக் கோடுகள் : காப்-டக்ளஸ் கருதுவது போல் உற்பத்திச் சார்பு கோடுகள் எப்போதும் தொடர்ச்சியாகவும், சீராகவும் இருப்பதில்லை.

**குறிப்பு**

திறனாய்வாளர்கள் காப்-டக்லஸ் உற்பத்தி சார்பில் பல குறைகளை சுட்டிக் காட்டிய போதிலும் மேலாண்மை பொருளியலில் அதன் பயன்பாட்டை குறைத்து மதிப்பிட முடியாது. பொருளாதார விளைவுகளை விளக்கி கூற இது மிகவும் பயன்பட்டு வருகிறது.

## 3.6. உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

1. உற்பத்தி சார்பு என்பது ஒரு நிறுவனத்தின் உள்ளீடு வெளியீடுகளுக்கு இடையேயான இயல்பான தொடர்பு ஆகும்

2. **உற்பத்திச் சார்பை நிர்ணயிக்கும் காரணிகள்**

   1. நிறுவனத்தின் அளவு
   2. நிறுவன அமைப்பின் தன்மை
   3. உற்பத்தி காரணிகளின் ஒப்பீட்டு விலை
   4. உற்பத்தி காரணிகளை உற்பத்திக்காக இணைப்பது
   5. தொழில்நுணுக்க அறிவு.

குறிப்பு

# அலகு – 4 உற்பத்தி உறவுகள்



## 4.1 : நோக்கங்கள்

1.உற்பத்தி உறவுகள்-பொருள்பற்றி அறிய

2. காரணி தயாரிப்பு காரணி – காரணி- தயாரிப்பு மற்றும் காரணி உறவுகளை தெரிந்துகொள்ளுவதற்காக.

## 4.2பொருள் - உற்பத்தி உறவுகள்

பாரம்பரிய உற்பத்தி செயல்பாடு ஒரு மாறி உள்ளீடு மற்றும் பிற நிலையான உள்ளீடுகள் இடையே உள்ள உறவை வழங்குகிறது. ஒன்றுக்கு மேற்பட்ட மாறி உள்ளீடுகள் உற்பத்தியில் மாறுதல் ஏற்படுத்தும்.

## 4.3 காரணி - தயாரிப்பு உறவு

விவசாயிகள் உள்ளீடுகுகளை வேறுபடுத்தவது மட்டுமில்லாமல் சில நேரங்களில் அதே வளங்களை பயன்படுத்தி ஒன்றுக்கும் மேற்பட்ட தயாரிப்புகளை உற்பத்தி செய்கிறார்கள். ஒரே பண்ணையில் நடவு செய்யப்படும் பீன்ஸ் மற்றும் மக்காச்சோளம் ஒரே நிலம், கருவி, உழைப்பு ஆகியவற்றை பயன்படுத்தி உற்பத்தி செய்யப்படுவதாகும்.

**இரண்டு மாறி உள்ளீடு மற்றும் ஒரு தயாரிப்பு**

சந்தை விலையில் விவசாயிக்கு எந்த கட்டுப்பாடும் இல்லை. குறைந்தபட்சம் ஒரு உற்பத்திறன் உள்ளீடு அளவிலேயே நிர்ணயிக்கப்பட்டது என்பதால் அனைத்து உற்பத்தி செயல்முறைகளும் மற்றும் குறைந்து வருகின்ற சட்டத்திற்கு உட்பட்டன.

பல்வேறு அளவு நிலங்களும் உழைப்பும் பயன்படுத்தப்படும்போது உற்பத்தி செய்யப்படும் மக்காச்சோளத்தின் அளவு குறிக்கப்படுகிறது.

இந்த புள்ளிவிவரங்கள் மக்காச்சோள உற்பத்தியை நிலத்திற்கும், உழைப்பிற்கும் உள்ளீடுகளுக்கு தொடர்புடைய உற்பத்தி செயல்பாட்டை குறிக்கின்றன. ஒவ்வொரு வரிசையிலும் உற்பத்தி செயல்பாடு அந்த அளவிலான நிலையான அளவு நிலத்தில் உற்பத்தி செய்யப்படும் மக்காச்சோளத்தை குறிக்கும்.

## 4.4. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. உற்பத்தியில் மாறுதல் ஏற்படுத்துவை எது?.
2. காரணி- தயாரிப்பு என்றால் என்ன?

குறிப்பு

## 4.5 காரணி- காரணி உறவு:

விவசாய உற்பத்தியாளர்களை எதிர்கொள்ளும் ஐந்து பொருளாதார சிக்கல்களில் ஒன்றாகும். குறிப்பிட்ட இலக்கு வெளியீட்டில் உற்பத்திகளை உற்பத்தி செய்வதில் உள்ளீடுகளை இணைப்பது சிறந்த முறையாகும். உற்பத்தி செய்வதற்கான தீர்வுக்கான பொருளாதார அணுகுமுறையை பயன்படுத்துவது எப்படி, எப்படி உற்பத்தி செய்வது, தேர்ந்தெடுக்கப்பட்ட உற்பத்திகளை உற்பத்தி செய்வதில் மலிவான உற்பத்தி செய்யும் முறையை தேர்ந்தெடுப்பது என்பது பற்றி விளக்குகிறது.

கலவையின் இலக்கு அளவு சோனம் 40 பைகள் இருக்கட்டும். இந்த உற்பத்தி திறன் ஐந்து தொழிலாளர்கள் மற்றும் 1 ஹெக்டெர் நிலம் ஆகியவற்றின் கலவையாகும். 40 பைகள் மக்காச்சோளத்திற்காக ஊதிய விகிதம் 5 டாலர் மற்றும் ஹெக்டேருக்கு நில வாடகை 10 டாலர் கொடுக்கப்பட்டால் IPR = PX1/ PX2=உழைப்பின் விலை நிலத்தின் விலையால் வகுக்கப்படுகிறது. அதாவது 5∴10=0.5.

நிலம் மற்றும் உழைப்பு ஆகியவை தொடர்ச்சியாக மாறுபடுகின்றன. வளைவின் சாய்வு உள்ளீடு மாற்க்குறுக்கீடு விகிதம் எதிர்மறையாக உள்ளது. ஏனென்றால் நாம் ஒரு உள்ளீட்டை பயன்படுத்தும் போது வெளியீட்டின் குறிப்பிட்ட அளவை உற்பத்தி செய்வதில் வேறு மாறி உள்ளீடுகளை குறைவாக பயன்படுத்துகிறோம். ஒரு தனி மனிதனின் விகிதம் மேல்நோக்கியும், வலது புறமும், உற்பத்திக்கான பகுத்தறிவு பகுதியை பிரதிநிதித்துவப்படுத்துகிறது. ஏனெனில் இரு தரப்பினருக்கும் குறைவாக உற்பத்தி செய்யப்படுகிறது

## 4.6 . உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

குறிப்பு

1. ஒன்றுக்கு மேற்பட்ட மாறி உள்ளீடுகள் உற்பத்தியில் மாறுதல் ஏற்படுத்தும்.

2. விவசாயிகள் உள்ளீடுகுகளை வேறுபடுத்தவது மட்டுமில்லாமல் சில நேரங்களில் அதே வளங்களை பயன்படுத்தி ஒன்றுக்கும் மேற்பட்ட தயாரிப்புகளை உற்பத்தி செய்கிறார்கள். ஒரே பண்ணையில் நடவு செய்யப்படும் பீன்ஸ் மற்றும் மக்காச்சோளம் ஒரே நிலம், கருவி, உழைப்பு ஆகியவற்றை பயன்படுத்தி உற்பத்தி செய்யப்படுவதாகும

## 4.7 தயாரிப்பு – தயாரிப்பு உறவு :

விவசாயிகள் குறைந்த ஆதாரங்களை கொண்டுள்ளன. எந்த தொழில்நுட்பத்தை பயன்படுத்த வேண்டும். என்ன உற்பத்தி செய்ய வேண்டும். எந்த கலவையை பயன்படுத்த வேண்டும் என்று முடிவெடுக்கப்படுகிறது.

$y1= f\ (y2)$ அடிப்படை உறவு : அடிப்படை தயாரிப்பு தயாரிப்பு உறவுகள்.கூட்டுப் பொருட்கள் : கூட்டுப்பொருட்கள் ஒரே உற்பத்தி செயலாக்கத்திலிருந்து விளைகின்றன. ஒன்றில்லாமல் மற்றொரு உற்பத்தி சாத்தியமில்லை. பருத்தி விதை கோதுமை மற்றும் வைக்கோல் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் உற்பத்தி செய்யப்படும் ஒரு உற்பத்தியின் அளவு தீர்மானிக்கப்படுகிறது. கூட்டுப் பொருட்கள் மிக அவசியம். தயாரிப்பு தயாரிப்பு சேர்க்கையிலான மாற்றங்கள் நீண்ட காலத்திற்கு மட்டும் சாத்தியமாகும்.

இரண்டு பொருட்களை பயன்படுத்தும் பொழுது உற்பத்தி பொருட்களை சாதகமாக பயன்படுத்த வேண்டும். ஒரே பொருளை இரண்டு நிறுவனங்கள் தயாரிக்கும் பொழுது அவற்றிக்கிடையே போட்டி ஏற்படும். இந்த போட்டிகளை எதிர்கொண்டு பொருட்களை தயாரிக்க வேண்டும்.

**மாற்று விகிதத்தை குறைத்தல்** : ஒரு உற்பத்தியின் அளவு ஒரு அலகு அதிகரிப்பாகும். மற்ற உற்பத்திகளின் மட்டத்தில் குறைவான மற்றும் குறைவான குறைபாடுகளுடன் இணைந்து உற்பத்தி செய்யும் பொருளாக இருக்கும். (எ.கா) பால் மற்றும் பயிர்கள்.

விவசாயிகள் உற்பத்தி செய்யும் நெல், கோதுமை உட்பட பணப்பயிரின் உண்மையான உற்பத்தி செலவு புதிய முறையில்

கணக்கிடப்பட உள்ளது. விவசாய விளைபொருட்கள் உற்பத்தி செலவு மற்றும் விலை நிர்ணயக்குழு என்ற அமைப்பு விவசாயிகளின் விலை பொருட்களின் உற்பத்தி செலவை கணக்கிடுகிறது. மத்திய அரசு விவசாயிகளிடமிருந்து வாங்கும் உணவு தானியங்களின் கொள்முதல் விலையை அறிவிக்கிறது. உணவு தானியங்கள் கரும்பு போன்ற பணப்பயிர்களின் உற்பத்தி செலவுக்கும் அரசு அறிவிக்கும் விலைக்கும் அதிக வேறுபாடு உள்ளது.

1. உற்பத்தியில் இடுமானங்களைக் கூட்டுகின்ற விகிதத்திற்குச் சமமாக உற்பத்தி என்பதை காப்-டக்னஸ் உற்பத்திச்சார்பு கூறுகின்றது.

**2. குறைகள் :**

1. சரியான அடிப்படையின்மை : பொருளியலி ˙ உற்பத்தி சார்பை நுண்ணிய பொருளியல் கருத்தாகதான் உருவாக்கியுள்ளார்.
2. நிறைவு போட்டி இருப்பதாக கருதுகிறது. ஆனால் இது நடைமுறையில் இல்லை.
3. மூலப்பொருட்களை புறக்கணிக்கிறது.
4. இந்தச் சார்பு இரு உற்பத்தி காரணிகளை மட்டும் எடுத்துக் கொள்கிறது. மூலப்பொருள் போன்ற காரணிகளை எடுத்துக் கொள்ளவில்லை.
5. மாறாத அளவை உற்பத்தி விதியின் அடிப்படையில் உருவாக்கப்பெற்றுள்ளது. ஆனால் ஒன்றுபோல் எல்லா உற்பத்தி காரணிகளையும் கூட்ட முடியாது.
6. இது முழுமையற்ற ஆய்வாக உள்ளது.
7. இந்த உற்பத்தி சார்பில் தொழில்நுட்ப மாற்றமில்லை. இது நடைமுறைக்கு மாறுபட்டது.
8. சார்புக் கோடுகள் : காப்-டக்ளஸ் கருதுவது போல் உற்பத்திச் சார்பு கோடுகள் எப்போதும் தொடர்ச்சியாகவும், சீராகவும் இருப்பதில்லை.

3. எந்த தொழில்நுட்பத்தை பயன்படுத்த வேண்டும். என்ன உற்பத்தி செய்ய வேண்டும். எந்த கலவையை பயன்படுத்த வேண்டும் என்று முடிவெடுக்கப்படுகிறது.

$y1 = f(y2)$

# அலகு - 5 விவசாயத்தில் மூலதன உருவாக்கம்





## 5.1. நோக்கங்கள்

**குறிப்பு**

1. விவசாயத்தில் மூலதன உருவாக்கத்தை பற்றி புரிநது கொள்ளுதல்
2. தனியார் மற்றும் பொதுத்துறை முதலீடு பற்றி அறிவதற்காக
3. கட்டண உறவுகள் மற்றும், இலாப பெருக்கம் பற்றிய அறிவு பெறுவதற்காக

## 5.2 விவசாயத்தில் மூலதன உருவாக்கம்:

அரசாங்கமும் மற்ற பங்குதாரர்களும் மூலதன உருவாக்கம் மூலம் கொள்கையை உருவாக்கும் சூழலில் முக்கியத்துவம் பெறுகின்றன. பொதுமக்களும் தனியார் நிறுவனமும் முதலீடு செய்து மூலதனத்தை உருவாக்குகின்றார்கள்.

இந்திய வேளாண்மையில் உற்பத்தியின் உற்பத்தி மற்றும் உற்பத்தி திறன் மிக முக்கியமானது. பெருகி வரும் மக்கள் தொகைக்கு ஏற்ப வேளாண் உற்பத்தியை அதிகரிப்பது மிகவும் அவசியம்.

மில்லியன் கணக்கான மக்களுக்கு உணவளிப்பது வேளாண்மை துறையின் மூலம் மட்டுமே சாத்தியம். இதற்காக விவசாயத்தில் ஈடுபட்டுள்ள சிறு, குறு விவசாயிகள் மிக முக்கியமான பங்கு வகிக்கிறார்கள். மொத்த உள்நாட்டு உற் பத்தியில் மொத்த மூலதனத்தை உருவாக்கும் விகிதமாக விவசாயத்தில் முதலீட்டு விகிதம் அளவிடப்படுகிறது.

இந்தியாவின் மூலதன உருவாக்கத்தினால் விவசாயம் வளர்ச்சி அடைந்துள்ளது. விவசாய ஆராய்ச்சி கல்வி மற்றும் கிராமபுற உள்கட்டமைப்பு கிராமபுற வேளாண் வேலை வாய்ப்பு ஆகியவை விவசாய உற்பத்தியை பெருக்கி வருமையை குறைக்க முற்படுகிறது. பொது துறை முதலீடு செய்வதால் வுருமை குறைகிறது. புகழ் பெற்ற பொருளாதார வல்லுநர் எம்.எல்.தந்த்வாலா (1986) மூலதன உருவாக்கத்தை வலியுறுத்தினார். இரண்டு வகை மூலதன உருவாக்கத்தை அவர் விளக்கினார்.

1. குறுகிய தரவு தொடர்
2. பரந்த தரவு தொடர்

மத்திய புள்ளி விவர அமைப்பு (CSO)மூலதன உருவாக்கம் பற்றிய மதிப்பீடுகளை தொகுக்கிறது. மொத்த பொது மூலதனத்தில் கிட்டதட்ட 90 சதவிகிதம் நீர்பாசனத்திற்கு செலவிடப்படுகிறது.

## 5.3 வேளாண்மையில் பொதுத்துறை முதலீடு:

குறிப்பு

இந்திய அரசு வேளாண்மைக்கு செய்யும் முதலீடு சமீப காலமாக குறைந்து வருகிறது. முதல் ஐந்தாண்டு திட்டத்தில் நீர் பாசனத்திற்கு செலவு செய்யப்பட்ட தொகை மொத்த பட்ஜட்டில் 23 சதவிகித்திலிருந்து பத்தாவது ஐந்தாண்டு திட்டத்தில் வெறும் 5 சதவிகிதமாக குறைந்தது. இந்தியாவின் மொத்த உற்பத்தி பொருளுக்கான பணவீக்கம் 2.5 சதவிகிதம் அதிகரித்துள்ளது. ஆனால் உணவு பொருள் மற்றும் தானியத்தின் பணவீக்கம் 8-12 சதவிகிதமாக அதிகரித்தள்ளது. அதிக அளவு பணம் விவசாயிகள் மற்றும் விவசாய தொழிலாளர்கள் கைக்கு வர வாய்ப்புள்ளது. எப்பொழுது என்றால் ஒவ்வொருவரும் தனது வருமானத்தில் உணவுக்கு செலவிடும் பணத்தின் சதவிகிதம் அதிகரிக்கும்போது. ஏழை மக்களை இந்த விலை உயர்வில் இருந்து காக்க அரசாங்கம் பொதுவிநியோக முறையை ஏற்படுத்தியுள்ளது.

### 5.3.1 வேளாண்மையில் தனியார் முதலீடு :

வேளாண்மையில் தனியார் முதலீடு சமீப காலமாக அதிகரித்துள்ளது. பொதுதுறை நிறுவனங்கள் எல்லாவற்றையும் நிர்வாகம் செய்ய முடியாமல் தனியார் துறைக்கு ஒப்படைத்துவிடுகின்றன. தனியார் முதலீட்டின் பங்கு விவசாய உபகரணங்கள் வாங்குவதற்கும் இயந்திரங்கள் வாங்குவதற்கும் நீர்பாசன திட்டத்திற்கும் ஒதுக்கீடு செய்யப்பட்டது. தனியார் முதலீட்டின் பங்கு குறுகிய தரவுதொடர் மூலதனத்தை கைப்பற்றுவதற்கு மிக நெருக்கமாக உள்ளது. சாலைகள் மற்றும் தொடர்பு விவசாய கல்வி, ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி, விவசாய தொழில்நுட்பம், கிராமிய மின்மயமாக்கல் போன்றவை விவசாய மூலதன அமைப்பின் நடவடிக்கையாகும். ஆறு ஆண்டுகளில் 2005-06 முதல் 2011-12 வரை விவசாயத்தில் முதலீட்டு விகிதம் அதிகரித்துள்ளது.

## 5.4. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1.. பொதுத்துறை முதலீடு என்றால் என்ன?

2. தனியார் துறை முதலீடு என்றால் என்ன?

## 5.5 கட்டண உறவுகள் மற்றும் இலாப உச்சம்:

குறிப்பு

சராசரி செலவு வளைவுக்கோடு ஒரு உற்பத்தியாளர் லாபம் சம்பாதிக்கிறாரா அல்லது நட்டத்தில் இயங்கிகொண்டியிருக்கிறாரா என்பதை தெரிவிக்கிறது. அங்காடியில் சராசரி செலவை விலை அதிகமாக இருந்தால் உற்பத்தியாளர் அதிக இலாபம் பெறுவார். விலை சராசரி செலவிற்கு சமமாக இருந்தால் இயல்பு இலாபத்தை பெறுவார். விலை சராசரி செலவை விட குறைவாக இருந்தால் அவர் நட்டம் அடைவார். இவ்வாறு விவசாயிகள் இலாப அளவினை தீர்மானிக்க சராசரி செலவு பயனுள்ளதாக உள்ளது.

ஒரு விவசாயின் உற்பத்தியை நிர்ணயிக்க இறுதிநிலை செலவு வளைக்கோடு முக்கியம். ஒரு அலகு கூடுதலாக விற்கும்போது கிடைக்கும் கூடுதல் பணம் அதனை உற்பத்தி செய்ய ஆகும் கூடுதல் செலவை விட அதிகமாக இருக்கும் வரை ஒரு உற்பத்தியாளர் உற்பத்தியில் தொடர்ந்து ஈடுபடலாம். வேளாண் உற்பத்தியாளர் இறுதிநிலைச்செலவு இறுதிநிவை வருவாய்க்கு சமமாகும்போது உற்பத்தியை நிறுத்திவிடுவார். அப்போது அவர் உச்ச அளவு இலாபம் பெறுவார்.

குறுகியகாலச் செலவு கோடுகள் குறுகிய காலத்தில் ஒரு நிறுவனம் அதன் அளவு, இயந்திரங்கள், கருவிகள், அமைப்பின் அளவு முதலியவற்றை மாற்ற முடியாது என்பதை தெரிவிக்கின்றன. வளருகின்ற தேவையை சந்திக்க விவசாயிகள் தொழிலாளர்களையும் மூலப்பொருள்களையும் பயன்படுத்துகின்றன. மாறாக நீண்ட காலத்தில் எல்லாச் செலவுகளுமே மாறும் செலவுகளாகும் நீணட காலத்தில் விவசாயிகள் தேவைக்கேற்ப அதன் செயல்பாட்டின் அளவை சரிசெய்து கொள்ளலாம் என்பதை நீண்ட காலக்செலவுக்கோடு குறிப்பிடுகின்றது.

விவசாயிகள் ஒரு பொருளை உற்பத்தி செய்ய 24 மணி நேரம் உழைக்கின்றன. அதற்கு தேவையான எடுபொருட்களான விதைகள், உரங்கள், பூச்சி மருந்துகளின் விலை அதிகரித்திருக்கிறது. விவசாய

கூலி ஆட்கள் கிடைப்பது குதிரை கொம்பாக உள்ளது. இயற்கை வஞ்சித்ததால் தண்ணீர் பற்றாக்குறை வேறு பாதிக்கிறது. நதி நீர் பிரச்சனைகளும் விவசாயிகளுக்குதான் சம்மட்டி அடி கொடுக்கின்றன.

இத்தனைக்கு பிறகு விலை பொருட்களுக்கு போதிய விலை கிடைக்கவில்லையென்றால் விவசாயி என்ன செய்வார். சுதந்திரம் பெற்று 69 ஆண்டுகள் நிறைவடைந்த நிலையிலும் நம்மால் விலைபொருட்களை பாதுகாக்கும் சேமிப்பு பதனக் கிடங்குகளை மாவட்டத்திற்கு ஒன்று என்ற அளவிலும் கூட அமைக்கமுடியவில்லை.

குறிப்பு

அரசு அளிக்கும் குறைந்தபட்ச ஆதார விலைகளும் கூட எல்லா விலை பொருட்களுக்கும் கிடைப்பதில்லை. கஷ்டப்பட்டு விலைவிக்கும் விவசாயி அடைய வேண்டிய பயன்களை பதுக்கல் காரரர்களும் பெரும் வர்த்தக நிறுவனங்களுமே பெறுகின்றன. உச்ச இலாபம் என்பது குறுகிய கால நீண்டகால செயல்முறையை ஒரு நிறுவனம் தீர்மானிக்கும் விலை மற்றும் வெளியீடு நிலை மூலம் கிடைக்கபெறும் மிகப்பெரிய இலாபம் இந்த பிரச்சனைக்கு அனுகுவதற்கு பல அனுகுமுறைகள் உள்ளன.

உலகச் சந்தைகளில் உற்பத்தியாளர்களிடையே நிலவும் போட்டியினால் இலாபத்தை பெறுக்கவும் அல்லது இலாபத்தை நிலைநிறுத்திக் கொள்ளவும் விவசாயத்திற்கான அனைத்து இடுபொருட்களின் விலையும் உயர்ந்ததால் கடந்த 15 ஆண்டுகளில் உரவிலை பெறும் அளவு அதிகரித்துள்ளது. 1991 ல் ஒரு மூட்டை டைஅமோனியா பாஸ்பேட் (னுயுP) உரத்தின் விலை ரூ.180 2011ல் ரூ.534 என அதிகரித்துள்ளது. தற்பொழுது தமிழகத்தில் ஒரு மூட்டை ரூ.1250க்கு விற்கப்படுகிறது. மின் கட்டணம் உரவிலை தண்ணீர் என அனைத்த இடுபொருட்களின் விலையும் பல மடங்கு அதிகரித்துள்ளது. நாடு முழுவதும் தண்ணீர் தனியார் மயமாக்கப்பட்டு வருகிறது. இதனால் விவசாயி சாகுபடி செய்யும் செலவு தொகையின் அளவு ஐந்து மடங்கு அதிகரித்துள்ளது. அனால் விவசாயிக்கு கிடைக்கம் வருமானத்தின் அளவு ஐந்து மடங்கு அதிகரிக்கவில்லை.

விவசாயத்தில் ஈடுபடுபவர்கள் பயிர் சாகுபடிக்கு செலவு செய்திட வேண்டியதொகை பெருமளவு அதிகரித்திருப்பதால் அவர்களால் அதை ஈடு செய்ய முடியவில்லை. ஆதலால் அரசை நாடுகின்றன. கடன் வசதி அரசிடமிருந்து கிடைக்காததால் கந்துவட்டிக்காரர்களிடம் கடன் வாங்குகின்றன. விளைச்சலுக்கு செய்த செலவுகூட திருப்பி கிடைக்காத நிலையில் கடன் வலையில் சிக்கி சிரமப்படுகின்றன.

குறிப்பு

**விவசாய செலவு மற்றும் விலை பற்றிய குழு:**

விவசாயப் பொருட்களான நெல், கோதுமை, சோளம், கம்பு, கேள்வரகுஈ மக்காச்சோளம், பருப்பு வகைகள், கரும்பு, எண்ணெய் வித்துக்கள், பருத்தி மற்றும் சணல் முதலியவற்றின் விலை பற்றி அரசுக்கு அறிவுரை கூற 1965ல் விவசாய விலைக்குழு ஏற்படுத்தப்பட்டது. இக்குழு இப்பொழுது விவசாயச் செலவு மற்றும் விலைக் குழு (CACP) என அழைக்கப்படுகிறது.

விவசாயப் செலவு மற்றும் விலை பற்றிய குழு அமைக்கப்பட்டதும் விலைகளில் ஏற்பட்ட ஏற்ற இறக்கங்கள் தெளிவான மாறின. இக்குழு முந்தைய ஆண்டின் உற்பத்திச் செலவுகள் மற்றும் விலைகளை விரிவாக ஆராய்கிறது. இது இரண்டுவிதமான விலைகளை அறிவிக்கிறது. அ)குறைந்தபட்ச ஆதரவு விலைகள் ஆ) கொள்முதல் விலைகள்.

பின்னா் செய்யப்பட்ட விலைகள் அரசு அதன் பொது விநியோக முறையின் தேவையை எதிர்கொள்ள உணவுதானியங்களை வாங்குவதை குறிப்பிடுகிறது. விவசாயிகள் எந்த அளவு கொடுக்கிறார்களோ அந்த அளவு உணவு தானியங்களை வாங்க அரசு கடமைப்பட்டதை முன்னா் குறிப்பிட்ட ஆதரவு விலைகள் சுட்டிக் காட்டுகின்றன. எனவே குறைந்தபட்ச ஆதரவு விலைகள், விலைகள் அதற்குக் கீழாக குறைய அனுமதிக்கப்படமாட்டாது என்ற உறுதிமொழியை கொடுப்பதாக உள்ளது.

விவசாயப் செலவு மற்றும் விலை பற்றிய குழு ஆண்டுக்காண்டு கொள்முதல் விலைகள் அதிகரிப்பதை ஆதரித்தது. அது குறைந்தபட்ச ஆதரவு விலைகளை அறிவித்தது. குறைந்தபட்ச ஆதரவு விலைகளின் அளவை நிர்ணயிக்க இக்குழு உற்பத்திச் செலவை முக்கிய அடிப்படையாக பயன்படுத்தியது. இக்குழு சந்தையிடுகைச் செலவைக் குறைக்க நடவடிக்கைகளை குறிப்பிட்டது. இவ்வாறு முன்னேற்றமான தொழில்நுட்பத்தை கையாள உற்பத்தியாளருக்கு ஊக்கத்தை அளிப்பதன் தேவையை இது ஆராய்ந்தது.

அரசு அறுவடைக்குப் பின்னா் உணவு கையிருப்பை பலப்படுத்துகிறது. இது பொதுவிநியோக முறையில் தானியங்கள் அளிக்கப்பட உதவியாய் உள்ளது. மேலும் கட்டாயச் சூழ்நிலைகளில் அரசு வெளிநாடுகளிலிருந்து உணவு இறக்குமதி செய்ய கட்டாயப்படுத்தப்படுகிறது.

## 5.6. உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க



1. இந்திய அரசு வேளாண்மைக்கு செய்யும் முதலீடு சமீப காலமாக குறைந்து வருகிறது. முதல் ஐந்தாண்டு திட்டத்தில் நீர் பாசனத்திற்கு செலவு செய்யப்பட்ட தொகை மொத்த பட்ஜட்டில் 23 சதவிகித்திலிருந்து பத்தாவது ஐந்தாண்டு திட்டத்தில் வெறும் 5 சதவிகிதமாக குறைந்தது. இந்தியாவின் மொத்த உற்பத்தி பொருளுக்கான பணவீக்கம் 2.5 சதவிகிதம் அதிகரித்துள்ளது. ஆனால் உணவு பொருள் மற்றும் தானியத்தின் பணவீக்கம் 8-12 சதவிகிதமாக அதிகரித்தள்ளது. அதிக அளவு பணம் விவசாயிகள் மற்றும் விவசாய தொழிலாளர்கள் கைக்கு வர வாய்ப்புள்ளது.



2. வேளாண்மையில் தனியார் முதலீடு சமீப காலமாக அதிகரித்துள்ளது. பொதுதுறை நிறுவனங்கள் எல்லாவற்றையும் நிர்வாகம் செய்ய முடியாமல் தனியார் துறைக்கு ஒப்படைத்துவிடுகின்றன. தனியார் முதலீட்டின் பங்கு விவசாய உபகரணங்கள் வாங்குவதற்கும் இயந்திரங்கள் வாங்குவதற்கும் நீர்பாசன திட்டத்திற்கும் ஒதுக்கீடு செய்யப்பட்டது. தனியார் முதலீட்டின் பங்கு குறுகிய தரவுதொடர் மூலதனத்தை கைப்பற்றுவதற்கு மிக நெருக்கமாக உள்ளது.

# அலகு - 6 பண்ணை நிர்வாகம்



குறிப்பு

## 6.1. நோக்கங்கள

1. .பண்ணை நிர்வாகம் மற்றும் பொருள் பற்றி முக்கியத்துவம பற்றி அறிந்து கொள்ள.

2.விவசாய விலை நிர்ணயம். பற்றி அறிய.

## 6.2 பண்ணை நிர்வாகம்:

பொருள்

வேளாண்மையில் உற்பத்திக் காரணிகளான நிலம், உழைப்பு, முதல் ஆகியவற்றை எந்த அளவில் இணைப்பதென்பதைத் தீர்மானித்து, இணைத்து, எவற்றை எப்பொழுது, எப்படி சாகுபடி செய்வதென்று முடிவுசெய்து, உற்பத்தியை மேற்கொண்டு, உற்பத்தி செய்த விளைபொருட்களை இடம், காலம் பார்த்து விற்பனை செய்வது விளைபொருட்களை இடம், காலம் பார்த்து விற்பனை செய்வது ஆகிய பணிகளை எல்லாம் உள்ளடக்கியதே பண்ணை நிர்வாகமாகும். பண்ணை நிர்வாகத்தின் வெற்றி இடுமானங்களாகிய நிலம், விதைகள், உரம், எரு. மருந்துகள், தண்ணீர், மின்சாரம், கருவிகள், உழைப்பு, தீவனம் ஆகியவற்றைப் பெறுவதிலும், பயன்படுத்துவதிலும், சிறந்த உற்பத்தி முறையைப் பின்பற்றி, மிகுதியாக விளைவித்து, உச்சநிலையிலும், ஆதாயம் பெறுவதிலும் உள்ளது.

## 6.3. பண்ணை நிர்வாகம் - முக்கியத்துவம்

பண்ணை நிர்வாகத்தில் இருக்கின்ற இரு தலையாய பணிகள் இணைப்பும் மேற்பார்வையுமாகும். முதலாவதாக, இணைப்புபணி, உற்பத்திக் காரணிகளை இடுமானங்களை இணைப்பதைக் குறிக்கின்றது. உற்பத்திக் காரணிகளை எந்த அளவில் எப்படி இணைப்பதன் மூலம், உற்பத்திச் செலவு குறைவாக இருக்கும் நிலையில், உச்சநிலையில் உற்பத்தியைப் பெறுவதென்பதைத் தீர்மானிப்பதைக் குறிக்கின்றது.

இரண்டாவதாக, பண்ணையில் வேளாண்மை நடவடிக்கைகள் தக்க காலத்தில் நடைபெறுகின்றதாவென்பதையும்: விளைபொருட்களை

விற்பனை செய்வதையும், வேளாண்மையோடு இணைந்த கால்நடை வளர்ப்பு, கோழி வளர்ப்பு போன்றவற்றையும் சேர்த்துக் கவனிப்பது மேற்பார்வை பணியாகும்.

**இந்திய வேளாண்மை நிர்வாகத்தின் இயல்பு:** நமது நாட்டில் வேளாண்மையைத் தொழிலாகவோ, வாணீபமாகவோ கருதாமல், வாழ்க்கை முறையாகக் கருதும் மனப்பான்மை தொடர்கின்றது. பொதுவாக எந்த உற்பத்தி நிறுவனமும் நன்கு நடைபெற வேண்டுமானால் அதனை நடத்துகின்றவர் நிர்வாகத்தில் பயிற்சி பெற்றவராக, நிர்வாகத்தின் நுட்பம் தெரிந்தவராக இருக்க வேண்டும். மேற்கத்திய நாடுகளில் வேளாண்மைப் பண்ணைத்தொழில் நிறுவனங்களைப் போன்று அறிவியல் முறைப்படி நடத்தி வெற்றி பெறுகின்றனர். ஆனால் நமது நாட்டில் வேளாண்மை வாழ்க்கை முறையாக இருப்பதால், நிர்வாகப் பணிகளைப் பற்றியே கவலைப்பட்டாமல், மரபு வழியில், பழக்கவழக்கங்களின்படி வேளாண்மையை நடத்துகின்றனர். இந்திய வேளாண்மையை இயற்கைத்தான் நிர்வகிக்கின்றதென்று கூறினால் மிகையாகாது.

**பண்னை நிர்வாகத்தில் கவனிக்க வேண்டியவை:**

1. பண்ணையின் அளவு : வேளாண்மைப் பண்ணை சரியான அளவில் இருக்க வேண்டும். மிகச் சிறியதாகவும் இல்லாமல், பெரியதாகவும் இல்லாமல் உத்தம அளவில் இருக்க வேண்டும். பண்ணை பொருளாதார அளவில் இருந்தால் தான் உற்பத்தி செலவு குறைவாகவும், உற்பத்தி மிகுதியாகவும் இருக்கும். இந்தியாவில் பெரும்பாலான பண்ணைகள் மிகச் சிறியதாக இருப்பதால் அவற்றைச் சரிவர நிர்வாகம் செய்ய முடிவதில்லை.
2. போதுமான நிதி: தேவையான அளவு நிதியை உரிய காலத்தில் பெற்றுச் சரியாகப் பயன்படுத்த வேண்டும். விதைகள், உரங்கள், கருவிகள் வாங்கவும், கூலி கொடுக்கவும் நிதி தேவை, இருக்கின்ற நிதி வளத்தை ஒட்டிதான் தொழில் நுட்ப உற்பத்தி முறைகளைப் பின்பற்ற முடியும்.
3. நீர்ப்பாசன வசதி: சாகுபடிக்கு உயிரளிப்பது தண்ணீர், உறுதியாக தொடர்ந்து தண்ணீர் கிடைக்கச் செய்து விட்டால் வேளாண்மையில் பாதி வெற்றி பெற்றுவிட்டதாகக் கருதலாம். உரியகாலத்தில் தேவையான அளவில் தண்ணீர் கிடைக்கச் செய்வதில் நிர்வாகத்தின் திறமை இருக்கின்றது.
4. இடுமானங்களை பெறுதல்: நல்ல விளைச்சல் தரக் கூடிய திருந்திய விதைகள், உரங்கள், எருக்கள், மருந்துகள் ஆகியவற்றைக் குறைந்த விலையில் பெற்றுப் பயன்படத்த

குறிப்பு

வேண்டும். ஒவ்வொன்றையும் உரிய அளவில் பெற்று பயன்படுத்துவது தேவையாகும்.

5. தொழில் நுட்ப அளவில் அறிவு: நிர்வாகிக்கு வேளாண்மையின் மூலவளங்களை எப்படி நிர்வகிப்பதென்பது தெரிந்திருக்க வேண்டும். புதிய அறிவியல் முறைகளைப் பின்பற்றும் அறிவும் தெளிவுமுள்ள நிர்வாகிகளால் கால மாறுதலை உணர்ந்து செயல்பட முடியும்.

**நிர்வாக முறைகளின் வகைகள்**: பொதுவாக நடைமுறையிலிருக்கும் வேளாண்மை நிர்வாகத்தை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

1. தனியார் நிர்வாகம்: தனிபட்டவர்கள் தங்களது நிலத்திற்கும் வளத்திற்கும் ஏற்ப நிலத்தை வேளாண்மை செய்கின்றனர். இவர்கள் தங்களது விருப்பம்போல் எதையும் எப்படியும் பயிப் செய்யலாம். இது குடும்பப் பண்ணையாகவோ, வீட்டிலுள்ளவர்கள் பணிசெய்கின்ற பண்ணையாகவோ, கூலியாட்களின் உதவியோடு சாகுபடி செய்கின்ற பண்ணையாகவோ இருக்கலாம்.

தனியார் நிர்வாகத்திலிருக்கும் பண்ணைகளை நில உடைமை உரிமை அமைப்பு முறையின் அடிப்படையில் 1. சொந்தப்பண்ணை 2. குத்தகைக்குப் பயிர் செய்யும் பண்ணை 3. வாரத்திற்குப் பயிர் செய்யும் பண்ணை என்று மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். சாகுபடி செய்கின்ற நிலம் எல்லாம் விவசாயிகளுக்குச் சொந்தமாக இருந்தால் அதனைச்சொந்தப் பண்ணை என்கிறோம். ஒருவருடைய நிலத்தை ஆண்டிற்கு குத்தகைப் பணமாக இவ்வளவு தருவதாகக் கூறி வேளாண்மை செய்துவருவது குத்தகைப் பண்ணை, ஒருவரின் நிலத்தை விளைச்சலில் இவ்வளவு பங்கு தருவதாக ஒப்புக் கொண்டு பயிர்செய்வது வாரத்திற்குப் பயிர் செய்யும் பண்ணையாகும்.

1. **கூட்டுறவு பண்ணை நிர்வாகம்:** விவசாயி ஒன்றாகக் கூட்டுறவு அடிப்படையில் இணைந்து வேளாண்மை செய்யலாம். இத்தகைய கூட்டுறவு நிர்வாகம் பலமுறைகளில் அமையலாம், தனியார் நிர்வாகத்தில் இருக்கின்ற சுரண்டல் கூட்டுறவு நிர்வாகத்தில் இருக்காது.
2. **அரசு நிர்வாகம் :** அரசு தனக்கு சொந்தமான நிலத்தைத்தானே நேரடியாக நிர்வாகம் செய்யலாம். சோவியத் ரஷ்யாவிலிருக்கும் கூட்டுப் பண்ணைகளை அரசு நிர்வாகப் பண்ணைகளுக்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

3. **சில தனிவகைப் பண்ணை நிர்வாகங்கள் :** உலகில் சில நாடுகளில் தனிவகையான பண்ணை நிர்வாக முறைகள் உள்ளன. பிரான்சில் மேட்டாயாகே (Matayaka) முறை செயல்படுகின்றது. இம்முறையில் நிலக்கிழார் பண்ணையில் தங்கி நிலத்தை நிர்வகிப்பதில்லை. விவசாயிகளுக்கு வேண்டிய கருவிகள் கால்நடைகள், விதை, உரம் ஆகிவற்றை வழங்குகின்றார். அறுவடைக்குப்பின் விளைச்சலில் பாதியைப் பெற்றுக்கொள்கின்றார்.



இன்று இஸ்ரேலிருக்கும் குட்சாப் பண்ணைகள் (Kvutzas) உலகத்தின் கவனத்தை ஈர்க்கின்றன. இப்பண்ணைகள் விவசாயிகளுக்கு வேண்டியவற்றை வாங்கித்தந்தும், விளை பொருட்களை விற்றுக் கொடுத்தும் உதவுகின்றன. வேளாண்மை நிர்வாகம் எப்படி அமைந்தாலும் அடிப்படை ஒன்றுதான். நிர்வாகம் சரியாக அமைந்தால்தான் வேளாண்மை நல்ல பயனைத்தரும்.

## 6.4. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. பண்ணை நிர்வாகம் என்றால் என்ன?
2. கூட்டுறவு பண்ணை நிர்வாகம என்றால் என்ன?

## 6.5. விவசாய விலை நிர்ணயம்

1952-53 ஐ அடிப்படை ஆண்டாகக் கொண்டு பார்க்கும் பொழுது 1950-51ல் விவசாய விலைகள் 110 ஆகவும், 1960-61ல் இவை 123.8 ஆகவும் இருந்தன. 1993-94ஐ அடிப்படை ஆண்டாக வைத்துப் பார்க்கும்பொழுது விவசாய விலை குறியீடு 1994-95ல் 116.1 ஆக இருந்த நிலை மாறி 2004-05ல் 186.6 ஆகியது. (61 சதவிகிதம் அதிகம்) இத்தகைய போக்கு திட்டக் காலத்தில் விவசாயப் பொருட்களின் விலைகள் செங்குத்தாக உயர்ந்துள்ளன என்பதை காட்டுகிறது.

**விவசாயப் பொருட்களின் விலைகளின் ஏற்ற இறக்குமதிக்கான காரணங்கள் :**(Causes for fluctuations in agricultural prices)

1. பணிஅளிப்பு அதிகமாதல் : வளர்ச்சித் திட்டங்களுக்காக அரசுகள் அதிகப் பணம் செலவு செய்யும் பொழுது, அதிகப் பணம் பொருளாதாரத்திற்குள் வருகிறது. இதனால் உணவு தானியத் தேவை அதிகரிக்கிறது. திடீரென உணவு தானிய அளிப்பை அதிகரிக்க இயலாதபோது. அவற்றின் விலைகள் ஏறுமுகமாக ஆகின்றன.

குறிப்பு

2. விவசாயப் பொருட்கள் பருவ காலத்தில் மட்டும் அளிக்கப்படுதல்: இந்தியாவில் விவசாயம் பருவ மழையை நம்பி நிற்கிறது. பருவமழை நிச்சயமற்றது. எனவே விவசாய விலைகள் மாறுபாட்டிற்கு உள்ளாகின்றன.
3. போதாத அளவான விற்பனை செய்யக்கூடிய உபரி: விற்பனை செய்யக் கூடிய உபரி குறைவாக இருப்பதால் நிலையற்று இருக்கக்கூடிய நிலை ஏற்படுகிறது. இதன் காரணம் குறைவான உற்பத்தித்திறனும் மிக அதிகமான நுகரும் மனப்பாங்கும் ஆகும்.
4. அதிகரித்து வரும் மக்கள் தொகை: அதிகரித்து வரும் மக்கள் தொகையால் உணவுக்கு அதிகத் தேவை எழுகிறது. உற்பத்தி குறையும்பொழுது விலைகள் ஏறுமுகமாகின்றன.
5. நகர்மயமாதல் : விரைவான தொழில்மயமும் நகர்மயமும் உணவுக்கு அதிகத் தேவையை உண்டாக்கின. ஆனால் விவசாயம் கவனிக்கப்படாமல் இருந்தபொழுது, குறைவான உணவு தானிய அளிப்பு இருந்ததால் விலைகள் அதிகரிக்கின்றன.
6. குறைவான வருமானமுடையவர்களுக்கு அதிக உணவு தேவைப்பட்டது : உணவு நுகர்வில் மாற்றம் ஏற்பட்டது. குறைவான வருமானம் உடையவர்கள் அதிக உணவை விரும்புகிறார்கள். கோருகிறார்கள்.
7. பதுக்கல்: ஊக வாணிபர்கள் பற்றாக்குறை காலத்தில் அதிக லாபம் பெறுவதற்காக உணவு தானியங்களை பதுக்குகிறார்கள். இது விலைவாசியை உயர்த்துகிறது.
8. விவசாயப் பொருட்களின் ஏற்றுமதி : உள்நாட்டுத் தேவை புறக்கணிக்கப்பட்டது. விவசாயப் பொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. இது விலை உயர்வுக்கு காரணமாகியது.
9. மற்ற காரணங்கள் : மிகக் குறைவான இருப்பு, முறையற்ற பகிர்வு, உற்பத்திச் செலவு அதிகரித்தல், தேவை அளிப்பு இவற்றிடையே உருவான சமநிலையற்ற நிலை முதலியன விசாயப் பொருட்களின் ஏற்ற இறக்கங்கட்கு கொண்டு சென்றன.

**விலைகள் நிலையற்றிருத்தலின் தாக்கம்**

1. **விவசாயிகளது வுருவாய் குறைதல் :** விவசாய விலைகளின் மிதமிஞ்சிய வீழ்ச்சி மிகவும் ஆபத்தானது. காரணம் அது விவசாயிகளின் வருமானம் மிகவும் குறையகக் காரணமாக இருக்கிறது. விவசாயிகள் தங்களது கடின உழைப்புக்கு ஏற்ற வருமானம் பெறவில்லை.

2. **விவசாயப் பொருட்களின் அளிப்பு குறைதல்:** விவசாய விலைகள் குறைவதனால் விவசாயிகளில் பொரும்பாலனோர் துன்பம் அடைகின்றனர். இதனால் அரசின் வருவாய் குறைகிறது. மேலும் விவசாயிகள் உற்பத்தியை பெருக்க ஊக்கம் இல்லாதது போகின்றனர்.
3. **தொழில் பொருட்களில் தேவை குறைதல்:** விவசாயப் பொருட்களின் விலைகள் வீழ்ச்சியுறுவதனால் கிராம மக்களின் வாங்கும் சக்தி குறைகிறது. இது தொழில் பொருட்களின் தேவை குறையுமாறு செய்கிறது.



4. **அதிக முதலீடு:** உணவு அளிப்பை அதிகப்படுத்த நடவடிக்கை எடுக்காமல் அதிக முதலீடு செய்ததால் விலை அமைப்பு உருமாறியது.

5. **மற்ற விளைவுகள்:** குறு மற்றும் சிறு விவசாயிகள் கடனில் மூழ்கினர். அவர்கள் தங்களது நிலத்தின் ஒரு பகுதியை விற்பதற்கு கட்டாயப்படுத்தப்பட்டனர்.

இவ்வாறு அதிக விலையும் குறைந்த விலையும் பொருளாதாரத்திற்கு சிக்கலை உருவாக்குகின்றன. எனவே விவசாயப் பொருட்களின் விலைகளை நிலைப்படுத்த நடவடிக்கை எடுக்க வேண்டியது அவசியம்.

**விலையை உறுதிப்படுத்துதல் (Price Stabilization) :**

விலையை உறுதிப்படுத்துதல் என்பதும் விலைக்கோட்டை கட்டுப்பாட்டில் வைத்திருப்பதும் ஒன்றல்ல. அது விலைகள் தாறுமாறான ஏற்ற இறக்கங்கட்டு உட்படுதலைத் தவிர்த்தலை நோக்கமாக கொண்டது. அது விலைகள் குறைவதையும் அதிகமாவதையும் தடுக்கிறது. உண்மையான விலை உறுதிப்பாடு என்பது விலைகள் மிக ஏறாமல் பார்த்துக் கொள்வதிலும் மற்றும் அவை அதளபாதாளத்தில் போய்விட்டால் பார்த்துக் கொள்வதிலும் அடங்கியிருக்கிறது. விலை உறுதிப்பாடு தகுதியற்ற உற்பத்தியாளரை பணக்காரராக்காது. அதுபோல நியாயமான, திறமையான விவசாயிகள் அழிந்து போவதையும் அது தடுக்க வேண்டும்.

**விவசாய விலைகளை உறுதியாக, திடநிலையில் வைத்திருக்க வேண்டியதன் தேவை:**

உற்பத்தியாளர் தாங்கள் சந்தைக்கு கொண்டுபோகும் உபரிக்கு நல்ல விலை கிடைத்தாலொழிய என்ன உற்பத்தி செய்தாலும்

பெரும்பாலானோரது வாழ்க்கைத்தரம் உயராது. ஒரு குறைந்த அளவு விலையை உறுதிப்படுத்துவது விவசாயத்தில் நிலையான தன்மையை கொண்டு வருவதோடு வாழ்க்கையில் மற்ற துறைகளிலும் உறுதிப்பாட்டை வளர்க்கும்.

குறிப்பு

விவசாய விலைகள் பற்றிய விலைத் துணைக்குழு கீழ்க்கண்ட காரணங்களினால் விவசாய விலைகளின் உறுதிப்பாடு (ஏற்ற இறக்கம் இல்லாத நிலை) தேவை என குறிப்பிட்டது. மேலும் கீழ்க்கண்ட காரணங்களினால் நிலையான விவசாய விலைகளைப் பெற விலைகள் உறுதிப்படத்தப்பட வேண்டும்.

1. நிலையான விவசாய வருமானத்தை பெறவும் விவசாயம் மற்றும் தொழில் துறை வருமானங்களிடையே சரிசம நிலையைப் பெறவும் விலைகள் உத்தரவாதம் செய்யபட வேண்டும்.
2. நுகர்வோரது விருப்பத்தை பாதுகாக்க, ஒரு உச்ச அளவிற்கு மேல் விலைகள் அதிகரிப்பது தடுக்கப்பட வேண்டும்.
3. நியாயமான விலை என்பது அறிவிற்கு ஏற்புடைய வாழ்க்கைத் தரத்தில் உற்பத்தியாளர் தன்னையும் தன் குடும்பத்தையும் பராமரித்துக் கொள்ள உதவ வேண்டும்.
4. குறைந்தபட்ச விலை நிர்ணயம் என்பது அந்த விலையில் அளிக்கப்படும் எல்லா விவசாயப் பொருட்களையும் அரசு வாங்கும் என்பதை குறிப்பிடுகிறது.
5. விலைகள் குறிப்பிட்ட குறைந்தபட்ச எல்லைக்கு மேலே சென்றால் அரசு தனது இருப்பை அங்காடிக்கு கொண்டு வந்து குறிபிட்ட விலைகளில் விற்கும்.

## 6.6. உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

1. விற்பனை செய்வது விளைபொருட்களை இடம், காலம் பார்த்து விற்பனை செய்வது ஆகிய பணிகளை எல்லாம் உள்ளடக்கியதே பண்ணை நிர்வாகமாகும

2 விவசாயி ஒன்றாகக் கூட்டுறவு அடிப்படையில் இணைந்து வேளாண்மை செய்யலாம். இத்தகைய கூட்டுறவு நிர்வாகம் பலமுறைகளில் அமையலாம், தனியார் நிர்வாகத்தில் இருக்கின்ற சுரண்டல் கூட்டுறவு நிர்வாகத்தில் இருக்காது.

# அலகு - 7 பயிர் காப்பீடு திட்டம்



குறிப்பு

## 7.1 நோக்கங்கள்

1. பயீர் காப்பீடு – தேவைகள் முக்கியத்துவம் பற்றி அறிந்து கொள்ள.
2. மானியம் -பொது விநியோக அமைப்பு ( PDS ) மற்றும்

உணவு பாதுகாப்புபற்றிய அறிவு பெறுவதற்காக

## 7.2 பொருள் - பயீர் காப்பீடு

பயிர் காப்பீடு திட்டத்தில் சேர்ந்த விவசாயி தன் வயலில் அறுவடை செய்து களத்தில் வைத்திருந்த பயிர், புயல் அல்லது மழை காரணமாக அழிய நேரிட்டால் அடுத்த 48 மணி நேரத்துக்குள் பயிர் காப்பீடு அலுவலகத்துக்கு தெரியப்படுத்த வேண்டும். ஏற்பட்ட சேதத்துக்கு ஏற்ப இழப்பீட்டு கிடைக்கும்.

## 7.3. பயீர் காப்பீடு – தேவைகள் முக்கியத்துவம்

பயிர் காப்பீட்டுத் திட்டத்தில் இணைந்துள்ள ஒரு விவசாயி தன் வயலில் சாகுபடி பணிகளைத் தொடங்கிய பிறகு போதுமான மழை இல்லாதது அல்லது அதிக மழை காரணமாக விதைப்பு அல்லது நடவுப் பணியைத் தொடர முடியாமல் போனால் பயிர் காப்பீட்டு நிறுவனம் இழப்பீட்டுத் தொகை வழங்கும்.

அதிக மழை அல்லது அதிக வறட்சி அல்லது பிற இயற்கை சீற்றங்களால் பயிர் சாகுபடி பாதித்து, மகசூல் பாதிப்பு 50 சதவீதத்துக்கும் மேல் இருக்கும் என தெரிய வந்தால் 25 சதவீத காப்பீட்டுத் தொகை முதலில் வழங்கப்படும்.

குறிப்பு

மகசூல் இழப்பீடு பற்றி துல்லியமாக இறுதி மதிப்பீடு செய்யப்பட்ட பிறகு மீதி இழப்பீட்டுத் தொகை வழங்கப்படும்.

இதற்கு முன்னர் தேசிய வேளாண் காப்பீட்டுத் திட்டம் செயல்படுத்தப்பட்டு வந்தது. அந்தத் திட்டத்தின்படி விவசாயிகளுக்கு வழங்க வேண்டிய காப்பீட்டுத் தொகையை மத்திய மாநில அரசுகள் வழங்கி வந்தன.

இந்த ஆண்டு முதல் அனைத்து மாவட்டங்களிலும் மேம்பட்ட தேசிய வேளாண் காப்பீட்டுத் திட்டம் அமலுக்கு வந்துள்ளது. இந்தத் திட்டத்தின்படி விவசாயிகளுக்கு வழங்க வேண்டிய காப்பீட்டுத் தொகை முழுவதையும் தேசிய வேளாண் காப்பீட்டு நிறுவனமே வழங்கிட வேண்டும்.

இயற்கை பேரழிவு, போதிய மழையின்மை உட்பட பல்வேறு காரணங்களால் நெல் உட்பட பல்வேறு பயிர்கள் அழிகின்றன. சூறைகாற்றால் வாழை மரம் அடியோடு சாய்கின்றது. போதிய தண்ணீர் இன்றி கரும்பு காய்கின்றது. இது போன்ற பல இன்னல்களால் விவசாயிகள் பாதிக்கப்படுகின்றனர். அவர்கள் விவசாயத்தில் செய்த முதலீடு. உழைப்பு எல்லாம் வீணாகி கடன் காரர்களாகன தற்கொலை செய்யும் துர்பாக்கிய நிலை ஏற்படுகிறது.

இது போன்ற இடர்பாடுகளில் இருந்து விசாயிகளை காப்பாற்ற வேளாண் பயிர் காப்பீடு திட்டம் உள்ளது. இந்த குறையை நிவர்த்தி செய்யும் வகையிலும், தொடர்ந்து இரண்டு வருடங்களாக வறட்சி, பெருமழை என பாதிக்கப்பட்டுள்ள விவசாயிகளுக்கு குறைந்த பிரிமியத்தில் காப்பீடு திட்டத்தை மத்திய அரசு அறிமுகப்படுத்தியுள்ளது.

இந்த திட்டம், ஏற்கனவே செயல்படுத்தப்பட்டு வருகிற தேசிய விவசாய பயிர் காப்பீடு திட்டம் ஆகிய இரு திட்டங்களும் மாற்று திட்டமாக அமையும். இந்த புதிய பயிர் காப்பீட்டு திட்டம் நடப்பு ஆண்டின் கரீப் பருவத்தில் இருந்து செயல்படுத்தப்படும். இந்த திட்டத்தின்மூலம் 19.44 கோடி ஹெக்டேர் சாகுபடி பரப்பில் 50 சதவீதம் பலன் பெறும். புதிய பயிர் காப்பீட்டு திட்டத்தை தனியார் காப்பீட்டு நிறுவுனங்களும், இந்திய விவசாய காப்பீட்டு நிறுவனமும் செயல்படுத்தும்.

## 7.4. பயீர் காப்பீடு - முக்கியத்துவம்

கரீப் பருவத்தின்போது உணவு தானியங்கள், எண்ணெய் வித்துக்களைப் பயிரிடும் விசாயிகள் காப்பீட்டு நிறுவனம் நிர்ணயிக்கும் காப்பீட்டுச் சந்தாவில் 2% மட்டுமே செலுத்தினால் போதும். ராபி பருவத்தின்போது சந்தாவில் 1.5% மட்டுமே செலுத்தினால் போதும். இவ்விரு பருவங்களிலும் பயிரிடப்படும் தோட்டப் பயிர்கள், கரும்பு, பருத்தி உள்ளிட்ட பணப் பயிர்களுக்கு பிரிமியத்தில் 5% மட்டும் செலுத்தினால் போதும். மீதமுள்ள பிரிமியத்தை மத்திய மாநில அரசுகள் சமவிகிதத்தில் பகிர்ந்துகொள்ளும்.

குறிப்பு

இந்தக் காப்பீட்டில் பயிர் இழப்பு ஏற்பட்டால் விவசாயிகள் பெறக்கூடிய இழப்பீட்டுக்கு உச்ச வரம்பு கிடையாது. காப்பீடு செய்யும் அளவுக்கும் வரம்பு கிடையாது. காப்பீடு நிறுவனங்கள் இழப்பீடாகத் தரும் தொகைக்கு முனப் உச்ச வரம்பு இருந்தது. இப்போது இந்த உச்சவரம்பு நீக்கப்பட்டுள்ளது.

புயல், மழை, பருவம் தப்பிய மழை, வறட்சி, நிலச்சரிவு அறுவடையின்போதான மழை போன்ற காரணங்களால் ஏற்படும் பயிர்ச் சேதங்களுக்கு இழப்பீடு பெற முடியும். பயிர்ச் சேதத்தின் அளவையும் தீவரத்தையும் மதிப்பிட செயற்கைக்கோள்கள், ஆளில்லா சிறுவிமானங்கள் போன்ற நவீனத் தொழில்நுட்பங்கள் பயன்படுத்தப்படும். விவசாயிகள் தங்களுடைய செல்போனிலும் புகைப்படங்களை எடுத்துப் பதிவேற்றம் செய்யலாம். இத்தகவல் கிடைத்து சரிபார்க்கப்பட்டு, இழப்பீட்டு மதிப்பில் 25 சதவிகிதம் விவசாயின் வங்கிக் கணக்கில் உடனடியாகச் சேர்க்கப்படும். பெரிய விவசாயிகள் அதிகப் பரப்பளவில் பயிரிட்டிருந்தாலும் இதில் சேரவும், காப்பீடு பெறவும் எந்தத் தடையும் இல்லை. ஒரு மாநிலம் முழுக்க ஒரேயொரு காப்பீடு நிறுவனம்தான் இப்பணியை மேற்கொள்ளும். எனவே இழப்பீடு கோருதல், பெறுதல் போன்றவை அலைச்சல் இல்லாமல் நடைபெறும்.

. நிலம் சொந்தமாக இல்லாமல் குத்தகைக்கு நிலத்தை பெற்று விவசாயம் செய்யும் விவசாயிகளும் இந்த புதிய காப்பீடு திட்டத்தில் பலன் பெற உரிய சட்டத் திருத்தங்களை மாநில அரசுகள் மேற்கொள்ள வேண்டும் என்று மத்திய அரசு கேட்டுக் கொண்டுள்ளது.

பயிர்க் காப்பீட்டுத் திட்டத்தோடு விவசாயி தன்னை இணைத்துக் கொண்டால், பேரிடர்க் காலங்களில் விவசாயிகளுக்கு மிகப் பெரிய உதவியாக இது அமையும். பிரதம மந்திரி பயிர்க் காப்பீட்டுத்

குறிப்பு

திட்டத்துக்கு மிகப் பெரிய வரறே்பு கிட்டியிருக்கிறது. பரவலாக்கம் ஏற்பட்டிருக்கிறது. இது மிகவும் எளிமைப்படுத்தப்பட்டிருக்கிறது. இதில் ஏகப்பட்ட தொழில்நுட்ப உள்ளீடுகள் புகுத்தப்பட்டிருக்கின்றன. இது மட்டுமல்ல, பயிர் அறுவடை முடிந்து 15 நாட்கள் கழித்துக் கூட மகசூலுக்கு ஏதும் குந்தகம் ஏற்பட்டால், அதற்கும் வழிவகை இந்தத் திட்டத்தில் செய்யப்பட்டிருக்கிறது. தொழில்நுட்ப பயன்பாடு மூலமாக எப்படி காப்பீட்டுத் தொகை பயனாளிக்கு விரைவாகக் கொண்டு சேர்க்கப்பட முடியும் என்பது பற்றியெல்லாம் ஆழ்ந்த கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது.

புதிய காப்பீட்டுத் திட்டத்தில் விவசாயிகளுக்கான அதிகபட்ச ப்ரீமியம் தொகை, முன்பட்டப் பயிர்களுக்கு 2 சதவீதமும், குறுவைப்பட்டப் பயிர்களுக்கு 1.5 சதவீதமாகவும் இருக்கும்.

இது வரை பயிர் காப்பீடு திட்டம் போதிய பலனை கொடுக்கவில்லை. இதனால் விவசாயிகளின் பாதிப்பும், கஷ்டமும் குறையவில்லை. இந்தியாவில் 195.26 மில்லியன் ஹெக்டேர் (1 மில்லியன்-பத்து லட்சம்) நிலப்பரப்பில் பல்வேறு பயிர்கள் சாகுபடி செய்யப்பட்டது. 2014ல் 42.82 மில்லியன் ஹெக்டேர் மட்டுமே காப்பீடு செய்யப்பட்டது. அதாவது மொத்த பரப்பளவில் 22 சதவிகிதம் மட்டுமே பயிர் காப்பீடு செய்யப்பட்டது. ராஜஸ்தான், சத்திஷ்கர், ஒடிசா, பீகார், கர்நாடகா ஆகிய மாநிலங்களில் கணிசமான அளவு பயிர் காப்பீடு செய்யப்பட்டுள்ளது. குஜராத், உத்தரபிரதேசம், மேற்குவங்கம் போன்ற மாநிலங்களில் சாகுபடி செய்யப்பட்ட பரப்பளவில் பத்து சதவிகிதம் மட்டுமே காப்பீடு செய்யப்பட்டன. அதிக பரப்பளவில் பயிர் காப்பீடு செய்யப்படவில்லை என்பது மட்டுமல்ல, காப்பீடு செய்த தொகையும் மிக குறைவாக உள்ளது.

வேளாண் விளை பொருட்களுக்கு விலை நிர்ணயிக்கும் கமிஷன் பார் அக்ரிகல்சர் காஸ்ட் அண்ட் பிரைசஸ் என்ற அமைப்பின் தகவலின்படி 2013-14 ம் நிதி ஆண்டில் மட்டுமே (கரீப் பருவத்தில் ரூ.19,141. ரபி பருவத்தில் ரூ.16,927) இந்த காப்பீடு தொகை என்பது காப்பீடு செய்யப்பட்ட பயிர்களின் விளைச்சலின் மதிப்பில் மிக குறைவு.

அகில இந்திய அளவில் ஒரு ஹெக்டேருக்கு 36 குவிண்டால் நெல் உற்பத்தியாகும் என்று கணக்கிடப்பட்டுள்ளது. 2013-14ம் நிதி ஆண்டில் நெல் குவிண்டாலுக்கு குறைந்த பட்ச ஆதார விலை ரூ.1,310

குறிப்பு

அப்படியெனில் 36 குவிண்டால் நெல்லின் மதிப்பு ரூ.47,160 ஆனால் பயிர் காப்பீடு திட்டத்தின் படி செய்யப்படும் காப்பீடுக்கு கிடைக்கும் நஷ்டஈடு, பாதி அளவு கூட இல்லை. இதுவே பெரும்பான்மையான விவசாயிகள் பயிர் காப்பீடு செய்து கொள்ள ஆர்வம் காட்டாதற்கு காரணம்.

தற்போது புதிய காப்பீடு திட்டத்தில் வறட்சி போன்ற இயற்கை பேரழிவுகள் ஆண்டுகளைச் சேர்க்காமல், ஏழு ஆண்டுகளில் உற்பத்தியான பயிர் அளவின் மதிப்பு கணக்கிடப்படும். அதுவும் நாடு முழுவதும் ஒரே அளவாக இல்லாமல் அந்தந்த கிராமங்களில் உற்பத்தியாகும் தானியங்களின் அளவு கணக்கிடப்படும். இதன் அடிப்படையில் பிரிமியம், காப்பீடு தொகை நிர்ணயிக்கப்படும். இந்த புதிய காப்பீடு திட்டம் வரும் கரீப் பருவம் முதல் அமல்படுத்தப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

**கரும்பு**

1967-68ல் 95.50 மில்லியன் டன்னாக இருந்த கரும்பு உற்பத்தி 2006-07-ல் 270 மில்லியன் டன்னாக ஆழ்துறை கிணற்று பாசனம் மற்றும் வாய்க்கால் பாசனம் மூலம் உயர்ந்தது.

**எண்ணெய் வித்துக்கள் மற்றும் பருத்தி உற்பத்தி :**

1980ளில் எண்ணெய் வித்துக்களில் மஞ்சள் புரட்சி ஏற்பட்டு உற்பத்தி திறன் வெகுவாக உயர்த்தப்பட்டது. 1990களில் பருத்தி மகசூல் அதிகரிக்கப்பட்டது. பருத்தியில் 1967-68ல் 5.78மில்லியன் பேல் 1 பேல் என்பது 170 கிலோ என்ற அளவில் இருந்து (2005-2006ல் 18.50 மில்லியன் பேல்களாக அதிகரிக்கப்பட்டது.

**முட்டை உற்பத்தி:**

1968-69களில் 5.3 மில்லியன் முட்டைகளாக இருந்தது. 2006-07ல் மில்லியன் முட்டைகளாகக் உயர்ந்தது.

**மீன் உற்பத்தி :**

1965-66ல் 1.33 மில்லியன் டன்னாக இருந்த மீன் உற்பத்தி 2006-07ல் 6.30 மில்லியன் டன்களாக 5 மடங்கு உயர்ந்தது.

**1980 களில் ஏற்பட்ட மாற்று பயிர் திட்டம்:**

இந்த காலகட்டத்திலே நெல் வயல்கள் சில மீன் குட்டைகளாக மாறின மக்காசோள தென் இந்திய கடற்கரை உற்பத்தி அதிகரிப்பால் நிறைய கொழி பண்ணைகள் உருவாயின சிறு தானியங்கள் எண்ணெய் மாநிலங்களில் தென்னை அதிகம் சாகுபடி செய்யப்பட்டது. ஏறத்தாழ ஓரம்

கட்டப்பட்டன வித்து பயிர்கள் 10 மில்லியன் ஹெக்டேர் பரப்பளவில் சாகுபடி செய்த உணவு தானிய பயிர்கள் அடியோடு பணபயிர் சாகுபடிக்காக மாற்றப்பட்டன இதனால் மேலும் அவர்களது வாழ்வாதாரமும், விவசாயிகளின் பொருளாதாரமும் சற்று மேம்பட்டது.

குறிப்பு

அறுவடைக்குப் பிந்தைய இழப்புகளுக்கும் சேர்த்து காப்பீடு செய்ய முடியும்.

- தண்ணீரில் மூழ்கிய பயிர்களுக்கும் இழப்பீடு உண்டு.
- ஏற்கனவே இருந்த தேசிய வேளாண் காப்பீட்டுத் திட்டத்தில் புயல் பாதிப்பு இழப்பீடு கடலோர மாவட்டங்களுக்கு மட்டுமே கிடைக்கும் என்ற நிலை இருந்தது. ஆனால் புதிய திட்டத்தில் அனைத்து பகுதிகளுக்கும் புயல் பாதிப்பு இழப்பீடு வழங்கப்படும்.
- ஏற்கனவே உள்ள பயிர்க் காப்பீட்டுத் திட்டங்களில் இழப்பீடு பெற விவசாயிகள் ஆண்டுக்கணக்கில் காத்திருக்க வேண்டியிருந்தது. ஆனால் புதிய திட்டத்தில் 30 முதல் 45 நாட்களுக்குள் இழப்பீடு வழங்கப்படும் எனச் சொல்லப்படுகிறது.
- விதைப்புக்கும் அறுவடைக்கும் இடைப்பட்ட காலத்தில் காற்று, பூச்சி, நோய்த்தாக்குதலால் பயிர்களில் ஏதேனும் பாதிப்புகள் நேர்ந்தால் மொத்தக் காப்பீட்டுத் தொகையில் 25 சதவிகிதம் அப்போதே கிடைக்கும். அறுவடைக்குப் பிந்தைய இழப்புகளுக்கும் காப்பீடு பெறலாம்.

## 7.5. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. பயிர் காப்பீட்டின் அவசியம் என்ன?

2.முடைக்கால கையிருப்பு (Buffer Stock)என்றால் என்ன?

## 7.6 மானியம் (Subsidy)

வேளாண்மையே நாட்டின் பொருளாதாரத்திற்கு அடிப்படை என்ற நோக்கத்தில் மத்திய மாநில அரசுகள் விவசாயிகளுக்கு பல்வேறு மாநில உதவிகளுடன் கூடிய திட்டங்களை செயல்படுத்தி வருகின்றன.

**தேசிய வேளாண் அபிவிருத்தி திட்டம்:**

இந்த திட்டத்தில் ஒருங்கிணைந்த உணவு தானிய உற்பத்தியில் நெல்லுக்கு விதை விநியோக மானியமாக பத்து ஆண்டுகளுக்குள்

குறிப்பு

வெளியிடப்பட்ட ரகங்களுக்கு மட்டும் ஒரு கிலோவிற்கு ரூ.10 வழங்கப்படுகிறது.இயந்திர நடவுமுறையை பிரபலபடுத்துவதில் ஹெக்டேருக்கு 3 ஆயிரமும் விதை உற்பத்தி மானியமாக பத்து ஆண்டுகளுக்குள் வெளியிடப்பட்ட ரகங்களுக்கு மட்டும் கிலோவிற்கு ரூ.5ம் வழங்கப்படுகிறது.

சிறு தானிய விதை உற்பத்தி மானியமாக பத்து ஆண்டுகளுக்குள் வெளியிடப்பட்ட ரகங்களுக்கு மட்டும் கிலோவுக்கு ரூ.10 ரூபாயும், உயர்விளைச்சல் விதை விநியோக மானியமாக 10 ஆண்டுகளுக்குள் வெளியிடப்பட்ட ரகங்களுக்கு மட்டும் கிலோவுக்கு 15ம், நுண்ணூட்ட கலவை விநியோகத்திற்கு ஹெக்டேருக்கு ரூ.500 வழங்கப்படுகிறது. பயிர் வகையில் நடவுமுறை துவரை சாகுபடி ஊக்குவிப்பு மானியமாக ஹெக்டேருக்கு ரூ.2500ம், டி.ஏ.பி. கரைசல் தெளித்தலுக்கு ஹெக்டேருக்கு ரூ.650ம் வரப்பு பயிராக பயிறு வகை சாகுபடிக்கு ஹெக்டேருக்கு ரூ.100ம் விதை உற்பத்தி மானியம் கிலோவிற்கு ரூ.15ம் வழங்கப்படுகிறது.

எண்ணெய்வித்து இயக்கத்தில் விதைப்பு எந்திரத்தின் மூலம் மணிலா விதைக்க ஹெக்டேருக்கு ரூ.1000 திரவ உயிர் உரம் விநியோக்த்திற்கு ஹெக்டேருக்கு ரூ.150 மணிலா பயிர் வளர்ச்சி ஊக்கி பரவலாக்குதல் திட்டத்தில் ஹெக்டேருக்கு ரூ.1300 மானியமாக வழங்கப்படுகிறது. கரும்புத் தோகை நில போர்வை மூலம் மண் வள ஊட்டமேற்றுதல், இரும்பு சல்பே∴ட் இடுதல் திட்டத்தில் கரும்பு தோகை உரித்துநில போர்வை அமைத்தலுக்கு ஹெக்டேருக்கு ரூ.2500ம் இரும்பு சல்பேட் இடுதலுக்கு ஹெக்டேருக்கு ரூ.500ம் வழங்கப்படுகிறது.

**தென்னங்கன்று விநியோகத்தில்** நெட்டை கன்றுக்கு ரூ.15ம் குட்டைக்கன்றுக்கு ரூ.25ம் குட்டை நெட்டைகன்றுக்கு ரூ.50ம் மானியம் வழங்கப்படுகிறது.

**தேசிய எண்ணெய் வித்து எண்ணெய் பனை இயக்கம்** : விதைக்கன்றுகள் விநியோகத்திற்கு ரூ.8000ம் முதல் வருட நடவு பராமரிப்பிற்கு ரூ.4000ம் 2ம் வருட நடவு பராமரிப்பிற்கு ரூ.4000ம் மூன்றாம் வருட நடவு பராமரிப்பிற்கு ரூ.4000ம் நான்காம் வருட நடவு பராமரிப்பிற்கு ரூ.4000ம் (n`f;NlUf;F) மானியம் வழங்கப்படுகிறது. முதல் வருட எண்ணெய் பனையில் ஊடு பயிரிட 3 ஆயிரமும் 2ம் வருட எண்ணெய் பனை சாகுபடியில் ஊடு பயிருக்கு ரூ.3000 (ஹெக்டேருக்கு) வீதம் மானியம் வழங்கப்படுகிறது. ஆதார விதை உற்பத்திக்கு 15 ஆண்டுகளுக்குள்

வெளியிடப்பட்ட ரகங்களுக்கு மட்டும் கிலோவுக்கு ரூ.10ம் சான்று விதை உற்பத்திக்கு கிலோ ரூ.10ம் சான்று விதை விநியோகத்திற்கு 50 சதவிகிதம் அல்லது கிலோவுக்கு ரூ.12 மானியம் வழங்கப்படுகிறது. பெருவிளக்க பண்ணை அமைத்தலுக்கு ஹெக்டேருக்கு ரூ.7000 வழங்கப்படுகிறது.

**விதை கிராம திட்டம்** : சான்று விதை விநியோகத்திற்கு நெல்லுக்கு கிலோவுக்கு ரூ.10ம் சிறுதானியத்திற்கு கிலோவுக்கு ரூ.15ம் பயறு வகைக்கு கிலோவிற்கு ரூ.25 ம் எண்ணெய் வித்துக்கு கிலோவுக்கு ரூ.12ம் மானியம் உண்டு.

**குறிப்பு**

தேசிய உணவு பாதுகாப்பு திட்டம் (பயிறு வகை) 15 ஆண்டுகளுக்குள் வெளியிடப்பட்ட ரகங்கள் மற்றும் சான்று விதை விநியோகத்திற்கு கிலோவுக்கு ரூ.25ம், தொகுப்பு பயறு வகை தொழில்நுட்ப சாகுபடி செயல் விளக்கத்திற்கு ஹெக்டேருக்கு ரூ.4000ம், ஊடு பயறு வகை தொழில்நுட்ப சாகுபடி செயல்விளக்கத்திற்கு ஹெக்டேருக்கு ரூ.7500ம் மானியம் அளிக்கப்படுகிறது.

## 7.7 பொது விநியோக முறை (Pubilc Distribution System)

அரசினால் நிர்ணயம் செய்யப்பட்ட விலையில் நியாய விலைக் கடைகள் மூலம் அத்யாவசிய பண்டங்களை விநியோகிக்கும் முறையே பொது விநியோக முறை எனப்படுகிறது. நிலையான விலை நிலமைகளைப் பராமரிக்க இம்முறை உதவுகிறது. விலையைக் கட்டுப்படுத்தவும், விலை ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கவும், முக்கியமான நுகர்வோர் பொருட்களின் சமமான பகிர்வைப் பெறவும் இந்திய அரசின் உத்தியாக பொது விநியோக முறை அமைந்துள்ளது. ஏழ்மை ஒழிப்பில் அரசின் உத்தியின் ஒரு முக்கியப் பகுதியாக பொது விநியோகமுறை செயல்படுகிறது. இதன் மூலம் சமுதாயத்திலுள்ள நலிவடைந்த பிரிவினரின் உணவுப் பாதுகாப்பு பலப்படுத்தப்படுகிறது.

**விநியோகிக்கப்படும் பொருட்கள்:**

பொது விநியோக முறையில் கோதுவை, அரிசி, சீனி, பருப்பு வகைகள், சாப்பாட்டு எண்ணெய் முதலியன விநியோகிக்கப்படுகின்றன. இது தவிர, சோப்பு, தேயிலை, பாடப்புத்தங்கள் முதலியனவும் அளிக்கப்படுகின்றன. இத்தகைய பொது விநியோக நிறுவனங்கள் மூலம் மண்ணெண்ணெய் விலைக்கட்டுப்பாடு உள்ள துணிகள் முதலியனவும் கொடுக்கப்படுகின்றன. சில மாநிலங்களில் தீப்பெட்டிகள், சைக்கிள் டயர்கள், டியூப்கள் முதலியவும் நுகர்வோருக்கு விநியோகிக்கப்படுகின்றன.

**கொள்முதல் மூலம் ஆதரவு:**

பொது விநியோகமுறை கொள்முதலின் அளவு மற்றும் முடைக்கால கையிருப்பு நடவடிக்கைகளோடு நேரடியாக தொடர்புடையது. பொதுவாக இந்தியாவில் கொள்முதல், விலை ஆதரவு நடவடிக்கைகளின் அடிப்படையில் நடைபெற்று வருகிறது. எனினும் பொது விநியோகத்திற்காக போதுமான அளவு பெறுவது கடினமாக இருக்கும்பொழுது அரசு விவசாயிகளிடம் கட்டாய கொள்முதலில் இறங்குகிறது. விவசாயி தவிர, ஆலை அதிபர்கள், வியாபாரிகளிடமும் கொள்முதல் செய்கிறது. மத்திய தொகுப்பிற்கு இருப்பாக உள்ளதை இறக்குமதியும் செய்கிறது. மத்திய தொகுப்பில் இருப்பாக உள்ள உணவுதானியங்கள் அடிப்படையில், பொது விநியோக முறையின் கீழ்வரும் நுகர்வோருக்கு பயன்படுத்தப்படுகிறது. அது விலை அதிகமாக இருக்கும்பொழுது சந்தையில் தலையிடும் கருவியாகவும் அமைகிறது. கொள்முதல் அளவு 1964ல் 1.43 அவள ஆக இருந்தது. அது 2000ல் 25.9 அவள அளவாகியது. கோதுமைக்கும் அரிசிக்கும் இடையேயுள்ள கொள்முதல் விகிதம் 1980களில் 1.25:1 ஆக இருந்தது. இது 1990களில் 1:1:14 ஆகியது. உணவுதானியங்களில் பொதுக் கொள்முதல் அதிகரிக்க இரண்டு காரணங்கள் இருந்தன.



மண்டல அளவில் உற்பத்தி அதிகரித்து உபரி பெறப்பட்டது.

சாதகமான விலை ஆதரவுக் கொள்கை கடைப்பிடிக்கப்பட்டது. பஞ்சாப், ஹரியானா, உ.பி. மத்தியப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் கோதுமை மற்றும் அரிசி உற்பத்தியில் உபரி தோன்றியது. இன்றுள்ள அரசின் கொள்கைப்படி கொள்முதலுக்கு தீர்க்கமான இலக்கு குறிப்பிட இயலாது. காரணம் கொள்முதல் நடவடிக்கைகள் தங்கள் பொருட்களை அரசு நிறுவனத்திடமோ வெளியிலோ விற்கு இயலும். பொதுவாக, உணவுதானிய உற்பத்தியில் கொள்முதல் 11 to 12 சதவிகிதமாக உள்ளது. பொதுக் கொள்முதல் முறையை நிர்வாகம் செய்கின்ற நிறுவனங்கள் வருமாறு: இந்திய உணவு தானியகழகம் (Food Corporation of India or FCI), மாநில விற்பனை கழகம், மாநில உணவு தானிய அளிப்புத்துறை, நாட்டளவினவதான நுகர்வோர் (CIL) மற்றுமுள்ள பொதுத்துறை எண்ணெய் நிறுவனங்கள், உணவு தானிய இருப்பு (மைய அரசிடம் உள்ளது) மாநில அரசுகளுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டு நியாய விலைக்கடைகள் மூலம் மக்களுக்கு விநியோகிக்கப்படுகிறது. முன்னர்

குறிப்பு

இருந்த தேவையை அடிப்படையாக கொண்டு ஒவ்வொரு மாநிலத்திற்கும் குறிப்பிட்ட அளவு தானியம் ஒதுக்கப்படுகிறது. 1994லிருந்து ஏழை மக்களுக்கு புதிய முறையை பிரதமர் வெளியிட்டார். 1997ஜுனிலிருந்து இலக்கு அடிப்படை பொது விநியோக முறை (Targetted Pubilc Distribution System) வறுமைக் கோட்டிற்கு கீழ் இருப்பவர்கள் (BPL Families) மற்றும் வறுமைக் கோட்டிற்கு மேல் இருப்பவர்கள் (APL Families) என பாகுபடுத்திய இரண்டுவிதமான மானிய விலை அமைப்பு பின்பற்றப்படுகிறது. 2000 மக்கள் தொகை உள்ள இடங்களுக்கும் இன்று நியாய விலைக்கடை மூலம் கோதுமை, சீனி, அரிசி, உப்பு, பருப்பு, எண்ணெய், மண்ணெண்ணெய் முதலியன விநியோகிக்கப்படுகின்றன. மலைப்பிரதேசங்களில் சீரமைக்கப்பட்ட பொது விநியோக முறை (Revamped Public Distribution Scheme) செயல்பட்டு வருகிறது. உணவுப் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வர மத்திய அரசு எண்ணியுள்ளது. அதன்படி PDSதிட்டத்திற்கு மக்களை வறுமைக்கோட்டீக்கு கீழ் உள்ளவர்கள், வறுமைக்கோட்டீக்கு மேல் உள்ளவர்கள்இ பொது விநியோக விடுபட வேண்டியவர் என மூன்று வகையாக பிரிக்க இருக்கிறது.

**குறைகள்:**

இந்தியாவில் பொது விநியோக முறை கீழ்க்கண்ட குறைகளை உடையதாக இருக்கிறது.

1. **கோதுமை மற்றும் அரிசிக்கு மட்டும் உட்படுத்தப்பட்டுள்ளது:**

பொது விநியோக முறையில் அரிசி மற்றும் கோதுமை மட்டும் விநியோகிக்கப்படுகிறது. மட்டரக, முடரான, உணவு தானியங்களான கம்பு, கேப்பை முதலியவற்றில் கொள்முதல் நடைபெறவில்லை. இத்தகைய முரடானவையே நம்நாட்டு ஏழை மக்களின் நிலையான உணவாக உள்ளது.

**2. நகர்ப்புறங்களுக்கு மட்டும்:**

பொது விநியோகத்துறைப் பொருட்கள் 85 சதவிகிதம் நகர்ப் புறங்களிலேயே விநியோகிக்கப்படுகிறது. நிலமற்ற விவசாயக் கூலிகளும், ஏழைகளும் அதிகம் நன்மை பெற இயலவில்லை. ஆனால் தமிழ்நாடு போன்ற மாநிலங்களில் பொது விநியோகத்துறை ஏழைகளுக்கும் பெரிதும் பயனுள்ளதாக உள்ளது.

**3. போதாமை:**

வறுமைக்கோட்டிற்குக் கீழ் அதிகம் பேர் வாழும் மண்டலங்களில் பொது விநியோகத்துறையின் உள்ளடக்கம் குறைவாக உள்ளது. எடுத்துக்காட்டாக உ.பி.பீகார், ராஜஸ்தான், ம.பி போன்ற மாநிலங்களைக் கூட்டினால் இவற்றில் ஏழ்மைக் கோட்டிற்கு கீழே இருக்கும் மக்களின் பங்கு 47.2 சதவிகிதம். ஆனால் பொது விநியோகத்துறையின் பொருள் அளிப்பில் அகில இந்திய அளவில் இவற்றின் பங்கு 9.73 சதவிகிதம் தான். சில்லரை விலைகளின் தேவையற்ற விலை உயர்விலிருந்து ஏழை நுகர்வோரை காப்பாற்ற திறனுள்ள பொது விநியோகத்துறை பயன்பட்டிருக்கும்.

4. **விலையுயர்வு:**

பொது விநியோக முறை செலவு பிடிக்கக்கூடியது. காரணம் இது மக்களில் தங்களைக் காத்துக் கொள்ள முடியாதவர்களுக்கு மட்டும் உதவக்கூடியது என கட்டுப்படுத்தப்படவில்லை. இதன் பரப்பளவு விரிவாக உள்ளதால், ஒவ்வொரு குடும்பத்திற்கும் கிடைப்பது குறைவாக உள்ளது. மக்களில் பெரும்பாலோரை உள்ளடக்கியுள்ளதால் பொது விநியோகத்துறையை நடத்துவது பெரும் செலவுடையதாக உள்ளது. சில மாநிலங்களில் ஆண்டுத் திட்டச் செலவுடையதாக உள்ளது. சில மாநிலங்களில் ஆண்டுத் திட்டச் செலவில் பொது விநியோக முறைச் செலவு 10 சதவிகிதமாக உள்ளது.

இத்திட்டத்தின் செயலாக்கம், நன்மைகள் குறைவான வருமானம் உடையவர்களுக்கு சென்றடைய வேண்டும். நியாய விலைக்கடைகள் ஏழைகள் சென்றுவர அருகாமையில் இருக்க வேண்டும். இந்தியாவின் பொது விநியோகமுறை உலகத்திலேயே மிகப் பெரியதாக கருதப்படுகிறது.

**2. முடைக்கால கையிருப்பு** (Buffer Stock)

அறுவடை சிறப்பாக இருக்கும் ஆண்டுகளில் அதிகப்பொருள் அளிப்பும் குறைவான விலையும் நிலவுகிறது. மாறாக அறுவடை மோசமான ஆண்டுகளில் பற்றாக்குறையும் கூடுதல் விலையும் நிலவுகிறது. இவ்விதத அதிர்ச்சிகளை குறைக்க உதவும் பண்டங்களின் அளவு தான் முடைக்கால கையிருப்பு எனப்படும். இதில் உள்ளடங்கியுள்ள கருத்து என்னவெனில் நல்ல காலங்களில், விலை குறையும் பொழுது அரசு தலையிட்டு தானியங்களை வாங்குகிறது. மோசமான ஆண்டுகளில் விலை கூடுதலாகும்பொழுது முன்னர் வாங்கியிருந்ததில் ஒரு பகுதியை அரசு

அவிழ்த்துவிடுகிறது. இவ்வித மாறுபாடான வாங்கும், விற்கும் வழிமுறையால் நம் நாட்டில் விலை உறுதிப்பாடு பராமரிக்கப்பட முயற்சி மேற்கொள்ளப்பட்டது. மேலும், முடைக்கால கையிருப்புக் கொள்கை மூலம் அரசு உபரிப்பகுதியில் வாங்கவும், பற்றாக்குறையான பகுதியில் விற்கவும் செய்தது. இதனால் விலைகளில் மண்டலச்சமநிலை ஏற்படுத்தப்படுவதோடு, இருக்கின்ற விளைப்பொருட்களை சீராக விநியோகம் செய்ய முடிகிறது.

**குறிக்கோள்கள்:**

இந்தியாவில் பெரிய விவசாயப் பயிர்களில் கையிருப்புக் கொள்கை பின்பற்றப்படுகிறது. நாட்டில் உணவுப் பொருள் விலைகளையும், பொதுவான விலைமட்டத்தையும் நிலையாக வைத்திருக்க அரசின் கையிருப்புக் கொள்கை உதவுகிறது. இது இரண்டு நோக்கங்களை நிறைவு செய்கிறது. அதாவது (m) விலை குறையும் நேரங்களிலும், செழுமைக் காலங்களிலும் விலை ஆதரவு தருகிறது. மேலும் (M) பற்றாக்குறை காலங்களில் விலை உயர்வை மட்டுப்படுத்துகிறது. அரசின் கையிருப்புக் கொள்கை மூலம் மிதமிஞ்சிய விலை மாறுபாடுகளிலிருந்து உற்பத்தியாளரும் நுகர்வோரும் பாதுகாக்கப்படுகின்றனர்.

கையிருப்புக் கொள்கையின் முக்கிய குறிக்கோளான விலையை நிலைப்படுத்துதல் (Price Stabilisation) என்பது விலை இறுக்கத்தை குறிக்கவில்லை. குஸ்ரோவின் கருத்துப்படி, அறுவடைக்குப் பின்னர் மிகக் குறைாவன விலை நிலவுவதையும், பருவகாலமில்லாத நேரங்களில் மிக அதிகமான விலை நிலவுவதையும் தவிர்ப்பதே கையிருப்புக் கொள்கையின் நோக்கமாகும். குறைந்த விலைகள் உற்பத்தியாளரைப் பாதிகின்றன: விலை உயர்வுகள் நுகர்வோரை பெரிதும் பாதிக்கின்றன.

முடைக்கால கையிருப்பின் மற்றொரு தொடர்புடைய குறிக்கோள் பண்ணை வருமானத்தை நிலையாகப் பெறுவதாகும். பொருட்களின் விலை ஏற்ற இறக்கங்களை தவிர்ப்பதின் மூலம் நிலையான பண்ணை வருமானத்தை உறுதிப்படுத்த முடியும்.

மேற்கூறிய குறிக்கோள்கள் அரசு எவ்வளவு உணவு தானிய கையிருப்பு வைத்திருக்க வேண்டும் என்பதை நிர்ணயிக்கும். விட்டுக் கொடுக்கப்பட்ட வட்டி, சரக்குக் காப்புக்கான வாரம், பண்டங்களை சேமித்து வைத்தலில் ஏற்படும் வீணடிப்பு போன்றவற்றிற்கான செலவு

கையிருப்பின் அளவை பாதிக்கும். இச்செலவு ஒரு குவிண்டால் உணவு தானியத்திற்கு ரூ.100 என மதிப்பிடப்பட்டுள்ளது.

கையிருப்பு உள்நாட்டில் கொள்முதல் செய்தல் மூலமும், உணவு தானியம், சர்க்கரை, எண்ணெய் முதலியவற்றை இறக்குமதி செய்வதின் மூலம் உருவாக்கப்படுகிறது. பற்றாக்குறையாக இருக்கும்பொழுது இருப்பிலிருந்து பொருட்கள் விடுவிக்கப்பட்டு, விலை உயர்வு தடுக்கப்படுகிறது. முடைக்கால கையிருப்பு நடவடிக்கைகளை இந்திய உணவு தானிய கழகம் (FCI) கையாண்டு வருகிறது.

குறிப்பு

உணவுதானியக் கையிருப்பு என்பதன் உட்பொருள் என்னவெனில் அறுவடை நன்றாக இருக்கின்ற காலங்களில் விலைகள் குறையும். அப்பொழுது அரசு உணவு தானியங்களை வாங்கும். அறுவடை நன்றாக இல்லாத வருடங்களில் விலைகள் அதிகரிக்கும். அச்சமயம் அரசு முன்னால் வாங்கி வைத்திருக்கிற உணவு தானிய இருப்பை வெளியிடும் அல்லது இறக்கும். எனவே உணவு தானிய கையிருப்புக் கொள்கையின் முக்கிய நோக்கம் விலைவாசியை நிலைப்படுத்துதலாகும். அரசின் நடவடிக்கைகளின் சக்தி கையிருப்பின் அளவை பொருத்தது. கையிருப்பின் இன்னொரு குறிக்கோள் பண்ணை வருமானத்தை நிலைப்படுத்துதலாகும்.

**3. கொள்முதல் செய்தல்:**

உணவுதானியக் கையிருப்பு நடவடிக்கைகள் வெற்றிகரமாக செயல்பட வேண்டுமானால் அரசு உணவு தானியங்களை செம்மையாக கொள்முதல் செய்ய வேண்டும். பொது விநியோக முறையில் விநியோகிக்கத் தேவையான உணவுப் பொருளை பொருத்து கொள்முதல் அளவு அமையும் 1987 -88ல் 15 மில்லியன் டன் உணவு தானியம் கொள்முதல் செய்யப்பட்டது.

4. **உணவு தானியம் கொண்டு செல்வதில் தடை:**

1964ல் உணவு மண்டலங்கள் பிரிக்கப்பட்டன. உணவு தானிய உபரி மண்டலங்கள், பற்றாக்குறை மாநிலங்கள் என நாடு பிரிக்கப்பட்டது. அரசு உபரி மாநிலங்களிலிருந்து கொள்முதல் செய்து உணவு தானியங்களை பற்றாக்குறை மாநிலங்களுக்குப் பகிர்ந்தளித்தது. இன்று உணவு தானியத்தை ஓரிடத்திலிருந்து பிறிதோர் இடத்திற்கு கொண்டு செல்வதை ஒவ்வொரு மாநிலமும் கட்டுப்படுத்தியுள்ளது.

**5. உணவு தானியத்தில் அரசின் வணிகம்:**

இவ்விதத்தில் ஜனவரி 1965ல் இந்திய உணவுக் கழகம் ஏற்படுத்தப்பட்டது குறிப்பிடத்தக்கது. அரசின் சார்பாக இக்கழகம் உணவு

தானியங்களை வாங்கும், ஏற்றுமதி செய்யும், சேமிக்கும், பகிர்ந்தளிக்கும்.இவ்வாறு உற்பத்தி, நுகர்வு பகிர்வு ஆகியவற்றை உள்ளடக்கிய உணவுக் கொள்கையை அரசு கையாள்கிறது.

## உணவுச் சிக்கலில் அண்மைக்காலப் போக்கு

**(Recent Trends in Food Problem)**

குறிப்பு

அண்மையில் உணவுப் பொருள்களின் விலை உயர்வு 19.83 சதவிகிதமாக இருந்தது (டிசம்பர் 19,2011 முடிவில்). இவ்விதமான உயர்வுக்கு காரணம் உருளைக்கிழங்கு, வெங்காயம், அரிசி கோதுமை பருப்பு வகைகள் முதலியவற்றின் விலை ஏற்றம் தான்.

2009ம் ஆண்டில் உருளைக்கிழங்கு விலை சென்ற ஆண்டைக் காட்டிலும் இருமடங்கு ஆகியது. பருப்பு வகைகள் 41 சதவிகித விலை உயர்வு ஏற்பட்டுள்ளது. வெங்காய விலை 40.75 சதவிகிதம் உயர்ந்துள்ளது. அரிசி விலை 12.95 சதவிகிதமும். கோதுமை விலை 12.66 சதவிகிதமும் பால் விலை 13.61 விகிதமும், பழ விலை 10.35 சதவிகிதமும் சென்ற ஆண்டை விட உயர்ந்துள்ளன. பருப்பு உற்பத்தி பருவமழை சரியில்லாததால் குறைந்ததால் அதன் பங்களிப்பு குறைந்து வருகிறது. இவை எல்லாம் சாதாரண மனிதனை வெகுவாகப் பாதித்துள்ளன. பொருளாதார வல்லுநர்கள் செப்டம்பர் 2012ல் பணிவீக்கம் 10.2 சதவிகிதம் என குறிப்பிட்டுள்ளனர். எனவே விலைவாசியை கட்டுப்படுத்த அரசும் ரிசர்வ் வங்கியும் உடனடியாக நடவடிக்கை எடுத்து சாதாரண மனிதனை காப்பாற்ற முயற்சி மேற்கொண்டுள்ளன.

இந்தியாவில் வாழும் மக்களுக்கு போதுமான சத்துள்ள உணவினை எவ்வாறு அளிப்பது என்பது உணவுச் சிக்கலாகும். இந்தியா ஒரு வேளாண்மை நாடு, எனினும் அளவிலும் தரத்திலும் இந்தியாவில் உயர்வுப் சரிசமமில்லாது உள்ளது. பாதுகாக்கப்பட்ட உணவு போதுமானதாக இல்லை. கோதுமை, அரிசி போன்ற தானிய வகைகள் பற்றாக்குறையாக உள்ளது.

**உணவுச் சிக்கலின் மூன்று வகைகள்:**

**1. போதாத அளவு:**

சத்துணவு அறிவுரைக் குழுவின் பரிந்துரையின்படி, ஒரு ஆளுக்கு ஒரு நாளுக்கு 2250 லிருந்து 2300 கலோரி குறைந்த பட்ச உணவு தேவை. 62 கிராம் புரோட்டீனும் தேவை. ஆனால் இந்தியாவில் 2000 கலோரி உணவும், 51 கிராம் புரோட்டீனும் தான் உள்ளன.

**2. தரத்தில் பற்றாக்குறை :**

இந்தியர்கள் உட்கொள்ளும் உணவு சத்தற்றது. புரோட்டீன் வைட்டமின் தாதுப்பொருள் இவை போதுமான அளவு இல்லை. சத்துக் குறைவு காரணமாகப் பலர் நோய்க்கு உள்ளாகினர்.

**3. அதிக விலை:**

உணவு என்பது கூலிக்குக் கொடுக்கப்படுவது ஆகும். எனவே அதில் சிறிது விலை அதிகமானாலும், கூலி மூலம் வருமானம் பெறுபவர்களதுஉண்மை வருமானத்தை பாதிக்கிறது. உணவின் விலை ஏற்றம் துன்பத்தையும் பசியையும் ஏற்படுத்துகிறது.

**உணவுச் சிக்கலல் வளர்ந்தவிதம்: உணவு இறக்குமதி :**

உண்மையில் நம் நாட்டில் உணவுச்சிக்கல் 1937-ல் இந்தியாவிலிருந்து பர்மா பிரிந்தபோதே ஏற்பட்டது. பர்மா ஜப்பானின் கையில் சென்ற போது, இந்தியாவிற்கு அரிசி வழங்கிய ஒரு வழி அடைக்கப்பட்டது. இந்திாவிலிருந்து பாகிஸ்தான் பிரிந்தபொழுது மேலும் இந்தியாவிற்கு உணவுத் துறையில் துன்பம் ஏற்பட்டது. முதல் ஐந்தாண்டுத் திட்டம் துவங்குமுன், இந்தியாவில் உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டு, விலை அதிகமாகியது. அதனால்அரசு நாடு முழுவதிலும் கொள்முதல் செய்து, பங்கீடு முறையைக் கொண்டு வந்தது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் உணவு தானிய விலைகள் கட்டுப்படுத்தப்பட்டன. அதற்கு நல்ல விளைச்சல்தான் காரணம். அதனால் பங்கீடு முறை கைவிடப்பட்டு, இறக்குமதி குறைக்கப்பட்டது. (1951 4.8 மில்லியன் டன்னாக இருந்த உணவுப்பொருள் இறக்குமதி 1955-ல் 0.7 மில்லியன் டன்னாக ஆகியது) உணவுப்பொருட்களின் விலை மொத்தத்தில் இத்திட்டத்தில் 23% குறைந்தது. ஆனால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் துவங்கியதும், உணவுப் பொருட்களின் விலைகள் ஏறின: வாங்கும் சக்தி அதிகமானது. மிகவும் முக்கியமான தானியங்களில் பற்றாக்குறை அரசாங்கத்திடம் போதிய கையிருப்பு இல்லாமை, ஊக வாணிபம் பதுக்கல் ஆகியவற்றால்தான் விலைவாசிகள் அதிகரித்தன. அரசு உணவு நிலைமையைக் கட்டுபடுத்த இறக்குமதியை அதிகரித்தது. நியாய விலைக் கடைகளைத் திறந்தது. 1959-ல் 39 லட்சம் டன் உணவு தானியம் இறக்குமதி செய்தது. இது 1960ல் 51 லட்சம் டன்னாகியது. ரிசர்வ் வங்கி இறக்குமதி கட்டுப்பாட்டினை முதன் முதலாக

செயல்படுத்தியது. 1950-51-ல் 51-மில்லியன் டன்னாக இருந்த உணவு தானிய உற்பத்தி 1960-62-ல் 81 மில்லியன் டன்னாக ஆகியது.



மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 150 மில்லியன் டன் பெறவேண்டும் என்பது இலக்காகும். எனினும் இந்த இலக்கினை அடைய முடியவில்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஓராண்டைக் தவிர எல்லா ஆண்டுகளிலும் உணவு தானிய உற்பத்தி 1960-61ல் இருந்ததாகவே அல்லது அதற்குக் குறைவானதாகவோ இருந்தது. நெருக்கடியைச் சமாளிக்க அரசு தீவிர இறக்குமதியில் ஈடுபட்டது. இந்திய அரசு அமரிக்க அரசுடன்உணவு இறக்குமதி தொடர்பாக ஒரு ஒப்பந்தத்தில் ஈடுபட்டது. 1965-66ல் 10.4 மில்லியன் டன் அளவு உணவு தானியம் இறக்குமதி செய்யப்பட்டது. கொள்முதல், நடவடிக்கைகள் தீவிரரப்படுத்தப்பட்டன. சட்டப்பூர்வமான, முறைப்படியற்ற பங்கீடு முறை விரிவாக்கப்பட்டது.

குறிப்பு

புதிய வேளாண்மைக் கொள்கை பின்பற்றப்பட்டதால் நான்காவது திட்டத்தில் உயரிய இலக்கு நிர்ணயிக்கப்பட்டது. இத்திட்டத்தில் இறுதியாண்டில் உணவு தானிய இலக்கு 120 மில்லியன் டன்னாக நிர்ணயிக்கப்பட்டது. இந்த இலக்கு நிறைவேறியிருந்தால் உணவுச் சிக்கல் தீர்த்திருக்கும் ஆனால் நான்காவது ஐந்தாண்டுத்திட்ட இறுதியில் உணவு தானிய உற்பத்தி 104மூ மில்லியன் தான்.

ஐந்தாண்டுத்திட்டத்தின் இலக்கு 140 மில்லியன் டன். ஆனால் உண்மையில் பெறப்பட்டது. 131.9 மில்லியன் டன்தான், ஆறாவது திட்டத்தில் இலக்கு 149 மில்லியன் டன்னிலிருந்து 155 மில்லியன் டன்னாக இருந்தது. இத்திட்டத்தில் ஒவ்வொரு ஆண்டும் உணவு தானிய உற்பத்தி அதிகரித்தது. 1984-86ல் 130.4 மில்லியன் டன்னாக ஆகியது என்றாலும், இரண்டாண்டுகள் பெரும் வறட்சி காரணமாக உணவு தானிய உற்பத்தி 1987-88ல்104.5 மில்லியன் டன்னாக ஆகிறது. உணவு தானிய உற்பத்தி 1989-90-ல் 170 மில்லியன் டன்னாக ஆகியது. இன்றும் அதே நிலையிலேயே உள்ளது. 1990-91 ல் தானிய வகைகளின் இறக்குமதி ரூ.182 கோடியை எட்டியது.

**உணவுக் கொள்கை (Food Policy):**

இந்தியாவில் உணவுப் பொருளாதார நிர்வாகம் என்பது அரசின் கொள்கைகளில் முக்கியக் குறிக்கோளாக அமைந்துள்ளது.

**உணவுக் கொள்கையின் குறிக்கோள்கள்:**

1. பஞ்சம், சத்துக்குறைவு இவற்றைத் தவிர்த்தல்.

2. விவசாயிகளுக்கு நல்ல விலை கிடைக்கச் செய்தல், நவீன இடுபொருட்கள், தொழில்நுட்பம் முதலியவற்றை பயன்படுத்த விவசாயிகளுக்கு ஊக்கமளித்தல்.
3. விலையை நிலைப்படுத்துதல்
4. அங்காடியில் நிலவும் விலைக்குக் குறைவாக விலை வைத்து, பின்தங்கிய ஏழை மக்களுக்கு உணவு தானியத்தை அளித்தல்.
5. அங்காடியில் நிலவும் விலைகளுக்கு குறைவான விலையில் உணவு தானியங்களை கொள்முதல் செய்து, பொது விநியோக முறையில் பயன்படுத்தல்.
6. உணவு தானியத்தில் கையிருப்பை வைத்துக்கொள்ளுதல்.
7. விவசாய விலைக் கொள்கையைப் பயன்படுத்தி விலை வாசியைக் குறைத்தல்.

குறிப்பு

**உணவுக்கொள்கையில் பயன்படுத்தப்படும் கருவிகள்:**

இந்தியாவின் உணவுக் கொள்கையில் பயன்படுத்தப்படும் கருவிகளை மூன்று தலைப்புகளில் படிக்கலாம். அவையாவன.

1. உணவுதானிய உற்பத்தி மற்றும் அளிப்பு
2. உணவுதானிய நுகர்வு
3. உணவுதானியப் பகிர்வு

1. **உற்பத்தியும் அளிப்பும் :**

இந்தியாவின் விவசாயத் திட்டமிடலில் அடிப்படைக் குறிக்கோள் உணவு தானிய உற்பத்தியில் தன்னிறைவை அடையவதாகும். உணவு தானிய உற்பத்தியை அதிகரிக்க கீழ்க்கண்ட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

அ) தொழில்நுட்ப முன்னேற்றம் ஆ) நிறுவனச் சீர்திருத்தம் இ) ஆதார விலைகள்

அ) சிறந்த விதைகள் அளித்தல், உரமளித்தல், பூச்சிக்கொல்லிகள் கொடுத்தல், தண்ணீர், மின்சக்தி. எந்திர வசதி அளித்தல், இருபோகம், பலபோக நடடிவக்கைகள் எடுத்தல் முதலியன தொழில்நுட்ப முன்னேற்றத்தின் கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளாகும். கடந்த நாற்பது ஆண்டுகளில் மொத்தம் பயிரிடப்பட்ட பகுதிகள் 33 சதவிகிதம் அதிகரித்தது. நீர்ப் பாசனத்திற்கு உட்பட்ட பகுதிகள், அதிக விளைச்சல் தரும் விதைகள், பயன்படுத்தப்பட்ட நிலத்தின் அளவு, உரநுகர்வு முதலியன அதிகரித்தன.

ஆ) வேளாண்மைச் சீர்த்திருத்தங்கள் வணிக வங்கிகள் மற்றும் கூட்டுறவு சங்கங்கள் இவை மூலம் அளிக்கப்பட்ட நிறுவன நிதி முதலியன நிறுவனச் சீர்திருத்தங்களாகும். இந்திய உணவுக்கழகம், இந்திய உரக்கழகம், பண்டகச்சாலைக் கழகம், பல்வேறு கூட்டுறவுச் சங்கங்கள், ஒழுங்குமுறை அங்காடிகள் முதலியன இதில் அடங்கும்.



இ) குறைந்தபட்ச ஆதரவு விலைகள் என்பவை உற்பத்தியாளருக்கு நீண்டகால உறுதிமொழியை அளிப்பவை. குறைந்தபட்ச ஆதரவு விலை ஏற்பாட்டில் குறைந்த அளவிற்கு கீழ் விலைகள் வீழ்ச்சியடைய அனுமதிக்கப்படமாட்டாது. விதைக்கப்படுவதற்கு முன்னரே விலைகள் அறிவிக்கப்படும். குறைந்தபட்ச ஆதரவு விலையின் கீழ் விவசாயிகள் அளிக்கும் எல்லா உணவுத் தானியங்களையும் அரசு வாங்கத் தயாராக இருக்கும். உணவுக் கொள்கையின் விறுவிறுப்பான கருவி என ஆதரவு விலை கருதப்படுகிறது. ஏனெனில் அங்காடி நிலைகளில் ஏற்படும் தடுமாற்றத்திலிருந்து விவசாயிகளை காப்பது அவசியமாகும் என கருதப்படுகிறது.

**2. உணவு தானிய நுகர்வு:**

இவ்விதத்தில் மக்கள் தங்களது குடும்பத்தின் அளவை குறைத்துக் கொள்வதற்கு ஊக்கம் அளிக்கும் விகிதத்தில் அரசின் கொள்கை அமைந்துள்ளது. குடும்ப நலத்திட்டத்தின் மூலம் பிள்ளைப் பேற்றின் விகிதத்தைக் குறைக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டது. சத்துணவுத் திட்டத்தை அரசு வலியுறுத்தியது. உயர்ந்த ரக தானிய வகை உணவு உட்கொள்வதை தவிர்த்து சத்துள்ள முரட்டுரக தானிய உணவை மக்கள் உண்ணுமாறு செய்தலே அரசின் கொள்கையாகும்.

3. **உணவு தானியப் பகிர்வு :**

பல மண்டலங்களுக்கிடையேயும் பல மக்களுக்கிடையேயும் உணவு தானியங்களைச் சீராக பகிர்ந்தளிக்க பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அவையாவன:

**உணவுச் சிக்கலுக்கான காரணங்கள்:**

**1. பெருகி வரும் மக்கள் தொகை:**

உணவுச் சிக்கலுக்கான முக்கிய காரணங்கள் வளர்ந்துவரும் மக்கள் தொகையாகும். இந்தியாவின் மக்கள் தொகை 1951ல் 361 மில்லியனாக இருந்தது. அது 1981-ல் 685 மில்லியனாகி 1991ல் 844.4 மில்லியனாகியுள்ளது. நாற்பது ஆண்டுகளுக்குள் இந்தியாவின் மக்கள் தொகை இரட்டிப்பாகி விட்டது. மக்கள் தொகை அதிகமாகியதால் உணவுதானியத் தேவை அதிகரித்தது. மக்கள் தொகை அதிகரிப்பால்

ஒவ்வொரு நாளைக்கும் ஒவ்வொருவருக்கும் கிடைகின்றன உணவு தானியத்தின் அளவு 1989-ல் 480.1 கிராமமாகக் குறைந்து விட்டது.

**2. அதிகமான வருமானத் தேவை நெகிழ்ச்சி:**

இந்தியாவில் ஏழை மக்களின் வருமானம் அதிகரிக்கும்பொழுது கூடிய வருவாயின் பெரும்பகுதி உணவு தானியங்களை வாங்கவே செலவழிக்கப்பட்டது. எனவே உணவுக்கான வருவாய்த் தேவை நெகிழ்ச்சி 0.6லிருந்து 0.9 வரை உள்ளது.

**3. நகர்புற வளர்ச்சி:**

குறிப்பு

மக்கள் தொகை வளர்ச்சி அதிகமாக இருந்ததோடு நகர்ப்புறங்களும் வேகமாக வளர்ந்தன. நகர்புற வளர்ச்சி இரட்டிப்பாகியது.

நகர்ப்புற வளர்ச்சியினால், விவசாய நிலங்கள் வீடு கட்டவும், தொழிற்சாலைகளை உருவாக்கவும், சாலை அமைக்கவும், திசை திருப்பட்டன. இதனால் உணவு உற்பத்தி பாதிக்கப்பட்டது.

**4. உற்பத்தித் திறனில் மெதுவான வளர்ச்சி :**

வேளாண்மைக்கு எடுத்துக்கொள்ளபடும் நிலத்தின் அளவை விரிவுபடுத்த இயலாமையால் ஒவ்வொரு ஏக்கரிலும் விளைவை அதிகப்படுத்துவுதே வழியாகும். ஆனால் நிலத்தின் உற்பத்தித் திறன் போதவில்லை.

**5. போதாத அங்காடி உபரி:**

விவசாயிகள் பின்னால் அதிக விலைக்கு விற்கலாம்என எண்ணி தங்கள் உற்பத்தியை இருப்பாக வைத்து விட்டால் அங்காடிக்கு வரும் உபரி உற்பத்தி குறைந்து விடுகிறது. அடுத்த பருவத்தின் உறுதியின்மை, நுகர்வுக்கான தேவை அதிகமாகும் நிலை,போதாத அங்காடி வசதிகள், விதைக்காக வைத்திருக்க வேண்டிய கட்டாயம் முதலியன அங்காடி உபரியைக் குறைத்து விட்டன.

**6. சேமிப்பில் வீணடிப்பு:**

சரியான முறையில் உணவு தானியங்கள் சேமிக்கப்படாமையால் உற்பத்தியில் 6மூ இழப்பு நேரிடுகிறது. பூச்சி கடித்தல், நோய் முதலியவற்றால் இருக்கின்ற உணவு அளிப்பு குறைந்து விடுகிறது

## 7.8. உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

1.காப்பீட்டில் பயிர் இழப்பு ஏற்பட்டால் விவசாயிகள் பெறக்கூடிய இழப்பீட்டுக்கு உச்ச வரம்பு கிடையாது. காப்பீடு செய்யும் அளவுக்கும் வரம்பு கிடையாது. காப்பீடு நிறுவனங்கள் இழப்பீடாகத் தரும் தொகைக்கு

முனப்பு உச்ச வரம்பு இருந்தது. இப்போது இந்த உச்சவரம்பு நீக்கப்பட்டுள்ளது.புயல், மழை, பருவம் தப்பிய மழை, வறட்சி, நிலச்சரிவு அறுவடையின்போதான மழை போன்ற காரணங்களால் ஏற்படும் பயிர்ச் சேதங்களுக்கு இழப்பீடு பெற முடியும். பயிர்ச் சேதத்தின் அளவையும் தீவரத்தையும் மதிப்பிட செயற்கைக்கோள்கள், ஆளில்லா சிறுவிமானங்கள் போன்ற நவீனத் தொழில்நுட்பங்கள் பயன்படுத்தப்படும்.

### 7.8.1 உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

1 பயிர் காப்பீடு திட்டத்தில் சேர்ந்த விவசாயி தன் வயலில் அறுவடை செய்து களத்தில் வைத்திருந்த பயிர், புயல் அல்லது மழை காரணமாக அழிய நேரிட்டால் அடுத்த 48 மணி நேரத்துக்குள் பயிர் காப்பீடு அலுவலகத்துக்கு தெரியப்படுத்த வேண்டும். ஏற்பட்ட சேதத்துக்கு ஏற்ப இழப்பீட்டு கிடைக்கும்.

2 அறுவடை சிறப்பாக இருக்கும் ஆண்டுகளில் அதிகப்பொருள் அளிப்பும் குறைவான விலையும் நிலவுகிறது. மாறாக அறுவடை மோசமான ஆண்டுகளில் பற்றாக்குறையும் கூடுதல் விலையும் நிலவுகிறது. இவ்விதத அதிர்ச்சிகளை குறைக்க உதவும் பண்டங்களின் அளவு தான் முடைக்கால கையிருப்பு எனப்படும்.

## 7.9 உணவுப் பாதுகாப்பு (Food Security)

உணவுப் பாதுகாப்பு என்பது உணவு தானியங்கள் மக்களுக்கு பகிர்ந்தளிப்பதை குறிக்கிறது. உணவு தானியங்களை திறமையாக பகிர்ந்தளிக்க 1965இல் இந்திய உணவுக்கழகம் (FCI) தோற்றுவிக்கப்பட்டது. கொள்முதல் செய்யப்பட்ட உணவு தானியங்கள் நியாய விலைக்கடைகள் மூலம் விநியோகம் செய்யப்படுகின்றன. பொது விநியோக முறையின் குறிக்கோள் மலிவான மற்றும் மானிய விலையில் சமுதாயத்தில் ஏழைகளாக உள்ளவர்கட்கு முக்கியமான நுகர்வோர் பொருட்களை அளிப்பது தான் இந்திய உணவுக்கழகம் உணவுதானிய கையிருப்பு வைத்துக்கொண்டு பராமரிக்கிறது.

பொதுவிநியோகமுறை ஏழைகளுக்கும், விடு இல்லாதோருக்கும் எதிரானது என குறை கூறப்படுகிறது. மேலும் அது சில மண்டலங்களுக்கு மட்டும் பயனளிக்கிறது. எனவே 1992ல் இது புதுப்பிக்கப்பட்டது. அதன்படி அரசு குறிப்பிட்ட பகுதிகளை தேர்ந்தெடுத்தது. இந்தப் பகுதிகளில் கூடுதல் பொருட்களான தேயிலை, பருப்பு வகைகள் மற்றும் அயோடின் கலந்து உப்பு மற்றும் உணவு தானியங்களில் கூடுதல் அளவு முதலியன பொது விநியோக வழிகள் மூலம் அளிக்கப்பட்டன. புதுப்பிக்கப்பட்ட பொது விநியோகமுறை நகர்ப்புறத்திற்கு சாதகமாக உள்ளதாகவும்

நியாய விலைக்கடைகள் மட்டரக தானியங்களை மட்டும் பகிர்ந்ததாகவும் குறை கூறப்பட்டது.

மேற்கூறிய கண்டனங்களினால் அரசு 1997ல் இலக்கு சார்ந்த பொது விநியோகமுறையை (Targeted Public Distribution System) அறிமுகப்படுத்தியது. இம்முறையின் கீழ் அதிக தள்ளுபடி அல்லது எளிய விலையில் உணவு தானியங்களை வறுமைக்கோட்டிற்கு கீழ் உள்ளவர்களுக்கு (BPL) அளிக்கிறது. வறுமைக்கோட்டிற்கு மேலே உள்ளவர்களுக்கு (APL) அதிக விலையில் உணவு தானியங்கள் அளிக்கப்படுகின்றன. வறுமைக் கோட்டிற்கு கீழ் உள்ளவர்கட்கு உயர்ந்த அளவு வருமானம் மாதம் 15000 ஆக கணக்கிடப்படுகிறது. ஜனவரி 2006ல் வறுமைக்கோட்டிற்கு கீழ் உள்ளவர்ளுக்கு குடும்பத்திற்கு மாத்திற்கு 30 கிலோ உணவுதானியமும், வறுமைக்கோட்டிற்கு , வவறுமைக்கோட்டிற்கு மேல் உள்ளவர்களுக்கு மாதத்திற்கு ஒரு குடும்பத்திற்கு 20 கிலோவும் உணவுதானியமும் அளிக்கப்படுகிறது. கீழே உள்ள குடும்பங்கட்கு ஜனவரி 2006ல் கோதுமைக்கு கிலோ 5.60வும், அரிசிக்கு ரூ.7க்கு கொஞ்சம் குறைவாகவும் விளைச்சல் விலை அமைந்துள்ளது. வறுமைக்கோட்டிற்கு மேல் உள்ள குடும்பங்கட்கு கோதுமைக்குரிய விலை ரூ.6.10 (ஒரு கிலோவுக்கு) லிருந்து ரூ.7.05 ஆகவும் அரிசியின் விலை கிலோவுக்கு ரூ.8.30லிருந்து ரூ.9.15 ஆகவும் அதிகரிக்கப்பட்டது. பொது விநியோக முறையில் பற்றாக்குறையாக உள்ள உணவு தானியத்தை ஈடுகட்ட அரச அங்காடி விலையில் வாங்குகிறது. இந்த ஆண்டு அரசு 35 லட்சம் டன் கோதுமை இறக்குமதி செய்துள்ளது. காரணம் கோதுமைக்கான மொத்த தேவையை கொள்முதல் மூலம் சரிசெய்ய அரசால் பாதுகாப்பைப் பெற, தினை வகைகள் மற்றும் பருப்பு வகைகளுக்கு கொள்முதல் விரிவாக்கம் செய்யப்பட வேண்டும். அத்துடன் புதிய மண்டலங்களிலும் கொள்முதல் செய்யப்பட வேண்டும் என குறிப்பிடப்பட்டது.

குறிப்பு

சிறப்புப் பொருளாதார மண்டலங்கள் (SEZS) அண்மைக்காலத்தில் தோற்றுவிக்கப்பட்டு வருகின்றன. இவை உணவுதானிய பாதுகாப்பை பாதிக்கக்கூடாது என சொல்லப்படுகிறது. விவாசய நிலங்களை மற்ற காரியங்கட்கு பயன்படுத்தக்கூடாது என சொல்லப்படுகிறது. உணவுப்பாதுகாப்புச் சட்டம் விரைவில் கொண்டு வர மத்திய அரசு எண்ணியுள்ளது.

வேளாண்மையை
சந்தைப்படுத்துதல்

# அலகு - 8 வேளாண்மையை சந்தைப்படுத்துதல்



குறிப்பு

## 8.1 நோக்கங்களை

1. வேளாண்மையை சந்தைப்படுத்துதல் பற்றி அறிந்து கொள்ளுதல்
2. விவசாயிகளின் துயரம் பற்றி தெரிந்துகொள்ள
3. சந்தை நுணுக்கத்தைப் பற்றி புரிந்துகொள்ள

## 8.2. பொருள் - வேளாண்மையை சந்தைப்படுத்துதல்- 1

விவசாயிகளுக்கு வேளாண்மைப் பொருட்களின் விலைகள் மிக முக்கியம். காரணம் அவை மட்டுமே விவசாயிகள் வருமானத்தை முடிவு செய்கின்றன. விலை விரிவு இருக்கும் பொழுது உற்பத்தியாளரும் நுகர்வோரும் மிகவும் பாதிக்கப்படுகின்றனர். அதிக விலைகளில் நுகர்வோர் மிகவும் பாதிக்கப்படுகின்றனர். குறைவான விலை இருக்கும்பொழுது உற்பத்தியாளர் பாதிக்கப்படுகிறார்கள். எனவே விவசாய வளர்ச்சிக்கும் சமுதாய நலனுக்கும் தீர்க்கமான விசாயக் கொள்கை மிகவும் முக்கியம். சர் ரோகர் தாமஸ் கருத்துப்படி “மழைக்குப் பிறகு, விலை மாற்றங்களே விவசாயிக்கு மிகப் பெரிய பகைவர்”.

தொழிற்பொருட்கள் போல விவசாயப் பொருட்களுக்கு அங்காடி உண்டு. திறமையான சந்தைப்படுத்தும் முறை விவசாய உற்பத்தி வழிவகுக்கிறது. அது உபரியாக உள்ள விவசாயப் பொருட்களுக்கு நல்ல விலையை உறுதிப்படுத்துகிறது.

**விவசாயப் பொருட்களின் சந்தைகளின் வகைகள்:**

இந்தியாவில் உள்ள விவசாய் சந்தைகளின வகைகள் வருமாறு: அ) அடிப்படை அல்லது உள்ளூர் அங்காடிகள் ஆ) இரண்டாம் தர அங்காடிகள் இ) முடியும் இடத்திலுள்ள அங்காடிகள் ஈ) சந்தைகள் உ) ஒழுங்குபடுத்தப்பட்ட அங்காடிகள் ஊ) கூட்டுறவு அங்காடிகள் எ)அரசு வணிகம்.

**அடிப்படை அல்லது உள்ளூர் அங்காடிகள்:**

இவை சில கிராமங்களை உள்ளடக்கி வாரம் ஒருமுறை அல்லது இருமுறை நடைபெறுவதாகும். இத்தகைய அங்காடி 10 அல்லது 15 கிலோ மீட்டர் தூரத்திற்கு பணிபுரிகிறது. இந்த அங்காடிகளில் தங்களது விவசாயப் பொருட்களை பல விவசாயிகள் கொண்டு வந்து விற்பனை செய்கின்றனர். இத்தகைய அங்காடிகள் பொதுவாக கிராம பஞ்சாயத்துக்களால் அமைக்கப்படுகின்றன. அவை கடை போடுபவர்களிடம் வாரம் பெறுகின்றன.

**இரண்டாம்தர அங்காடிகள்**:

குறிப்பு

இவை மொத்த அங்காடிகள் அல்லது சேகரிக்கும் அங்காடிகள், இவற்றிற்கு மண்டிகள் என பெயர். இந்தியாவில் ஒவ்வொன்றும் 1.5 லட்சம் மக்களுக்கு 775 கிலோமீட்டர் பரப்பளவை உள்ளடக்கி மொத்தம் இத்தகைய 4000 அங்காடிகள் பணிபுரிகின்றன. இவை நிலையானவை. இங்கு உற்பத்திப் பொருட்கள் மொத்தமாக கையாளப்படுகின்றன. இவற்றிற்கு சாலை மற்றும் புகைவண்டிப் போக்குவரத்து வசதிகள் உள்ளன. இந்த அங்காடிகளில் அதிக எண்ணிக்கையில் இடைத்தரகர்கள் செயல்படுகின்றனர்.

**முடிவுறும் அங்காடிகள்:**

இந்த அங்காடிகள் நுகர்வோர், இறுதியாக வாங்குவோர் அல்லது பதப்படுத்தப்படும் இடங்களுக்கு பொருட்களை கொண்டு செல்கின்றன. இத்தகைய அங்காடிகள் பெரிய நகரங்களில் காணப்படுகின்றன. இத்தகைய அங்காடிகளில் நடவடிக்கைகள் மாநில முழுதும் அல்லது அதற்கு மேலும் விரிவாகியுள்ளன.

**பெருவிழா அல்லது சந்தைகள்:**

இந்தியாவில் பல நன்னாட்களில் யாத்திரை மையங்களில் நடைபெறும் சந்தைகள் விவசாயப் பொருட்களுக்கு முக்கிய அங்காடியாக திகழ்கிறது. இத்தகைய அங்காடிகள் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறுகிறது. அவை மாவட்ட அதிகாரிகளாலோ, உள்ளாட்சிகளாலோ அமைக்கப்படுகின்றன. இவை பீகார், ஓரிஸ்ஸா, உ.பி போன்ற மாநிலங்களில் மிகவும் பிரசித்தி பெற்றவை.

**விவசாயப் பொருட்களின் இயல்புகள்:**

வேளாண்மைப் பொருட்களின் சில தனித்தன்மை வாய்ந்த இயல்புகள் அவற்றின் சந்தையிடுதலைப் பாதிக்கின்றன.

**1. சிற்றளவு உற்பத்தி**:

விவசாயிகளுக்கு சிற்றளவு நிலங்கள் உள்ளன. அவற்றில் விளைச்சல் குறைவு. அவர்கள் குடும்பத் தேவைக்கே அவர்கள்

உற்பத்தி சரியாகப் போய்விடும். பொருட்களைத் தரப்படுத்தவோ, சேமித்து வைக்கவோ அவர்களால் இயலவில்லை. விளம்பரம் செய்ய இயலவில்லை.

குறிப்பு

**2. பரவலான உற்பத்தி:**

விவசாயிகள் பரவலாக வாழ்கின்றனர். அவர்களது நிலங்களில் பல குறிப்பிட்ட பொருட்களின் உற்பத்திக்கே பயன்படுகின்றன.

**3. பருவகால உற்பத்தி:**

வேளாண்மை என்பதில் ஒரு வருடத்தில் சில மாதங்களே பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் விவசாயப் பொருட்களுக்கு ஆண்டு முழுவதும் தேவ உள்ளது.

**4. கனமானவை:**

வேளாண்மைப் பொருட்கள் கனமானவை: அவற்றின் மதிப்போ குறைவு. எனவே இவற்றைக் கொண்டு செல்லும் செலவு அதிகம்.

**5. அழியக்கூடியவை:**

பல வேளாண்மைப் பொருட்கள் அழியக்கூடியவை எடுத்துக்காட்டாக, பழங்கள், காய்கறிகள், பால், பால் பொருட்கள், இறைச்சி போன்ற அழுகும் பொருட்கள் சிறப்பாக சேமித்து வைக்கப்படுகின்றன. விவசாயப் பொருட்கள், பொதுவாக அழுகும் பொருட்கள் என்பதாலும், நல்ல சேமிப்பு வசிதியில்லாதாலும் விவசாயிகள் அறுவடை செய்த பின் உடனேயே கிடைத்த விலைக்கு விற்று விடுகின்றனர்.

**6. நெகிழ்ச்சியற்ற தேவை அளிப்பு:**

வேளாண்மைப் பொருட்கள் ஒவ்வொரு மனிதனுக்கும் தேவைப்படுகிறது. எனவே அவற்றின் தேவை நெகழிச்சியற்றது. விலையில் மாற்றம் ஏற்பட்டாலும் அது தேவைகளைப் பாதிக்காது. தேவை சீராக இருப்பதால் இவற்றின் அளிப்புக்கு தகுந்தாற்போல் விலையில் மாற்றங்கள் ஏற்படுகின்றன.

**அங்காடியில் ஈடுபடும் பதிலாட்கள் அல்லது நிறுவனங்கள் (Martketing Aggencies)**

1961-ம் ஆண்டின் கிராம கடன் ஆய்வுக்குழுவின் கருத்துப்படி உற்பத்தியாளருக்கும், இறுதி நுகர்வோருக்கும் இடையே அதிக எண்ணிக்கையில் இடைத்தரகர்கள் உருவாகியுள்ளனர்.

கிராம வியாபாரி (Village seller) பொருட்களை வாங்குபவர். இவர் கிராமங்களிலிருந்து பொருட்களை சேகரித்து அவற்றை மொத்த அங்காடிக்கு கொண்டு வருகின்றார். அங்கிருந்து அது நுகர்வோருக்கு

செல்கிறது. பெதுவாக வியாபாரிகள் விலைகள் குறைவான நேரத்தில் வாங்கி அவை அதிகமாகவுள்ள காலத்தில் விற்கின்றனர்.

இடத்திற்கு இடம் செல்கிற வியாபாரி (migrated seller) கிராமத்திற்கு கிராமம் செல்கிறார். பொருட்களை சேகரிக்கிறார். அவற்றை அருகிலுள்ள அங்காடிக்கு கொண்டு செல்கிறார். மற்ற நிறுவனங்களில் குறிப்பிடத்தக்கது நிறுவைக்காரர்கள். (tolas or weighmen) அவர்கள் பொருட்களை நிறுக்கிறார்கள். சில நேரங்களில் அவர் கிராமங்களில் பொருட்களின் மாதிரியைச் சேகரித்து நகரங்களில் உள்ள வியாபாரிக்கு கொண்டு செல்கிறார். அதற்கு அவர் தரகு (Commission)பெறுகிறார்.

குறிப்பு

உள்ளூரில் உள்ள நிலச்சுவான்தாரரும் விவசாயியும் கிராமத்திலுள்ள அங்காடிக்கு வரும் கிராம வியாபாரிடமோ நகர வியாபாரிடமோ நேரடியாக பொருட்களை விற்கின்றனர்.

அரைகுறையான மற்றும் முழுமையான ஆர்ஹெத்தியாக்கள் (Arhatias) அடுத்த வகையினர். முன்னவர் பொருட்களைச் சேகரிப்பதில் ஈடுபடுகிறார். பின்னவர் அவற்றை விநியோகிக்கிறார். அவர்கள் கிராம வியாபாரிகட்கும் வணிகர்க்கும் அவர்களது பொருட்களை தங்களுக்கோ தங்கள் மூலமாகவோ விற்க வேண்டும் என்ற நிபந்தனையின் அடிப்படையில் கடன்கள் வழங்குகின்றனர். பொதுவாக, உற்பத்திப் பொருளில் 70 சதவிகிதம் உற்பத்தியாளரால் கையாளப்படுகிறது. மற்றவை தரகுப் பதிலாட்கள், மொத்த வியாபாரிகள், சில்லரை வியாபாரிகள் கூட்டுறவுகள் மற்றும் அரசால் கையாளப்படுகிறது.

## 8.3.சந்தை மற்றும் சந்தைப்படுத்தப்பட்ட உபரி (Marketed and Marketable Surplus)

தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் Industrial Raw Materials,நுகர்வோர் பொருள்கள் (Consumer goods) ஆகியவற்றில் உற்பத்தியான பொருள்கள் அனைத்தும் சந்தைப்படுத்தப்பட்டு விடும். நம்முடைய சொந்த தேவைக்காக ஒரு பகுதிளை உற்பத்தியாளர்கள் இருப்பில் வைத்துக் கொள்வதில்லை. ஆனால் விவசாய விளைப்பொருள்களை பொறுத்தவரையில் குறிப்பாக உணவு தானியங்களை உற்பத்தி செய்வோர் தமது உற்பத்தி முழுவதையும் விற்றுவிடுவதில்லை. தமது சொந்த உபயோகத்திற்காகவும், எதிர்காலத்தின் பயிரிட தேவையான விதை கூலி ஆகிவற்றிற்காகவும், உற்பத்தியில் ஒரு பகுதியை இருத்தி வைத்துக்கொண்டு உபரியையே

விற்பனைக்கு கொண்டு செல்கின்றனர். இவ்வுபரி சந்தை இடக்கூடிய உபரி (Marketable Surplus) என்று கூறப்படும்.

விவசாயிகள் தம்மிடம் உள்ள சந்தையிடக்கூடிய உபரி முழுவதையும் அறுவடையானவுடன் விற்பத்தில்லை. பண வசதி படைத்த விவசாயிகள் அறுவடை சமயத்தில் விலையானது இறங்குமுகமாக இருப்பதால் தம்முடைய விளைபொருள் முழுவதையும் சந்தையிடுவதில்லை. ஒரு பகுதியையே சந்தையிடுகின்றனர். மீதியை பின்னர் விலை அதிகமாகும் போது விற்பனை செய்து லாபம் பெறுகின்றனர். இவ்வாறு அறுவடையானவுடன் கையிருப்பில் உள்ள ஒரு பகுதியை மட்டும் விற்பனை செய்யும்போது அப்பகுதி சந்தையிடப்பட்ட உபரி (Marketed Surplus) எனப்படும்.

குறிப்பு

விவசாயிகளின் பொருளாதார வலிமை நிதி வசதி ஆகியவற்றிற்கு ஏற்ப சந்தையிடப்பட்ட உபரியின் அளவும் வேறுபடும். வசதியுள்ள விவசாயிகளினால் மொத்த உபரியில் உடனடியாக சந்தையிடப்பட்ட உபரி குறைந்த விகிதத்தில் இருக்கும். சில விவசாயிகள் தம்மிடம் உள்ள கையிருப்பு அனைத்தையும் விற்பனை செய்து விடுவர். இவர்களை பொறுத்த வரையில் சந்தையிடப்ட்டஉபரியும், சந்தையிடக்கூடிய உபரியும் சமமாக இருக்கும்.

விவசாய பொருட்கள் அனைத்தும் சந்தையில் விற்பனைக்கு வருகின்றன. பணத்தை ஈட்டுக்கின்றன. பண்ணைகளின் மூலமாக பல தங்கள் குடும்பத் தேவைகளை தீர்த்துக்கொள்கின்றன. விவசாயிகளால் வளர்க்கப்படும் உணவு தானியங்கள் சொந்த குடும்பத் தேவைகளை பூர்த்தி செய்யவதற்க் மட்டுமல்லாமல் மற்ற நகரங்களில் உள்ள மக்களுடைய தேவைகளை பூர்த்தி செய்கிறது. விற்பனையில் கிடைக்கும் உபரி விவசாயிக்கு விவசாயி மாறுபடுகிறது. பழங்கள், காய்கறிகள், பால், முடட்டை சமையல் எண்ணெய்வித்துக்கள் போன்ற உணவு பயிர்களிலுமம் இந்தநிலை ஏற்படுகிறது. உற்பத்தி செய்யப்படும் உணவு தானிங்கள் விதைக்காகவும், வீட்டு உபயோகத்திற்காகவும், நண்பர்களுக்காகவும், உறவினர்களுக்காகவும் கொடுக்கப்படுவதால் பண இழப்பு ஏற்படுகிறது. இந்த பொருட்களுக்கு பணம் கிடைப்பதில்லை. மார்கெட்டிங் மற்றும் விற்பனை சந்தைக்கு கிடைக்கும் பொருட்களின் அளவை உறுதிசெய்ய சந்தைப்படுத்தப்படட் உபரி மற்றும் சந்தைப்படுத்துதல் உபரி ஆகியவை உருவாக்கப்பட்டன. ஒரு பண்ணையில் உற்பத்தி செய்யும் பொருட்கள் சொந்த பயன்பாட்டிற்காகவும் விதைக்காகவும் நுகர்வு செய்யப்படுவதால்

உழைப்பிற்கு ஏற்ற ஊதியம் கிடைப்பதில்லை ஆனால் பருத்தி, கம்பு, போன்றவை வேளாண்மை சார்ந்த தொழில்துறையில் மூலப்பொருளாக பயன்படுத்துவதால் சில தயாரிப்புகள் விற்பனைக்கு வருகின்றன. இந்த பயிர்களில் சந்தைப்படுத்தும் உபரி 100 சதவிகிதம் ஆகும். இத்தகைய பயிர்கள் பணப்பயிர்கள் அல்லது வணிகப்பயிர்கள் என்று அழைக்கப்படுகின்றன. வணிக ரீதியாக பணப்பயிர்களில் சந்தைப்படுத்தப்பட்ட உபரி அதிகமாக கிடைக்கிறது. சேமிப்பு கிடங்கில் பொருட்கள் பாதுகாக்கப்பட்டு சந்தைப்படுத்தபட்ட உபரியை அதிமாக்குகிறது. பணப்பயிர்கள் நல்ல ஒழுங்கமைக்கப்பட்ட சந்தைகள் மற்றும் சாலைகள், சேமிப்பகம், தகவல் தொடர்பு, சந்தை தகவல், வங்கிச் சேவைகள் போன்ற மேம்பாட்டு வசதிகள் மூலமாக சந்தைப்படுத்தப்பட்ட உபரி அதிகமாக கிடைக்கிறது.

குறிப்பு

சில மாநிலங்களில் பற்றாக்குறையாக உணவு தானிங்கள் இருக்கும்போது சந்தைப்படுத்தப்பட்ட உபரி குறைகிறது. உதாரணம்: பஞ்சாபில் உணவு தானியமாக கோதுமை பயிரிடப்படுகிறது. அதனுடைய சந்தை 85 சதவிகிதம் ஆகும். அவை அந்தப் பகுதியில் வணிகப் பயிராக கருதப்படமாட்டாது. அங்கு பழப்பயிர்கள் 96 சதவீதத்திற்கு மேல் சந்தைப்படுத்தப்பட்ட உபரி கிடைக்கிறது. அவை அங்கு வர்த்தக பயிர்கள்.

இதே போல் காய்கறிகளும் வர்த்தக பயிர்களாக உள்ளது. சந்தைப்படுத்தும் உபரி 96 சதவிகிதமாகவும் விற்பனை செய்த உபரி 85 சதவீதமாக உள்ளது. 30 ஆண்டுகளுக்கு முன்பு பால் குடும்ப தேவையை பூர்த்தி செய்வதற்காக இருந்தது. ஆனால் தற்பொழுது அதிக பால் தரும் மாடு மற்றும் எருமை இனங்கள் வந்ததற்குப்பிறகு விவசாயிகள் பால் கூட்டுறவு சங்கங்களின் மூலமாக பால்பண்ணை மூலமாகவும் விற்பனை செய்து வருவாய் பெருகின்றனர். கிராமப்புறங்களில் 77 சதவீதத்திலிருந்து 92 சதவீதம் வரை சந்தை உபரி கிடைக்கிறது. பால் முக்கிய நிறுவனமாக பயிர் உற்பத்தியை விஞ்சி வருகிறது. பால் விவசாயிகளுக்கு பண வருவாயை வழங்குவதோடு மட்டுமல்லாமல் குடும்பத்திற்கு வேலை வாய்ப்பையும் வழங்கும் ஒரு வணிக ரீதியான நிலைமையை ஏற்படுத்தியுள்ளது. பருத்தி மற்றும் கரும்பு சணல், சூரியகாந்தி, குங்குமப்பூ சோயாபீன்ஸ் காளான் மற்றும் பிற பயிர்கள், சில எண்ணெய் விதை பயிர்கள் வணிக பயிர்களாக அங்கீகரிக்கப்பட்டுள்ளன. அவை சந்தையில் 100 சதவீதத்தை எட்டியுள்ளன. இவை விவசாயிகளுக்கு பணப் பயிர்களாகும். சில பயிர்கள் பாக்கெட்டுகளில் அடைக்கப்பட்டு

விற்பனை செய்யப்படுகின்றன. இவையெல்லாம் சந்தைப்படுத்தக் கூடிய உபரிகளை கொண்டுள்ளன.



**சில பொருட்களின் விற்பனை உபரி மற்றும் சந்தைப்படுத்தப்படும் உபரி**

| S. No | பொருள் | மாநிலம் | சந்தைப் படுத்தும் உபரி மூ | சந்தைப்படுத் தப்பட்ட உபரி மூ |
|---|---|---|---|---|
| 1. | சோளம் | ஹிமாச்சலப் பிரதேசம | - | 36.37 |
| 2. | நெல் | ஹிமாச்சலப் பிரதேசம | - | 14.19 |
| 3. | கோதுமை | ஹிமாச்சலப் பிரதேசம் | - | 24.23 |
| 4. | கோதுமை | பஞ்சாப் | - | - |
| | a. சிறுகுறு விவசாயிகள் | பஞ்சாப் | 76.63 | - |
| | b.நடுத்தரப்பண்ணை | பஞ்சாப் | 80.63 | - |
| | c.பெரியபண்ணை | பஞ்சாப் | 89.20 | - |
| | சராசரி | பஞ்சாப் | 85.52 | - |
| 5. | பழங்கள் | | | |
| | மாம்பழம் | பஞ்சாப் | 96.40 | - |
| | திராட்சை | பஞ்சாப் | 96.60 | - |
| | சிட்ரஸ் | பஞ்சாப் | 98.00 | - |
| | ரத்தனகிரி மாம்பழம் | மஹாராஷ்டிரா | 98.00 | - |
| 6. | காய்கறிகள் | | | |
| | தக்காளி | ஹிமாச்சலப்பிரதேசம் | 98.00 | 94.50 |
| | காலி.ஃ.பிளவர் | ஹிமாச்சலப்பிரதேசம | 96.33 | 94.40 |
| | முட்டைகோஸ் | ஹிமாச்சலப்பிரதேசம் | 95.66 | 93.00 |
| | கத்தரி | ஹிமாச்சலப்பிரதேசம் | 96.60 | 94.39 |
| | பட்டாணி | ஹிமாச்சலப் பிரதேசம் | 89.25 | 84.80 |
| | உருளை | அமிர்தசர்-பஞ்சாப் | 78.78 | - |
| | | ஜலந்தர்- பஞ்சாப் | 83.65 | - |
| | | மோஹா- பஞ்சாப் | 91.69 | - |
| 7. | a. பால் | மஹாராஷ்டிரா | 77.41 | - |
| | b. பால் | மேற்கு ஹாராஷ்டிரா | 91.88 | - |
| | | கொங்கன் மஹாராஷ்டிரா | 91.66 | - |

குறிப்பு

## 8.4. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. விவசாயப் பொருட்களின் சந்தைகளின் வகைகள்யாவை?

2. சந்தைப்படுத்தப்பட்ட உபரி என்றால் என்ன?

## 8.5.இடர்பாட்டு விற்பனை

ஆந்திரபிரதேசத்தில் பால் உற்பத்தி செய்யும் விவசாயிகள் கட்டுப்படியான விலை கிடைக்காததால் பாலை சாலையில் கொட்டுகிறார்கள்.

கிணத்துக்கடவு தக்காளி மார்க்கெட்டில் தக்காளி விலை வீழ்ச்சியால் (கிலோ ரூ.2 க்குகூட போகாத நிலமை) கொந்தளித்த விவசாயிகள் தாங்கள் கொண்டு வந்த தக்காளிகளை திரும்ப கொண்டு செல்ல மனமின்றி (அதற்கும் செலவாகுமே) சாலையோரம் கொட்டி செல்கின்றனர். ஈரோட்டில் மஞ்சள் விவசாயிகள் தாங்கள் விளைவித்த மஞ்சளுக்கு குவிண்டாலுக்கு ரூ.9,000 வழங்க வேண்டும் என்று விலை அறிவித்தனர். ஒரு குவிண்டால் (100 கிலோ) மஞ்சள் உற்பத்தி செய்ய செலவே விவசாயிக்கு ரூ.6,000த்துகும் மேல் ஆகிறது. ஆனால் சந்தையிலும் அரசு சார்ந்த ஒழுங்குமுறை விற்பனை கூடத்திலும் அதற்கு கிடைக்கும் விலை ரூ.3,000 முதல் 5,000 மட்டுமே. அதே சமயம் மஞ்சள்தூள் விலை ரூ.200 ஆக இருக்கிறது. இதற்கெல்லாம் காரணம் பதுக்கல்காரர்களும் பெரும் வர்த்தக நிறுவனங்களுமே. தோட்டத்தில் எடுக்கப்பட்ட தக்காளிப்பழம் ஒரு பெட்டி 17 கிலோ எடை கொண்டது. ஒரு கிலோ மார்க்கெட்டில் விற்ற விலை 90 பைசா வாடகை கமிஷன்போக கைக்கு கிடைத்தது 50 பைசா. பழம் பறித்த ஆட்கூலி 65 பைசா ஆக தோட்டத்தில் அறுவடை செய்த தக்காளிப்பழம் ஒரு கிலோ அறுவடைக்கே 15 பைசா நஷ்டம் இதனால் மீதத்தை அறுவடை செய்யாமல் நிலத்திலேயே வீணாகவிட விட்டுவிடுகின்றனர்.

விவசாயிகள் மத்த முட்டுவழி செலுவுக்கெல்லாம் குறைந்தது ரூ 25,000 ஆகிறது. இதன் காரணமாக விவசாயிகள் மனஉளைச்சலும் துயரமும் அடைக்கின்றனர். உற்பத்தி செலவு அதிகரித்ததால் உற்பத்திக்கு போதிய விலை கிடைக்கவில்லை. விவசாயிகள் நஷ்டமடைகின்றனர்.

குறிப்பு

சாதாரணமாக பூவிற்கு மூன்று களையெடுக்க வேண்டும். நல்ல மழைக்காலம் என்றால் நான்கு முறை எடுக்கவேண்டும். ரசாயண முறை உரமிடுதல் வந்தபிறகு வாரம் வாரம் களையெடுக்க வேண்டியிருக்கிறது. கட்டுபடியாகாமல் நில உரிமையாளர்கள் தினமும் காலையில் வயல்களில் கொஞ்சகொஞ்சமாக களைபிடுங்குகின்றன. முதுகொடிய வருடமெல்லாம் உழைத்து கூலி கொடுத்து களையெடுக்க முடியாத காரணத்தினால் விவசாயிகள் துயரம் அடைகின்றன.

**விவசாயப் பொருட்களை சந்தையிடுதலில் காணப்படும் குறைகள்**

விவசாயப் பொருட்கள் விற்பனை முறையில் பல்வேறு சீர்கேடுகள் உள்ளன.

**1. விவசாயிகளிடையே அமைப்பில்லாமை:**

விவசாயப் பொருட்களை உற்பத்தி செய்வோரிடையே எவ்வித கூட்டு அமைப்பும் இல்லை. இந்திய விவசாயிகள் நாடு முழுவதும் பரந்துபட்டு உள்ள சிறு விவசாயிகள் ஆவர். அவர்களுக்கு தங்கள் பொருட்களின் விற்பனை பற்றி சிந்திக்க குறைவான நேரமும் அறிவுமே உள்ளன.

**2. வலுக்கட்டாய விற்பனை:**

குறிப்பு

இந்திய விவசாயிகள் தங்கள் சொந்த கிராமங்களிலேயே அறுவடை முடிந்தவுடனேயே தங்கள் பொருட்களை விற்க வேண்டிய கட்டாய நிலை உள்ளது. காரணம் விவசாயிகளில் பலர் உள்ளூர் வட்டிக்கடைக்காரரிடம் கடன்பட்டுள்ளனர். அவருக்கு முன்னர் ஏற்றுக்கொண்ட விலையில் விவசாயிகள் தங்கள் பொருட்களை விற்க வேண்டியுள்ளது.

மேலும் கிராமங்களை நகரச் சந்தைகளோடு இணைக்கும் சாலைகள் இல்லாதிருப்பதும், சேமிக்கும் வசிதிகள் இல்லாதிருப்பதும் கிராமத்திலேயே தனது பொருட்களை விற்பதற்கு விவசாயிகளை கட்டாயப்படுத்துகின்றன.

**3. அதிக எண்ணிக்கையில் இடைத்தரகர்கள் உள்ளமை:**

இந்தியாவில் அங்காடி முறையில் நீண்ட நெடும் சங்கிலி போன்ற இடைத்தரகர்கள் உள்ளனர். இறுதி நுகர்வோருக்கும் விவசாயிகளுக்கும் இடையே பல நிறுவனங்கள் உள்ளன. நுகர்வோர் செலுத்தும் விலையில் பெரும் பகுதியை இடைத்தரகர்கள் எடுத்துக் கொள்கின்றனர்.

இதன் விளைவாக விவசாயிகளின் பங்கு மிகவும் குறைந்து விடுகிறது. எடுத்துக்காட்டாக னு.ளு.சித்து செய்த ஆய்வின்படி அரிசி விலையில் விவசாயிக்கு கிடைத்தது 53 சதவிகிதம்தான் 31 சதவிகிதம் இடைத்தரகர் பங்காக இருந்தது. மீதியுள்ள 16 சதவிகிதம் அங்காடிச் செலவாகும். காய்கறியில் இடைத்தரகர் பங்கு 29.5 சதவிகிதம் பழத்தில் 46.5 சதவிகிதம்.

## 8.6. உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

1.இந்தியாவில் உள்ள விவசாய் சந்தைகளின வகைகள் வருமாறு:அ) அடிப்படை அல்லது உள்ளூர் அங்காடிகள் ஆ) இரண்டாம்

தர அங்காடிகள் இ) முடியும் இடத்திலுள்ள அங்காடிகள் ஈ) சந்தைகள் உ) ஒழுங்குபடுத்தப்பட்ட அங்காடிகள் ஊ) கூட்டுறவு அங்காடிகள் எ)அரசு வணிகம்.

2. உணவு தானியங்களை உற்பத்தி செய்வோர் தமது உற்பத்தி முழுவதையும் விற்றுவிடுவதில்லை. தமது சொந்த உபயோகத்திற்காகவும், எதிர்காலத்தின் பயிரிட தேவையான விதை கூலி ஆகிவற்றிற்காகவும், உற்பத்தியில் ஒரு பகுதியை இருத்தி வைத்துக்கொண்டு உபரியையே விற்பனைக்கு கொண்டு செல்கின்றனா். இவ்வுபரி சந்தை இடக்கூடிய உபரி (Marketable Surplus) என்று கூறப்படும்.

**குறிப்பு**

# அலகு - 9 வேளாண்மையை சந்தைப்படுத்துதல்-II



குறிப்பு

## 9.1 நோக்கங்கள்

1.வேளாண்மையை சந்தைப்படுத்துதல் பற்றி அறிந்து கொள்ள.

2. ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைகள்' கூட்டுறவுச் சந்தைகள் பற்றி அறிந்து கொள்ள

3. சந்தை நுண்ணறிவு எதிர்கால வர்த்தகம் பற்றி அறிய.

## 9.2. வேளாண்மையை சந்தைப்படுத்துதல்

### பொருள்

உற்பத்தியாளர் கடன்பட்டிருப்பதால் தனது பொருளை பொதுவாக உள்ளூர் அங்காடியில் விற்று விடுகிறார். இவ்வித அங்காடியில் குறைவான எடை, நியாயமற்ற கழிவுகள், அதிகவிகிதத்தில் கமிஷன், பொருட்களில் கலப்படம் போன்ற பல தவறான நடத்தைகள் நடைபெறுகின்றன. இதன் விளைவாக உற்பத்தியாளரது வருமானம் குறைகிறது.

## 9.3. வகைகள்- ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைகள்

1928ல் "வேளாண்மை பற்றிய ராயல் குழு" மேற்கூறிய குறைகளைப் போக்க ஒழுங்குப்படுத்தப்பட்ட அங்காடிகளை அமைக்க பரிந்துரை செய்தது. இதன் பின்னர் பல மாநில அரசுகளும் அங்காடிகளை அமைக்க பரிந்துரை செய்தது. இதன் பின்னர் பல மாநில அரசுகளும் அங்காடிகளை ஒழுங்குப்படுத்த சட்டங்கள் இயற்றின.

1933ல் சென்னை மாநிலத்தில் அரசு வாணிபப் பயிர்கள் அங்காடிச் சட்டத்தை நிறைவேற்றியது. இதன் மூலம் ஒழுங்குப்படுத்தப்பட்ட

அங்காடிகள் உருவாயின. இச்சட்டம் 1959ல் மாற்றப்பட்டு 'சென்னை வேளாண்மைப் பொருட்கள் அங்காடிச் சட்டம்' கொண்டு வரப்பட்டது. தற்பொழுது அஸ்ஸாம், நாகலாந்து, கேரளா, ஜம்முகாஷ்மீர் தவிர எல்லா மாநிலங்களிலும் வேளாண்மைப் பொருள் விற்பனைக்கு ஒழுங்குப்படுத்தப்பட்ட அங்காடிகள் உருவாக்கப்பட்டுள்ளன.

குறிப்பு

**நன்மைகள் :**

**1. அங்காடிக் கட்டணங்கள் குறைகின்றன:**

ஒழுங்குப்படுத்தப்பட்ட அங்காடிகளில் என்னென்ன கட்டணங்களை, எவ்வளவு வாங்க வேண்டுமென்று திட்டவட்டமாக நிர்ணயிக்கப்படுகிறது. இதனால் அதிக கட்டணம் வசூலிக்க முடியாது. தரகு, எடைக் கட்டணம், நன்கொடை முதலியவற்றிற்கான கட்டணம் குறைகிறது. இதனால் ஒழுங்குப்படுத்தப்பட்ட அங்காடியில் நூறு ரூபாய் விற்பனையில் மூன்று முதல் ஐந்து ரூபாய் குறைகிறது.

**2. விற்பளையாளரின் எண்ணிக்கை அதிகரிக்கிறது**

இவ்வித அங்காடிகளுக்கு பல விற்பனைாளர்கள் பொருட்களை கொண்டு வருகின்றனர். அரிசி மற்றும் கோதுமையில், பஞ்சாபில் 73 சதிவிகிதம் உற்பத்தியாளரும், கர்நாடகாவில் 80 சதவிகிதமும், ம.பி.யில் 74 சதவிகிதமும், ஆந்திராவில் 90 சதவிகிதமும் ஒழுங்குப்படுத்தப்பட்ட அங்காடிக்கு தங்கள் பொருட்களை கொண்டு வருகின்றனர்.

**3. சரியான நிறுவைகள்:**

மெட்ரிக் முறையின் கீழ் சரியான படிக்கல்லையும் நல்ல தராசையும், முறையான எடைகளையும் பயன்படுத்துகின்றனர். எடை அளவுகள் அடிக்கடி ஆய்வு செய்யப்படுகின்றன.

**4. தகராறுகளைத் தீர்த்தல்:**

வியாபாரிகளுக்கும் விற்பனையாளருக்கும் இடையே எழும் தகறாரை தீர்க்க ஒரு எந்திரம் உருவாக்கப்பட்டுள்ளது. இந்த எந்திரம் தரம், எடை, தள்ளுபடி முதலியவற்றில் எழும் தகராறுகளை வழக்கு மன்றங்களுக்கு போகாமல் தீர்த்து வைக்கிறது.

**5. அங்காடி விபரங்கள்:**

அங்காடிக்கு வரும் பொருட்கள், இருப்பு, விலை பற்றி சரியான, நம்பத்தகுந்த விபரங்களை சேகரித்து விற்பனை செய்பவர்களுக்கும் வாங்குபவர்களுக்கும் ஒலி பெருக்கி மூலம் அறிவிக்கப்படுகிறது.

குறிப்பு

**6. தரத்தை நிர்ணயித்தல்:**

தரநிர்ணயம் செய்து, தரம் பிரித்து, கிட்டங்கிகளில் பொருட்களை சேமித்து உதவுகின்றன. அக்மார்க் தரங்களை சிறப்புக்குழு தீர்மானிக்கிறது.

**7. இடவசதி:**

பொருட்களை விற்பனை செய்ய, பேருந்து நிறுத்த, மனிதருக்கும் மாட்டுக்கும் தண்ணீர் வசதி செய்ய, மாடுகளைக் கட்ட வசதி செய்ய, தங்குவதற்கு வசதி செய்ய, விவசாயிகளுக்கு உணவுக்கு வகை செய்ய தகுந்த ஏற்பாடுகளை இவ்வங்காடிகள் செய்கின்றன.

**8. வேளாண்மை வளர்ச்சி:**

நல்ல விதை மற்றும் உரத்தைப் பயன்படுத்துவது பற்றி பிரச்சாரம் செய்யப்படுகிறது. பொதுவாக வேளாண்மையை முன்னேற்ற தேவையான அறிவைப் பரப்ப இத்தகைய அங்காடிகள் உதவுகின்றன. அது வருமானத்தை நிர்வகிக்கிறது. செலவைச் செய்து, உபரியை முதலீடு செய்கிறது. வரவுச்செலவுத் திட்டத்தை தயாரிக்கிறது. அது விலைப்பட்டியலை பராமரிக்கிறது. அது விவசாயிகளுக்கு வழிகாட்டுகிறது.

**9. நல்ல விலை:**

உற்பத்தியாளர் தனது பொருளுக்கு நியாயமான விலையைப் பெற உதவுகிறது.

**சந்தைக் ் குழு**

ஒவ்வொரு ஒழுங்குப்படுத்தப்பட்ட அங்காடியையும் ஓர் அங்காடிக்கழு நிர்வகிக்கின்றது. இக்குழுவில் உற்பத்தியாளர்கள், வணிகர்கள், உள்ளாட்சி அமைப்புகள், கூட்டுறவுச் சங்கங்கள், அரசு ஆகியவற்றின் பிரதிநிதிகள் உள்ளனர். பெரும்பான்மையான அங்கத்தினர்கள் உற்பத்தியாளரின் பிரதிநிதிகளே, இக்குழு அங்காடிக் கட்டணங்களை நிர்ணயிக்கிறது. தகராறுகள் ஏற்படும்பொழுது தீர்த்து வைக்கிறது. தரகர்கள், கமிஷன் ஏஜென்டுகள், எடை போடுபவர்கள் ஆகியோருக்கு உரிமம் வழங்குகிறது. சட்டத்தை செயல்படுத்துகிறது.

**ஒழுங்குப்படுத்தபடாத அங்காடிகள் மற்றும் பலவகையான அங்காடி கட்டணங்கள்:**

அங்காடியில் தனது பொருளை விற்பவர் மொத்த விலையையும் பெற இயலவில்லை. இதற்குக் காரணம் விவசாயிகள் விற்பனை மூலம் வந்த பணத்தில் பல தள்ளுபடிகள், கழிவுகள் செய்யப்படுவது தான்,

வரையறை செய்யப்படாதவையாக உள்ள அங்காடிக் கட்டணங்கள் எண்ணிக்கையில் அதிகம் உள்ளன.

மேலும், ஒழுங்குப்படுத்தப்படாத அங்காடிகளில் முறைகேடுகள் அதிகம். இடைத்தரகர்களால்பல தவறான நடவடிக்கை மூலம் அறியாத விவசாயிகள் ஏமாற்றப்படுகின்றனர். இத்தகைய தவறான நடவடிக்கைகள் வருமாறு: எடை அளவுகளை மோசடி செய்தல், பணம் செலுத்தாமலேயே மாதிரிகளை எடுத்துக் கொள்ளுதல், விற்பனை விலையை துணிக்கடியில் பேரம் பேசி நிர்ணயித்தல், ஐயத்திற்கிடமான மொழிகளாலும் குறியீடுகளாலும் பேசுதல்.



**4. தரம் பிரிக்கப்படாமை:**

இந்தியாவில் முக்கியப் பொருட்களான அரிசி மற்றும் கோதுமையில் கூட பொதுவாக ஏற்றுக் கொள்ளக்கூடிய தரம் இல்லை. தனிப்பட்ட உற்பத்தியாளர்கள் இத்தகைய பொருட்களின் தரத்தை நிர்ணயிக்க எடுத்த முயற்சி பல நேரங்களில் தோல்வியையே தழுவியது. காரணம் தரம் பிரிக்கப்பட்ட பொருளும் சாதாரண அங்காடி விலையையே பெற்றது. இந்தியாவில் நல்ல மற்றும் மோசமான பொருட்கள் ஒரே தொகுதியிலேயே விற்கப்படுகின்றன.

**5. சேமித்து வைக்கும் வசதியின்மை:**

கிராமங்களில் போதிய கிட்டங்கி வசதி இல்லை, இதனால் விவசாயி தனது பொருளை மண் குதிறுகளிலும், குழிகளிலும், சாதாரண சேமிப்பு அறைகளிலும் சேகரித்து வைக்க கட்டாயப்படுத்தப்படுகிறார். இவ்விதமான அறிவியல் பூர்வமற்ற சேமிப்பு முறைகள் அதிகமான வீணடிப்புக்கு கொண்டு சென்றன. சுமார் 15 சதவிகிதப் பொருள் வீணாகி, மனித நுகர்வுக்கு தகுதியற்றதாகி விடுகிறது. மேலும் அவை எலிகள் மற்றும் கொறிக்கும் விலங்குகளால் உட்கொள்ளப்பட்டு விடுகின்றன.

**6. போக்குவரத்து வசிதியின்மை:**

இந்தியா பரந்த, பெரிய நாடு, இருக்கின்ற போக்குவரத்து வசதிகள் மிகவும் போதாதவை. மோசமான சாலைகள் கிராமங்களையும் அங்காடிகளையும் இணைக்கின்றன. அவை மோட்டார் சாதனங்கள் செல்ல லாயக்கற்றவையாக உள்ளன. அதனால் மாட்டுவண்டிகள் போன்ற மெதுவாகச் செல்லும் வாகனங்களில் விவசாயப் பொருட்களை கொண்டு செல்ல வேண்டும். மேலும் போக்குவரத்துக் கட்டணங்கள் மிக அதிகமாக உள்ளன.

குறிப்பு

**7. அங்காடிச் செய்திகள் இல்லாமை:**

அங்காடி பற்றி செய்திகள், புலனாய்வு இல்லாமை மேலும் ஒரு சிக்கல், உற்பத்தியாளர் மற்றவர் சொல்வதை நம்ப வேண்டியுள்ளது. வணிகரும் வட்டிக்கு கடன் கொடுப்பவருமான நபரது அறிக்கை சரியான செய்தியை அளிக்கவில்லை. விவசாயிகள் கல்வியறிவு இல்லாதவர்களாக இருப்பதால் அங்காடி விலைகள் எட்டேறவில்லை.

**சந்தை முறைகளை முன்னேற்ற அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள் (Govt Measures to improve the system of Marketing)**

கீழ்க்கண்ட முக்கிய நடவடிக்கைகளை அரசு எடுத்துள்ளது.

**1. ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைகளை ஏற்படுத்துவது:**

தரகர்கள் மற்றுமுள்ளளோரது தவறான செயல்களிலிருந்து விவசாயிகளை பாதுகாக்க ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இத்தகைய அங்காடிகளின் நிர்வாகம் ஒரு அங்காடிக்குழுவிடம் உள்ளது. இக்குழு கீழ்க்கண்ட பணிகளை ஆற்றுகிறது. அ) எடை, தரகு முதலியவற்றிற்கான கட்டணங்களை நிர்ணயிப்பது. ஆ) அதிகாரப்பூர்வமற்ற கழிவுகளைத் தடுப்பது, தவறான பழக்கங்களை கைவிடுவது. இ) சரியான எடை அளவுகளை பயன்படுத்துவது. ஈ) விவசாயிகளுக்கு தற்கால நம்பிக்கையான அங்காடிச் செய்திகளை அளிப்பது உ)அங்காடி செற்பாடுகளில் விற்பனையாளரிடம் ஏற்படும் தகராறுகளை தீர்ப்பது.

**2. தரம் பிரிக்கப்படுதலும், மாதிரி அமைத்தலும்:**

தரம் பிரிக்கப்பட்ட வாய்ப்பாக, 181 விவசாயப்பொருட்களில் ஏற்றுக்கொள்ளப்பட்ட மாதிரிகள் (Standards) இதுவரை குறிப்பிடப்பட்டுள்ளன. அரசு நாக்பூரில் மத்திய தரக்கட்டுப்பாட்டு சோதனை நிலையத்தையும், பல மண்டல துணை தரக்கட்டுப்பாட்டு ஆய்வு நிலையத்தையும் ஏற்படுத்தியுள்ளது. இந்த சோதனைச்சாலைகளில் பொருட்களின் மாதிரிகள் ஆய்வு செய்யப்படுகின்றன. தரம் குறிப்பிடப்பட்டு அனுமதி பெற்ற விற்பனையாளர்களுக்கு 'அக்மார்க் முத்திரைகள் அளிக்கப்பட்டனர்'.

**3. சரியான மாதிரி எடைகளைப் பயன்படுத்துதல்:**

மைய அரசு 1958-ல் ஒரு மக்களவைச் சட்டம் மூலம் மெட்ரிக் எடைமுறையை கையாண்டது. இச்சட்டம் நாடு முழுவதிலும் ஒத்திசைவை (Uniformity) ஏற்படுத்தியது. இது பழைய எடை, அளவு முறைகளை மாற்றியமைத்தது.

**4. கிட்டங்கி மற்றும் சேமிப்பு வங்கிகள்:**

கிராம கடன் ஆய்வுக்குழு நாட்டளவில் மாநிலம் மற்றும் மாவட்டம் மற்றும் கிராம அளவிலும் மூன்றுவித சேமிப்பு முறையை பரிந்துரைத்தது. அதன் விளைவாக 1957-ல் மத்திய சேமிப்புக் கிட்டங்கி கழகம் தோற்றுவிக்கப்பட்டது. இதனை அடுத்து மாவட்ட கிட்டங்கி கழகங்கள் பல மாநிலங்களில் தோற்றுவிக்கப்பட்டன. நாட்டு அளவில் இந்திய உணவுக் கழகம் (FCI) தோற்றுவிக்கப்பட்டது. கிராம அளவில், கிராம சேமிப்பு நிலையங்களுக்காக மத்திய அரசு முன்மொழிந்த திட்டம் கொண்டு வரப்பட்டது. இதன் நோக்கம் குறைந்த விலையில் விவசாயிகள் விற்பதைக் தடுப்பதே ஆகும்.

குறிப்பு

**5. அங்காடிச் செய்தியை பரப்புதல்:**

அகில இந்திய வானொலி முக்கிய அங்காடிகளில் நிலவும் விலைகள் பற்றி அன்றாடம் ஒலிபரப்புகிறது. செய்தித்தாள்களும் விவசாய விலைகளை தினமும் அல்லது வாரத்திற்கு ஒருமுறை வெளியிடுகின்றன.

**6. சந்தைப்படுத்துதல் மற்றும் மேற்பார்வையிடுதல் பற்றிய இயக்கம்:**

பல்வேறு அமைப்புகளில் அங்காடி நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கவும் மத்திய, மாநில அரசுகளுக்கு அறிவுரை கூறவும் இந்திய அரசால் இவ்வியக்குநகரம் ஏற்படுத்தப்பட்டது. அது அங்காடி நடைமுறைகளை ஒழுங்குப்படுத்துகிறது. அது ஆட்களுக்கு பயிற்சி அளிக்கிறது. அது அங்காடி விரிவாகத்தில் ஈடுபடுகிறது. அங்காடி ஆய்வு மற்றும் ஆராய்ச்சி உதவுகிறத. விவசாயப் பொருட்கள் ஏற்றுமதி செய்யப்படுவதற்கு முன்னா் அது கட்டாய தரக் கட்டுப்பாட்டை செயல்படுத்துகிறது. ஒழுங்குபடுத்தப்பட்ட அங்காடிகளுக்கு தேவையான நிதியை அது அளித்து உதவுகிறது. முக்கியமான பொருட்களுக்கு தர வசதிகளை அளிக்க இவ்வாறு செய்யப்படுகிறது. தோ்ந்தெடுக்கப்பட்ட ஒழுங்குமுறை அங்காடிகளில் கட்டமைப்பு வசதிகளுக்காக இது உதவுகிறது.

**7. அரசின் வாங்கலும் ஆதரவு விலைகள் நிா்ணயமும்:**

ஒவ்வொரு காலத்திலும் ஆதரவு விலைகள் அறிவிக்கிறது. விவசாயிகளுக்கு நியாயமான விலை கிடைப்பதை உறுதி செய்வதற்காகத் தான் இவ்வாறு செய்யப்படுகிறது. விவசாயச் செலவு மற்றும் உற்பத்தி பற்றிய கமிஷனின் (CAC) பரிந்துரைப்படி விலைகள் நிா்ணயிக்கப்படுகின்றன.

அறிவிக்கப்பட்ட அளவை விட விலைகள் குறைய ஆரம்பித்தால், இந்திய உணவுதானியக் கழகம் (FCI) போன்றவை தலையிட்டு, ஆதரவு விலையில் விவசாயிகளிடமிருந்து பொருட்களை வாங்கும்.

**8. விவசாயப் பொருள் சந்தையிடுகை தொடர்பான தேசீய நிறுவனம்:**

இந்நிறுவனம் 1988-ல் ஏற்படுத்தப்பட்டத. இதன் குறிக்கோள்கள் விவசாயச் சந்தையிடுகைக்கு தேவையான கட்டுமானத்தை முன்னேற்றுவது. பயிற்சி வகுப்புகள் நடத்துவது, சிறந்த நிர்வாகத்திற்கு தேவையான ஆராய்ச்சியில் ஈடுபடுவது மற்றும் விவசாய சந்தையிடுகை பற்றி கல்வித்திட்டம் வகுப்பது போன்றவை ஆகும்.

**குறிப்பு**

சரிபார்க்க:

குறிப்பு : அ) உங்களுடைய விடையை கீழ்கண்டவாறு பதில் அளிக்கவும்.

ஆ) உங்களுடைய பதிலை இந்த அலகின் இறுதியில் சரிபார்த்துக் கொள்ளவும்.

1. சந்தையிடுதலின் குறைகள் யாவை?
2. கூட்டுறவு வங்கி என்பது என்ன?

## 9.4. கூட்டுறவுச் சந்தைகள்

கூட்டு முயற்சியின் மூலம் ஒன்றாக வாழ்ந்து, ஒன்றாகப் பணி செய்து பொதுவான குறிக்கோள்களை அடைவதை கூட்டுறவு என்ற சொல் சுட்டிக்காட்டுகிறது. இம்முறையில் மக்கள் தாமாக ஒன்று சேர்கின்றனர். கூட்டுறவு சந்தை முறை என்பது அங்கத்தினரது விவசாயப் பொருட்களைக் பொறுத்த வரையில் நிறைவேற்றப்படும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அங்காடிப் பணிகளை செய்வதற்காக ஒருங்கிணைக்கப்படும் அங்கமாகும். இது ஒரு வணிக நிறுவனமாகும். கூட்டுறவே இதன் கொள்கையாகும். இது விவசாய-அங்கத்தினனர்களது விவசாயப் பொருட்களை விற்றுக்கொடுக்கிறது. நுகர்வோர் கொடுக்கும் முழு விலையையும் இது உற்பத்தியாளருக்கு அளிக்கிறது.

**கூட்டுறவு சந்தை முறையின் நோக்கங்கள்**

வேளாண்மை விளைபொருள் விற்பனைக்குரிய கூட்டுறவு அங்காடிகளை கீழ்க்கண்ட நோக்கங்களோடு அமைக்க வேண்டுமென ஐக்கிய நாட்டுச் சபையின் உணவு வேளாண்மை அமைப்பு குறிப்பிட்டுள்ளது.

குறிப்பு

1. உறுப்பினர்களின் பொருட்களை நேரடியாக சிறந்த அங்காடியில் நல்ல விலை கிடைக்கும் வகையில் விற்பனை செய்ய வேண்டும். இதன் மூலம் அங்காடியில் விவசாயிகளது பேரம் பேசும் சக்தி பெருக்கப்படுகிறது.
2. ராயல் கமிஷன் குறிப்பிட்டது போல், விவசாய அங்காடி முறையில் நிலவும் தீமைகள் திருட்டுக்கு ஒப்பானவை ஆகும். கூட்டுறவு அங்காடி முறையில் நியாயமற்ற நிலைகள் குறைக்கப்படும். அறவே அகற்றப்படும் நல்ல அளவு, எடை முறை வழங்கப்பட வேண்டும்.
3. கூட்டுறவு அங்காடி முறையில் இடைத்தரகர்கள் கைவிடப்படுவர். அவர்களது பணி சிறப்பாகவும் சிக்கனமாகவும் செய்யப்படும்.
4. இம்முறையில் பொருட்கள் வகைப்படுத்தப்படும், தரத்திற்கேற்ற விலை கிடைக்கச் செய்ய வேண்டும்.
5. பொருட்களைச் சுத்தமாகவும் வழியில் கெடாமலும், வீணாகாதவாறும் பார்த்துக் கொள்ள வேண்டும். பொருட்கள் பாதுகாப்பாக வைக்கப்பட வேண்டும்.
6. சிறந்த விற்பனை முறைகளை உருவாக்க வேண்டும்.
7. விற்பனைக்கு காத்திருக்கும் காலத்தில் விவசாயிகளுக்கு வேண்டிய பணத்தை முண்பணமாக கொடுத்து உதவ வேண்டும்.
8. விற்பனையில் ஒவ்வொரு நிலையிலும் விவசாயிகளுக்கு தேவையான விபரங்களை வழங்க வேண்டும்.

கூட்டுறவுச் விற்பனைச் சங்கங்களின் அமைப்பு:

கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் அமைப்பு இரண்டு அடுக்காகவோ, மூன்று அடுக்காகவோ உள்ளது. இவற்றை கீழே காணலாம்.

| இரண்டு அடுக்கு முறை | மூன்று அடுக்கு முறை |
|---|---|
| தேசிய விவசாய கூட்டுறவு விற்பனை அமைப்பு மாநில விற்பனைச் சங்கம் அடிப்படை விற்பனைச் சங்கம் | தேசிய விவசாய கூட்டுறவு விற்பனை அமைப்பு மாநில விற்பனைச் சங்கம் மத்திய விற்பனைச்சங்கம் முதன்மை விற்பனைச் சங்கம் |

தனிப்பட்ட விவசாயிகள், மிகப்பெரிய கடன் சங்கங்கள், பணிக் கூட்டுறவுச் சங்கங்கள் கூட்டுறவு விற்பனைச் சங்கத்தில் அங்கத்தினராகலாம். அங்கத்தினரது வைப்பு, பங்குகள், மத்திய நிதி நிறுவனங்களிலிருந்து பெறப்பட்ட கடன்கள் முதலியன இச்சங்கங்களின் நிதி மூலங்களாகும். விற்பனைச் சங்கங்களின் கூட்டமைப்பு 1958ல் டெல்லியில் அமைக்கப்பட்டது. இது விவசாயப் பொருட்கள் மற்றவற்றின்

விற்பனையை நாடு முழுவதும் ஒருங்கிணைக்கிறது. மாநில விற்பனைச் சங்கங்கட்கு இது தொழில்நுட்ப அறிவுரை வழங்குகிறது.
மாநில விற்பனைச் சங்கங்கள் மாநிலங்களுக்கு இடையே நடக்கும் வணிகத்தை நடத்துகிறது. இவை மத்திய, முதன்மைச் சங்கங்களுக்கு கடன் அளிக்கிறது. மாநில அரசு உணவு கொள்முதல் செய்யும்பொழுது இது உதவுகிறது.



மத்திய விற்பனைச் சங்கங்கள் மாவட்ட அளவில் செயல்படுகின்றன. இவை விவசாயப் பொருட்களை வாங்குதல், விற்றல் மற்றும் முதன்மைச் சங்கங்களுக்கு கடனளித்தல் முதலிய பணிகளில் ஈடுபடுகிறது. இவை மாநில விற்பனைக் சங்கங்களையும் முதன்மைச் சங்கங்களையும் இணைக்கும் பாலமாக அமைகின்றன. இவை மாவட்டங்களிடையே நடைபெறும் வணிகத்தை செய்கின்றன. கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் நுகர்வோருக்கு நுகர்வோர் பொருள் அளித்து உதவுகின்றன.

முதன்மை விற்பனைச் சங்கங்கள் தாலுகா அல்லது வட்டார அளவில் செயல்புரிகின்றன. விவசாயப் பொருள் உற்பத்தி செய்வோர், விவசாயப் பணி செய்வோர் இதில் அங்கத்தினர். இச்சங்கங்களின் குறிக்கோள் சுயஉதவி, சிக்கனம், கூட்டுறவு முதலிய பண்புகளை உறுப்பினரிடையே வளர்ப்பதாகும்.

**கூட்டுறவு விற்பனை முறையின் நன்மைகள்:**

**1. விவசாயிகளுக்கு கிடைக்கும் வருவாய் அதிகரிக்கிறது:**

கூட்டுறவுச் சங்கங்கள் விவசாயிகளுக்கு நல்ல விலை பெற்றுக் கொடுக்கின்றன. இதன்மூலம் விவசாயிகளின் வருவாய் கூடுகின்றது. இதற்குப் பல காரணங்கள் உள்ளன. சிறிய விவசாயிகள் கூட்டுறவின் மூலம் இணைக்கின்றபொழுது அவர்களின் பேரம் பேசும் ஆற்றல் அதிகரிக்கிறது. இவ்வித விற்பனை மூலம் இடைத்தரகர் அகற்றப்படுகின்றனர். இதில் விற்பனைச் செலவு குறைகிறது.

**2. அங்காடியின் கட்டமைப்பு பெருகுகிறது:**

சங்கங்கள், கிட்டங்கிகள், போக்குவரத்துச் சாதனங்கள், தரம் பிரிக்கும் ஏற்பாடுகள் முதலியவற்றை தன்னகத்தே கொண்டுள்ளன. இதற்கென இவை அரசிடமிருந்து நிதியுதவி பெறுகின்றன. இத்தகைய அகக் கட்டுமானங்கள் விற்பனைத் திறமையை வளர்க்கின்றன.

**3. கடன் வசதி:**

கூட்டுறவு சங்கங்கள் விவசாய இடுபொருள் மற்றுமுள்ள விவசாயத் தேவைகளுக்கு அங்கத்தினருக்கும் கடனளித்து உதவுகிறது. இதற்கான வட்டி விகிதம் குறைவு. விளைபொருட்களை ஈடாக வைத்து கொண்டு இச்சங்கங்கள் கடன் அளிக்கின்றன. எனவே வட்டிக்கு கடன் கொடுப்போரின் பிடியிலிருந்து இவர்கள் விடுபடுகிறார்கள்.

**4. விவசாயிகளுக்கு தேவையானவற்றை வழங்குதல்:**

விற்பனைச் சங்கங்கள் விளைபொருட்களை விற்பனை செய்வதற்கு உதவுவதோடு கூட, விவசாயிகளுக்கு வேளாண்மைக்கு வேண்டிய விதைகள், உரங்கள், மருந்துகள், கருவிகள் முதலியவற்றையும் நுகர்வுக்கு வேண்டிய துணி, மண்ணெண்ணெய் போன்ற பொருட்களையும் வாங்கி வழங்குகின்றன.

குறிப்பு

**5. வணிகத் தீமைகள் நீங்குதல்:**

கூட்டுறவு விற்பனை முறையினால் வணிகத்தீமைகள், வீணடிப்பு முதலியன வெகுவாக குறைக்கப்படுகின்றன.

**6. உபரி பிரிக்கப்படுதல்:**

விற்பனைச் சங்கத்தின் நடவடிக்கையில் அங்கத்தினர் பங்கினையொட்டி சங்கத்தின் இலாபம் அங்கத்தினரிடையே பிரிக்கப்படுகிறது.

**7. கல்வியறிவு புகட்டல்:**

கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் அங்கத்தினருக்கு வழிகாட்டி அறிவுரை வழங்குகின்றன. அவர்களது சிக்கல்களை சங்கங்கள் தீர்த்து வைக்கின்றன. அங்கத்தினர் உற்பத்தியைப்போல சந்தையிடுகையும் முக்கியம் என்பதை உணரலாம். இவை விற்பனை பற்றி அன்றாடச் செய்திகளை அளிக்கின்றன. அவை பயிர் செய்தலில் புதிய முறையை அறிவிக்கின்றன. அறிவியல் தொழில்நுட்பத்தில் புதிய வளர்ச்சியை குறிப்பிடுகின்றன.

**8. அரசுக்கு உதவி:**

கூட்டுறவுச் சங்கங்கள் அரசின் திட்டங்களை செயல்படுத்த உதவுகின்றன. விவசாயிகளிடமிருந்து விற்பனை செய்யக்கூடிய உணவுப் பொருட்களை திரட்டிக் தரும் பணியைச் செய்வதால் நாட்டின் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்குத்துணை செய்கிறது. விலையை நிலைப்படுத்த

இச்சங்கங்கள் அரசுக்கு உதவுகின்றன. அரசின் புதிய திட்டங்கள் மற்றும் கொள்கைகள் இச்சங்கங்கள் மூலம் விவசாயிகளுக்கு சென்றடைகின்றன.



**கூட்டுறவு சநதைத் முறையின் குறைகள்: (Limitations)**

1. இச்சங்கங்களின் மேலாளர்கள், செயலர் மற்றுமுள்ள பணியாளர் குறைவான சம்பளம் பெறுகின்றனர். இவர்கள் போதுமான தகுதி படைத்தவர் அல்ல.
2. கூட்டுறவுச் சங்கங்கள் போதிய வளர்ச்சி பெறவில்லை. காரணம் அங்கத்தினரது மனப்பூர்வமான ஒத்துழைப்பு கிடைக்கவில்லை.
3. நிர்வாகத்திற்கு நியாயமற்ற ஆட்கள் தேர்ந்தெடுக்கப்படுவதால் வளர்ச்சி பாதிக்கப்படுகிறது.
4. கூட்டுறவு சங்கங்களால் அமைப்புடன் செயல்படும் தனியார் வணிக நிறுவனங்களோடு போட்டியிட முடியவில்லை.
5. போதுமான மூலதனத்தைப் பெற முடியவில்லை.
6. வணிகர்களுக்கும், சாகுபடி செய்யாதவர்களுக்கும் சங்கத்தில் மிகுதியாக உள்ளனர்.
7. மாநில, மாவட்ட சங்கங்கள் கீழ்மட்டச் சங்கங்களுக்கு வழிகாட்டவில்லை.
8. போக்குவரத்து, தரம் பிரித்தல், கிட்டங்கி வசதிகளைப் பெருக்குதல் போன்றவற்றை அத்கரிக்கவீல்லை. எனவே சங்கங்களின் பணி திருப்தி தரவில்லை.
9. பல நேரங்களில் அளிக்கப்படும் விலைகள் அங்காடி விகிதத்தை விட குறைவு.
10. விவசாயிகள் படிப்பறிவற்று இருப்பதால் கூட்டுறவின் நன்மைகளை புரிந்துகொள்ள முடியவில்லை.

குறிப்பு

## 9.8. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

**சந்தை நுணுக்கம்:(Market Intelligence)**

முக்கிய பொருட்களின் சந்தையிடுகின்ற மிகுதியினை அறியவும், அறுவடைக்கு பின் உணவு பொருட்களின் சேதத்தினை அறியவும், மற்றும் வடகிழக்கு பகுதிகளின் முக்கிய விவசாயப் பொருட்கள் மற்றும் பழவகைககளில் விளைச்சலை அறிந்திடவும், இந்த இயக்குநரகம் அளவாய்வினை நடத்தி கொண்டிருக்கிறது. 1954ம் ஆண்டு இந்தியாவில் விவசாயப் பொருட்களின் விலைகளை சேகரிக்க சந்தை நுணுக்க பயிற்சி திட்டம் துவக்கப்பெற்றது.

**திட்டத்தின் நோக்கங்கள்:**

சந்தை செய்திச் சேவை மற்றும் சந்தை நுணுக்கம் இரண்டும் ஒருங்கிணைக்கப்பட்ட சந்தை நுணுக்கத்தின் நோக்கமாகும். பண்ணை பொருட்களின் உற்பத்தி நுணுக்கம் திறம்பட பொருட்களை வழங்குதல் மற்றும் நல்ல விலை நிர்ணயம் செய்தல் போன்ற செயல்களில் உற்பத்தியாளருக்கும் விற்பனையாளருக்கும் உதவுவதே சந்தை செய்தி சேவையின் நோக்கமாகும். சந்தை செய்தி சேவையின் இத்திட்டம் மேம்படுத்த கீழ்க்கண்ட நடவடிக்கைகளை கொண்டிருக்கிறது.

குறிப்பு

1. தினசரி சந்தையின் நிலவரத்தை அந்தந்த பகுதியில் இருக்கும் இந்திய வானொலி மூலம் ஒளிப்பரப்புதல்.
2. இந்திய வானொலி மூலம் ஒவ்வொரு வாரமும் சந்தையின் ஆய்வு அறிக்கையினை ஒளிப்பரப்புதல்.
3. காலந்தோறும் வெளியிடுகின்ற செய்தி அறிவிப்புகளை பஞ்சாயத்துகளுக்கும், சமுதாய வளர்ச்சிக்கான பகுதிகளுக்கும் அனுப்புதல்.
4. உள்ளூர் செய்தி தாள்களில் முக்கியமான சந்தைகளின் விலைபொருட்களின் தினசரி நிலவரத்தை வெளியிடுதல்.
5. சந்தையில் உள்ள தகவல் பலகையில் சந்தை செய்தி பற்றிய அறிக்கையை ஒட்டி வைத்தல்.

## 9.7.உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. சந்தையிடுதலின் குறைகள் யாவை?
2. கூட்டுறவு வங்கி என்பது என்ன?

## 9.8. எதிர்கால வர்த்தகம்:

**எதிர்கால ஒப்பந்தம்**

நிதியியலில் எதிர்கால ஒப்பந்தம் என்பது எதிர்காலத்தில் ஒரு குறிப்பிட்ட தேதியில் ஒரு தரநிலையான அளவு மற்றும் தரம் கொண்ட ஒரு குறிப்பிட்ட சொத்தை குறிப்பிட்ட விலைக்கு (எதிர்கால விலை) வாங்க அல்லது விற்க இரு தரப்பினரிடையே செய்துகொள்ளப்படும் தரநிலையாக்கப்பட்ட ஒப்பந்தம் ஆகும். இந்த ஒப்பந்தங்கள் எதிர்காலப் பரிவர்த்தனையகத்தில் விற்கப்படுகின்றன. எதிர்கால ஒப்பந்தங்கள் பங்குகள், பங்குப் பத்திரங்கள், உரிமைகள் அல்லது பற்றாணைகள் போன்று ‘‘நேரடி’’ கடனீடுகள் அல்ல. இருப்பினும் வழித்தோன்றல்

குறிப்பு

ஒப்பந்தங்களே ஆனாலும் அவை கடனீடுகளே. அதில் குறிப்பிடப்பட்ட சொத்தை எதிர்காலத்தில் வாங்க ஒப்பக்கொள்ளும் தரப்பினர் குறுநிலை (Short Position) வகிப்பார். விலையானது, ஒப்பந்தம் வாங்கப்படும் அல்லது விற்கப்படும் தேதியில் பரிவர்த்தனையகத்தில் போட்டியிடும் வாங்குதல் மற்றும் விற்றல் ஆணைகளின் தேவை மற்றும் வழங்கல் சக்திகளிடையே நிலவும் அப்போதைய சமநிலையால் நிர்ணயிக்கப்படுகிறது. பல நிகழ்வுகளில் ஓர் எதிர்கால ஒப்பந்தத்தில் குறிப்பிடப்படும் சொத்து வழக்கமான “பொருளாக” இல்லாமல் இருக்கலாம். அதாவது நிதியியலிலான எதிர்காலத்தில் ஒப்பந்ததில் குறிப்பிடப்படும் சொத்து, நாணயம், கடனீடுகள் அல்லது நிதி பத்திரங்கள் மற்றும் பங்குக் குறியீடுகள் மற்றும் வட்டி வீதங்கள் போன்ற புலப்படா சொத்துகளாகவும் இருக்கலாம்.

எதிர்காலத் தேதியானது வழங்கல் தேதி அல்லது இறுதிக் கணக்கு முடித்தல் தேதி என அழைக்கப்படுகிறது. பரிவர்த்தனையகத்தில் ஒரு நாளின் வர்த்தக நேர அளவின் இறுதியில் உள்ள எதிர்கால ஒப்பந்தத்தின் அதிகாரப்பூர்வமான விலை பரிவர்த்தனையகத்திலான அன்றைய வணிகத்திற்கான கணக்குத் தீர்வு விலை என அழைக்கப்படுகிறது.

முன்னோக்கு ஒப்பந்தம் என்பது இதனுடன் நெருங்கிய தொடர்புடைய ஒப்பந்தமாகும். இவை இரண்டும் ஒரு சில அம்சங்களில் வேறுபடுகின்றன. எதிர்கால ஒப்பந்தங்களும் முன்னோக்கு ஒப்பந்தங்களும் பெரிதும் ஒத்தவையே ஆனால் எதிர்கால ஒப்பந்தங்கள் தரநிலையாக்கப்பட்ட சொத்துகளின் மீதே வரையறுக்கவும் வர்த்தகமும் செய்யப்படுகின்றன என்பது மட்டுமே இவை இரண்டுக்குமுள்ள வேறுபாடாகும்.முன்னோக்கு ஒப்பந்தங்களைப் போலன்றி, எதிர்கால ஒப்பந்தங்களில் வழக்கமாக வரம்பளவுத் தேவைகளில் இடைக்கால கணக்குத் தீர்த்தல்கள் அல்லது “மெய் உயர்வுகள்” இருக்கும். இதில் இரு தரப்பினரும் இலாபத்தில் இரு தரப்பினருக்கும் கடனீடாக அமையும் வகையில் கூடுதல் சொத்துகள் எதனையும் பரிமாற்றம் செய்துகொள்வதில்லை. அது மட்டுமின்றி ஒப்பந்தம் திறக்கப்படும் போது மட்டுமே அறியாத மொத்த இலாபம் அல்லது நட்டம் தெரியும்.

எதிர்கால ஒப்பந்தம் அதன் ஒப்பந்ததாரருக்கு ஒப்பந்தத்தின் விதிமுறைகளுக்கிணங்க குறிப்பிட்ட அந்த வழங்கும் வழங்கலை ஏற்கும் பொறுப்பை வழங்குகிறது. இதில் ஒரு விருப்பத் தெரிவு வாங்குபவருக்கு

குறிப்பு

உரிமையை வழங்குகிறதே தவிர அந்த தெரிவின் விற்பனையாளர் அதற்கு முன்பு வைத்திருந்த நிலையை நிறுவும் பொறுப்பை அல்ல வேறொரு விதத்தில் கூறுவதென்றால், விருப்பத் தெரிவுகள் ஒப்பந்தத்தின் உரிமையாளர் தீர்த்தல் தேதி அன்று ஒப்பந்த விதிமுறைகளை நிறைவு செய்ய வேண்டும். விற்பவர் குறிப்பிடப்பட்டுள்ள சொத்தை வாங்குபவருக்கு வழங்கிறார் அல்லது ரொக்கத்தின் மூலமாகக் கணக்குத் தீர்க்கப்படும் எதிர்கால ஒப்பந்தமெனில், நட்டத்தைக் கொண்டிருந்த எதிர்கால வர்த்தகரிடமிருந்து இலாபம் பெற்ற தரப்பினருக்கு ரொக்கம் பரிமாற்றம் செய்யப்படுகிறது. எதிர்கால பொறுப்பு நிலையை வகிக்கும் ஒரு தரப்பினர் கணக்குத் தீர்த்தல் தேதிக்கு முன்பு பொறுப்பிலிருந்து பின்வாங்குவதற்கு ஒரு நீண்ட பொறுப்புநிலையை விற்பதன் மூலம் அல்லது ஒரு குறுகிய பொறுப்பு நிலையை விற்பதன் மூலம் தனது பொறுப்பு நிலையைத் தொடங்கலாம்.

திர்கால ஒப்பந்தங்கள் மிகவும் தரநிலையாக்கப்பட்டதாக இருப்பதால் அவற்றின் எளிதில் மாறும் தன்மை உறுதியானதாக உள்ளது. அவை பின்வருபவற்றைக் குறிப்பிடுகின்றன.

- குறிப்பிடப்படும் சொத்து அல்லது நிதிக் கருவி இது குறுகிய கால வட்டிவீதம் வரையிலுள்ள எதுவாகவும் இருக்கலாம்.
- கணக்குத் தீர்த்தலின் வகை ரொக்க கணக்குத் தீர்த்தலாகவோ அல்லது பௌதிக முறையாகவோ இருக்கலாம்.
- ஒப்பந்தத்தில் குறிப்பிடப்படும் சொத்தின் அளவு மற்றும் அலகுகள் இது பத்திரங்களின் உத்தேச அளவு எண்ணெய் பேரல்களின் குறிப்பிட்ட எண்ணிக்கை வெளிநாட்டு நாணயங்களின் அலகுகள், குறுகிய கால வட்டி வீதம் வர்த்தகம் செய்யப்படும் உத்தேச அளவிலான வைப்புநிதிகளாக இருக்கலாம்.
- எதிர்கால ஒப்பந்தம் குறிப்பிடப்படும் நாணயம்.
- வழங்கப்படும் தயாரிப்பின் தரம் (grade) பத்திரங்கள் பயன்படுத்தப்பட்டால், எந்தப் பத்திரங்கள் வழங்கப்படும் என்பதை இது குறிக்கும் பௌதிக பொருட்கள் பயன்படுத்தப்பட்டால் வழங்கப்படுவதாகக் குறிக்கப்படும் பொருட்களின் தரத்தை மட்டுமின்றி வழங்கப்படும் விதம் மற்றும் இடத்தையும் இது குறிக்கும் எடுத்துக்காட்டுக்கு NYMEXலைட்இனிப்பு கச்சா எண்ணெய் ஒப்பந்தத்தில் ஏற்கக்கூடிய கந்தக அளவு மற்றும் API

தன்னீட்பு அதுமட்டுமின்றி விலையிடல் புள்ளி ஆகியவையும் அத்துடன் வழங்கப்படும் இடமும் குறிப்பிடப்பட்டுள்ளன.

- வழங்கப்படும் மாதம்
- கடைசி வர்த்தகத் தேதி
- குறைந்தபட்ச அனுமதிக்கத்தக்க விலை ஏற்ற இறக்கமான சரக்கு பரிமாற்ற முறை போன்ற பிற விவரங்கள்.

**குறிப்பு**

**வரம்பெல்லை**

பரிவர்த்தனையகத்தின் வரவு ஆபத்தைக் குறைக்க வர்த்தகர்கள் ஒரு வரம்பெல்லை அல்லது செயல்திறன் பத்திரத்தை அமைக்க வேண்டும். வழக்கமாக அது ஒப்பந்த மதிப்பின் 5%-15% மதிப்புடையதாக இருக்கும்.

வர்த்தகர்களின் எதிர்த்தரப்பு ஆபத்தைக் குறைக்க ஒழுங்குபடுத்தப்பட்ட எதிர்கால ஒப்பந்தப் பரிவர்த்தனையகங்களில் வர்த்தகம் செய்யப்படும் வர்த்தகங்களுக்கு கணக்குத்தீர்வு மையங்கள் உத்தரவாதமளிக்கின்றன. ஒவ்வொரு விற்பனையாளருக்கும் கணக்குத்தீர்வு மையமே வாங்குபவராகவும் ஒவ்வொரு வாங்குபவருக்கும் விற்பனையாளருமாக அமைகிறது. இதனால் எதிர்த்தரப்பினர் கணக்குத்தீர்த்தல் மையத்திற்கு பணம் செலுத்தத் தவறுவதன் ஆபத்து மையத்திற்கே உடையதாகிறது. இதனால் வர்த்தகர்கள் தங்கள் எதிர்தரப்பினருக்கு நிலுவை ஆபத்தை ஏற்படுத்தாமல் தங்கள் பரிவர்த்தனைகளை மேற்கொள்ள முடிகிறது. சில சந்தர்ப்பங்களில் ஒப்பந்தத்தில் குறிப்பிடப்படும் பொருட்களின் உரிமையாளர்களை நிதி பாதுகாப்பாளர்களுக்கு அல்லது பொறுப்பு நிலையை சமாளிக்கும் ஒப்பந்தங்களைத் தொடங்கும் பரவல் வர்த்தகர்களுக்கு (Spread traders) வரம்பெல்லைத் தேவைகள் தள்ளுபடி செய்யப்படுகின்றன அல்லது குறைக்கப்படுகின்றன.

**கணக்குத்தீர்வு வரம்பெல்லை**- இவை நிறுவனங்கள் அல்லது பெருநிறுவனங்கள் தங்கள் வாடிக்கையாளர்களிடம் திறந்த நிலை எதிர்கால ஒப்பந்தங்கள் மற்றும் விருப்பத் தெரிவு ஒப்பந்தங்களை மேற்கொள்கின்றன என்பதை உறுதிப்படுத்தும் நிதியியல் பாதுகாப்பு அம்சங்களாகும். கணக்குத்தீர்த்தல் வரம்பெல்லைகள் - இவை வாடிக்கையாளர் வரம்பெல்லையிலிருந்து வேறுபட்டவையாகும். ஏனெனில் எதிர்கால மற்றும் விருப்பத் தெரிவு ஒப்பந்தங்களின் தனிப்பட்ட

வாங்குபவர்கள் மற்றும் விற்பவர்கள் தரகர்களிடம் முன்பணம் செலுத்த வேண்டியிருக்கும்.

**வாடிக்கையாளர் வரம்பெல்லை** : எதிர்கால ஒப்பந்த தொழில்துறையில் எதிர்கால ஒப்பந்தங்களை வாங்குபவர்கள் மற்றும் விற்பனை செய்பவர்கள் இருதரப்பினரும் விருப்பு வெறுப்புகளை தெரிவித்து விதிமுறைகளை பூர்த்தி செய்ய வேண்டும். இது செயல்திறன் பத்திர வரம்பெல்லை என்றும் குறிப்பிடப்படுகிறது.

குறிப்பு

**தொடக்க வரம்பெல்லை:** வரம்பெல்லைக்கான அழைப்புகள் வழக்கமாக ஒரே நாளில் பெறவும் செலுத்தப்படவும் வேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறது. வரம்பெல்லை அழைப்பு மேற்கொள்ளப்படும் பொழுது தொடக்க வரம்பெல்லையின் மதிப்பில் எவ்வளவு குறைக்கப்படமுடியுமோ அந்த அளவே பராமரிப்பு வரம்பெல்லை என்று வரையறுக்கப்படுகிறது.

**பராமரிப்பு வரம்பெல்லை :** ஒரு வாடிக்கையாளர் தனது வரம்பெல்லை கணக்கில் பராமரிக்கவேண்டிய நிலுவையிலுள்ள எதிர்கால ஒப்பந்தம் ஒன்றிற்கான குறைந்தபட்ச வரம்பெல்லைகளின் தொகுப்பு.

**வரம்பெல்லை சமபங்கு விகிதம் :** இது இடர் முதலீட்டாளர்களால் பயன்படுத்தப்படுகிறது.

**செயல்திறன் பத்திர வரம்பெல்லை :** எதிர்கால அல்லது விருப்பதெரிவு ஒப்பந்தத்தில் வாங்குபவர் மற்றும் விற்பவர் ஆகிய இரு தரப்பினரும் விதிமுறைகள் மற்றும் ஒப்பந்தத்தின் செயல்திறனை உறுதிபடுத்துவதற்காக செலுத்தும் பணத்தின் அளவாகும்.

**வரம்பெல்லை மீட்சி** :(Return on Margin)பெரும்பாலும் செயல்திறனை முடிவு செய்ய பயன்படுகிறது. ஒரு வர்த்தகர் இரண்டு மாதங்களில் வரம்பெல்லையின் 10 சதவிகிதம் இலாபம் பெற்றால் அவரது வருடாந்திர லாப மதிப்பு 77 சதவவிகிதமாக இருக்கும்.

**எதிர்கால ஒப்பந்தத்தில் உள்ள வழிகள் :**

1. பொருளாக வழங்குதல்: விற்பனையாளர் ஒப்பந்தத்தில் குறிப்பிப்பட்ட சொத்தின் அளவை பரிவர்த்தனையகத்திற்கு வழங்குகிறார். பின்னர் அதை வாங்குபவர்களுக்கு வழங்குகிறது. பொருள்கள் மற்றும் பத்திரங்கள் தொடர்பான ஒப்பந்தங்களில் நடைமுறையில் பொருளாக வழங்கும் முறையே பொதுவான

முறையாகும். சிறதளவு ஒப்பந்தங்களுக்கு மட்டுமே இம்முறை பயன்படுத்தப்படுகின்றது.

2. ரொக்க கணக்கு தீர்த்தல் : ரொக்கம் செலுத்துதல் என்பது குறுகிய கால வட்டி விகிதம் போன்ற குறிப்பு வீதம் அல்லது ஒரு பங்கு சந்தை குறியீட்என் மதிப்பை அடிப்படையாக கொண்டு செயல்படுகிறது.
3. காலாவதி : காலாவதி என்பது ஒரு எதிர்கால ஒப்பந்தத்தின் ஒரு குறிப்பிட்ட வழங்கல் மாதம் வர்த்தகம் செய்யப்படுதலும், ஒப்பந்தத்தின் இறுதி கணக்கு தீர்த்தல் விலையும் நிறுத்தப்படும் தேதியும், நேரமும் ஆகும். இந்தக் குறுகிய நேரத்தில் (30 நிமிடம்) எனலாம். அந்த வர்த்தக மையங்கள் விரைவாக லாபம் காண முயற்சிக்கும்.



**விலையிடல் :** வழங்கத்தக்க சொத்துக்கள் அதிக அளவில் இருந்தால் ஓர் எதிர்கால ஒப்பந்தத்தின் விலையானது பாதுகாப்பு முதலீட்டு அளவுகளால் தீர்மானிக்கப்படுகிறது.

**எதிர்கால ஒப்பந்தங்களும், பரிவர்த்தனையகங்களும்:**

**ஒப்பந்தங்கள் :**

பல வகையான எதிர்கால ஒப்பந்தங்கள் உள்ளன. அவை (ஒற்றைப்பங்கு எதிர்கால ஒப்பந்தங்கள் போன்ற) கடனீடுகள், நாணயங்கள் அல்லது வட்டி வீதங்கள் மற்றும் குறியீடுகள் போன்ற உணர முடியா சொத்துக்கள் போன்ற பலவகையான வர்த்தகம் செய்ய தக்க சொத்துக்கள் இருப்பதை உணர்த்துகின்றன.

**எதிர்கால ஒப்பந்தங்களின் வாய்ப்புகள் :**

உள்ளிடுதல் என்பது எதிர்கால ஒப்பந்தத்தை விற்பதற்கான தெரிவாகும். அழைப்பு என்பது எதிர்கால ஒப்பந்தத்தை வாங்குவதற்கான தெரிவு ஆகும். இரண்டிற்குமே மாற்று குறிப்பு விலை என்பது குறிப்பிட்ட எதிர்கால விலையாகும். அதில் எதிர்கால ஒப்பந்தம் மாற்றம் செயல்படுத்தப்படும் எனில் வர்த்தகம் செய்யப்படும். ஒப்பந்த பரிமாற்றங்களும் Commodity Futures Trading Commission (CFTC) கட்டுப்படுத்தப்படுகிறது. இது ஓர் அமெரிக்க ஒன்றிய அரசின் தனித்தியங்கும் முகமையாகும். ஒரு தனி நபரோ அல்லது நிறுவனமோ விதிகளை மீறும்பொழுது அவர்களுக்கு அபதாரங்களையும் தண்டனைகளையும் விதிக்க இந்த கமிஷனுக்கு உரிமையுள்ளது. இந்த

கமிஷன் பரிமாற்றங்களையும் சட்டப்படி கட்டுப்படுத்துகிறது. இதனுடைய அறிக்கைகள் ஒவ்வொரு வெள்ளி அன்றும் வெளியிடப்படுகிறது.

## 9.9 உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

குறிப்பு

1. குறைகள் :
    1. விவசாயிகளிடையே அமைப்பில்லாமை:
    2. வலுக்கட்டாய விற்பனை:
    3. அதிக எண்ணிக்கையில் இடைத்தரகர்கள் உள்ளமை:
2. கூட்டுறவு அங்காடி முறை என்பது அங்கத்தினரது விவசாயப் பொருட்களைக் பொறுத்த வரையில் நிறைவேற்றப்படும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அங்காடிப் பணிகளை செய்வதற்காக ஒருங்கிணைக்கப்படும் அங்கமாகும். இது ஒரு வணிக நிறுவனமாகும். கூட்டுறவே இதன் கொள்கையாகும். இது விவசாய-அங்கத்தினனர்களது விவசாயப் பொருட்களை விற்றுக்கொடுக்கிறது. நுகர்வோர் கொடுக்கும் முழு விலையையும் இது உற்பத்தியாளருக்கு அளிக்கிறது.

# அலகு - 10 நிலசீர்திருத்தங்கள்



## 10.1 நோக்கங்கள்

குறிப்பு

1. நிலச் சீர்திருத்தங்கள் பற்றி தெளிவு பெற.
2. நிலசீர்திருத்த நடவடிக்கைகள் பற்றி அறிந்து கொள்ள.

## நிலசீர்திருத்தங்கள

## 10.2 பொருள்

நிலச்சீர்திருத்தம் என்பது நில உரிமையாளர்கள் குத்தகைதாரர்கள் நில மேலாண்மை ஆகியவற்றில் ஏற்படும் கொள்கைமாற்றம்.

**நோக்கங்கள்**

1. சம உடைமை சமுதாயத்தை அடைய வேளாண் அமைப்பை மாற்றி அமைத்தல்
2. சுரண்டல்களை தவிர்த்தல்
3. கூட்டுறவு விவசாயம்
4. உழவனுக்கே நிலம் சொந்தம் எனும் கொள்ளையை அமல்படுத்தல்
5. அடிப்படை நில அளவை விரிவுபடுத்தி கிராமப்புற விவசாயிகளின் சமூகபொருளாதாரத்தை உயர்த்தல்
6. வேளாண் உற்பத்தி உற்பத்தித்திறனை அதிகரித்தல்
7. நில அமைப்பை கிராமப்புற ஏழைகளுக்கு ஏதுவாக செய்தல்
8. உள்;ர் நிறுவன மேம்பாட்டை சமபடுத்தல்

**இந்தியாவின் நிலச்சீர்திருத்த முறைகள்**:

1. கூட்டுறவு பண்ணை மற்றும் நிலங்களை ஒருங்கினைத்தல் மூலம் தானாக முன்வந்து ஏற்றுகொள்ளல்
2. சட்டத்திருத்தங்களின் மூலம்
3. இடைத்தரகர் ஒழிப்பு குத்தகைத்தாரர் சீர்திருத்தம் நில உச்சவரம்பு சட்டங்களின் மூலம்
4. தமிழ்நாட்டின் நில உச்சவரம்பு – 15 ஏக்கர்

**நிலசீா்திருத்த நடவடிக்கைகள்:**

1. ஜமீன்ந்தாரின் முறை ஒழிப்பு
2. ரயத்துவாரி மகல்வாரி முறை ஒழிப்பு
3. நில உரிமைகள் வழங்குதல்
4. நிலஉச்சவரம்பு
5. பசுமைப்புரட்சி
6. இடைத்தரகா் ஒழிப்பு
7. குத்தகை சீா்திருத்தம்
8. நில உடைமையாளா் ஒருங்கினைத்தல்
9. கூட்டுறவு விவசாயம்

குறிப்பு

**நிலசீா்திருத்தம் தோல்வியடைய காரணங்கள்:**

1. நில உடைமை சமூகத்தில் ஒரு கௌரவ அந்தஸ்தாக கருதப்பட்டது
2. அரசியல் ரீதியான ஆா்வம் இல்லாதது
3. ஊழல், அரசியல் தலையீடு
4. நக்சல்கள் இயக்கம்
5. நிலசீா்திருத்தம் தோல்வியடைநத்தால் பசுமைப்புரட்சி நடைமுறைப்படுத்தப்பட்டது.
6. இந்தியாவில் நில சராசரி உடைமை குறைந்து வருகிறது.
7. மக்கள் தொகை பெருக்கம்

நிலச்சீா்த்திருத்தங்களின் மூலம் இன்றைய நில உடமை முறையிலிருக்கும் குறைகளைப் போக்கி, உழுபவா்களுக்கே நிலத்தைச்சொந்தமாக்கி, வேளாண்மை வளா்ச்சிக்கு வேண்டிய அடித்தளத்தை அமைத்துத்தர விரும்புகின்றோம்.

1. நிலக்குத்தகை சீா்திருத்தச் சட்டங்கள்: குத்தகைக்கு நிலத்தை பெற்றுச்சாகுபடி செய்கின்ற முறை நீண்டகாலமாக இருக்கின்றது. நிலம் சிலரின் உடைமையாக இருக்கின்றது. நிலமற்ற விவசாயிகள் எண்ணிக்கையில் பலராக உள்ளனா். ஆதலால் போட்டி போட்டுக்கொண்டு நிலத்தைக் குத்தகைக்குப் பெறுகின்றனா். இதனால் குத்தகையை நிா்ணயிப்பதில் நிலக்கிழாரின் கை ஓங்குகின்றது. மேலும் பெரும்பாலான வேளைகளில் நிலக்குத்தகைக்கு பதிவுசெய்யப் பெறுவதில்லை. நிலக்கிழாா் விருப்பம்போல் குத்தகை மாற்றப் பெறலாம். இதனால் குத்தகையாளருக்கு நிலவளத்தைப் பெருக்கவோ, முழு மூச்சாக

குறிப்பு

உற்பத்தியில் ஈடுபடவோ தூண்டுதல் கிடைப்பதில்லை. இத்தகைய குறைகளைப்போக்க ஆங்கிலேயர்களின் ஆட்சிக்காலத்திலேயே நடவடிக்கைகள் எடுக்கப்பெற்றன.

நாடு விடுதலை பெற்ற பிறகு தக்க வகையில் நிலக்குத்தகையை நெறிப்படுத்தக் காங்கிரசு அரசு முயன்றது. குத்தகையாளர்களுக்குப் பாதுகாப்பு கிடைக்கவும், நியாயமான வகையில் வாரத்தை நிர்ணயிக்கவும், பெரிய நிலக்கிழார்களின் நிலத்தைச் சாகுபடியாளர்களுக்குப் பிரித்துக் கொடுக்கவும் நடவடிக்கைகள் எடுக்கின்றனர். விவசாயக் கூலியாட்களுக்குக் குறைந்த அளவு ஊதியத்தை நிர்ணயித்தும் சட்டங்கள் இயற்றப்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக, தமிழகத்தில் ராஜாஜி கொண்டு வந்த தஞ்சாவூர் பண்ணையாட்கள் சட்டத்தையும், காமராஜர் நிறைவேற்றிய நியாயக்குத்தகை சட்டத்தையும் குறிப்பிடலாம். இவற்றின்படி விளைச்சலில் 60 பங்கு நிலத்தில் பாடுபட்டவர்களும் 40 பங்கு நில உடைமையாளர்களுக்கும் கிடைக்கும். இப்பொழுது தமிழக அரசு நிலமற்றவர்களுக்குப் புறம்போக்கு நிலத்தை வழங்க நடவடிக்கைகள் எடுக்கின்றது.

ஐந்தாண்டுத் திட்டங்களின் கீழ்நிலைக்குத்தகையை மேலும் நெறிப்படுத்த முயல்கின்றனர். நான்காம் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் கீழ்க்கண்ட நிலக்குத்தகை சீர்திருத்தங்களைக் கொண்டு வரப்போவதாகத் திட்டத்தின் அறிக்கை கூறியது. 1. குத்தகை நிலங்களைத் திரும்பப்பெற முடியாமல் நிலையாக குத்தகைக்கு விடச்செய்வுது. 2. விரும்பி குத்தகையாளர்கள் நிலத்தை திரும்பி கொடுக்கின்ற பொழுது நிலவுடைமையாளர்கள் அவற்றை பெறாத வகையில் அரசோ, உள்ளாட்சி மன்றங்களோ அவற்றை வேறுயாருக்காவது ஒதுக்கவேண்டும். 3. பண்ணைகளிலேயே வீடு கட்டிவாழும் குத்தகையாளர்களுக்கு முழுமையான பாதுகாப்பு வழங்க வேண்டும். 4. துணைக் குத்தகையாளர்களுக்கும் குத்தகைப் பாதுகாப்புச் சட்டங்கள் செயல்படுத்தப்படவேண்டும். 5. தவறான முறையில் குத்தகையாளர்களை வெளியேற்றுகின்றவர்களுக்குத் தண்டணை வழங்கப்பட வேண்டும்.

நில உச்சவரம்பை நிர்ணயித்தல் (Celling on landholding ) சிலரின் கையில் மிகுதியாக நிலமிருக்கின்றது நிலத்தில் உழைக்கின்ற பலர் நிலமற்ற விவசாய கூலிகளாக இருக்கின்றார்கள். இது ஒரு சமுதாய அநீதியாகக் கருதப்பெருகின்றது. ஒருவர் உச்சமாக எவ்வளவு நிலம்

வைத்துக்கொள்ளலாமென்பதை வரையறை செய்வதன் அவசியத்தைப் பல பொருளியலறிஞர்களும், அரசியல் தலைவர்களும் நெடுங்காலமாகவே வலியுறுத்தி வந்துள்ளனர்.

குறிப்பு

திட்டமிட்டு முன்னேறத் தீர்மானித்து ஐந்தாண்டுத் திட்டங்களை மேற்கொண்டோம். முதலாவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையில் நில உச்சவரம்பு நிர்ணயிப்பதன் மூலமாக வேளாண்மையைச் சீர்ப்படுத்தவேண்டுமென்பதைக் குறிப்பிட்ருந்தார்கள். ஆனால் முதல் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் எந்த மாநிலமும் நில உச்ச வரம்புச் சட்டத்தை நிறைவேற்றவில்லை. அத்தகைய சட்டம் கொண்டுவர அரசியல் நிர்ணயச் சட்டத்தில் சில தடைகள் இருக்குமென்று கருதினர். அவற்றை நீக்க 1958இல் அரசியல் நிர்ணயச் சட்ட (நான்காவது) திருத்த மசோதா நிறைவேற்றப்பெற்றது. இதனால் இரண்டாம் திட்டத்தின் இறுதிக்குள் 15 மாநிலங்கள் நில உச்ச வரம்புச் சட்டங்களை நிறைவேற்றின.

**காரணங்கள் :**

நில உடமைக்கு உச்சவரம்பு கட்டுவது இன்றியமையாத ஒன்றென்று கருதுகின்றவர்கள் கூறுகின்ற காரணங்களைத் தொகுத்துக் கூறலாம்.

1. சமுதாய நிதியை நிலைநாட்ட நில உச்சவரம்பு தேவை. உழைக்காதவர்களிடம் மிகுதியாக நிலமும், உழைப்பவர்கள் நிலமற்றவர்களாகவும் இருக்கின்ற கிராம சமுதாயத்தில் பெரும் நிலக்கிழார்கள் செல்வாக்குப் பெற்றவர்களாக, கிராம சமுதாயத்தை ஆட்டிப்படைப்பவர்களாக இருக்கின்றனர். எல்லோரும் சமமென்பதை உறுதியாக்க நிலவுடமையிலுள்ள ஏற்றதாழ்வைக் குறைப்பது தேவையாகும்.
2. விவசாயிகளின் நிலப்பசியைத் தீர்க்க வேண்டும். எல்லோரும் கொஞ்சமாது நிலம் வைத்துக் கொள்ள விரும்புகின்றனர். சிலரிடம் மிகுதியாக நிலமிருப்பதைக் காணும் நிலமற்ற விவசாயிகளின் மனதில் நிலப்பசி காட்டுத்தீயாக வளர்கின்றது. இந்தப் பசி, வெறியாக மாறி,'உழுபவனுக்கே நிலம் சொந்தம்' என்று கிளர்ச்சியாக வெடிப்பதற்கு முன்னால், நில உச்சவரம்புக்கு மேலிருக்கும் நிலத்தைப் பிரித்துக் கொடுப்பதே அறிவுடைமை என்று கருதப்பெறுகின்றது.

குறிப்பு

3. வருவாய் ஏற்றத்தாழ்வைக் குறைக்க வேண்டுமானால் நில உநச்சவரம்பைக் கொண்டு வரவேண்டும். கிராமங்களில் கிடைக்கின்ற முதன்மையான வருவாய் நிலத்திலிருந்தே வருகின்றது. ஆதலால் நிலத்தின் ஏற்றத்தாழ்வு இருக்கும் வரை, கிராம சமுதாயத்தின் வருவாயிலும் மிகுந்த ஏற்றத்தாழ்வு இருக்கும்.
4. உற்பத்தியைப் பெருக்க இது ஏற்ற வழி வகுக்கும். பெரிய பண்ணைகளை அமைத்து, வேளாண்மை எந்திரமயமாக்க நம்மிடம் தக்க அளவில் முதல் இல்லை. ஆதலால் செறிவுமுறைச் சாகுபடியின் (Intensive Farming) மூலமாகத் தான் உற்பத்தியைப்பெருக்க முடியும். இதற்குச் சிறிய பண்ணைகளே தேவை. நில உச்சவரம்புச் சட்டம் சிறிய பண்ணைகளைத் தோற்றுவிக்க உதவும்.
5. நிலத்தைப் பயன்படுத்துவதில் சரியான மாற்றங்களைச் செய்ய நில உச்சவரம்பு வழி வகுக்கும். கூட்டுறவு பண்ணைகள் அமைக்க நில உச்சவரம்புச் சட்டம் துணை செய்யும் எஞ்சிய நிலத்தைக் கூட்டாகச் சாகுபடி செய்யும்படி தூண்டலாம்.

## 10.3. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. நிலச்சீர்திருத்தம்என்றால் என்ன?
**2.**நிலச்சீர்திருத்ததின் நோக்கங்கள் யாவை?

**நிலச் சீர்த்திருத்தங்கள் மதிப்பீடு :**

1. சட்டங்களைச் செயல்படுத்துவதற்கும் மேற்பார்வை செய்வதற்கும் இருக்கின்ற நிர்வாக அமைப்புமுறை போதுமானதாக இல்லை.
2. குத்தகைப் பதிவேறுகள் பல மாநிலங்களில் இல்லை. இருக்கின்ற மாநிலங்களில் அவை சரிவர, இன்று வரை எழுதப்பட்டிருக்கவில்லை.
3. குத்தகைக்குப் பயிரிடுவோரின் பொருளாதார நிலை மோசமாகவே இருக்கின்றது.
4. பல மாநிலங்களில் நிலக்குத்தகைத்தாரர்களுக்கு சட்டத்தின் மூலம் அளித்திருக்கின்ற பாதுகாப்பு தற்காலிகமானதாகவே இருக்கின்றது.
5. பல இடங்களில் குத்தகைத்தாரர்கள் தாங்களே விரும்பி சாகுபடி செய்த நிலத்தை விட்டுச் செல்வதைப் போன்ற வெளித்தோற்றத்தோடு, கட்டாயத்தின் பேரில் வெளியேற்றப்புடுகின்றனர்.

6. நிலக்கிழார்கள் குத்தகை நிலத்தைத் திரும்பப் பெறலாம் என்றிருக்கும் உரிமையைப்பயன்படுத்தி, நிலக்கிழார்கள் குத்தகைத்தாரர்களை வெளியேற்ற முடிகின்றது.
7. பல மாநிலங்களில் வாரத்தை இன்னும் பகுதியாகக் குறைக்க வேண்டியுள்ளது.
8. குத்தகைதாரர்களின் உரிமைகளைக் காப்பாற்ற வேண்டுமானால் அரசு தலையீட்டு, குத்தகைப் பணத்தைப் பெற்று நிலக்கிழார்களுக்கு கொடுக்கும்.
9. நில உச்சவரம்புச் சட்டங்கள் நிறைவேற்றப் பெற்ற போதிலும், பொய்மையான (Benami) நிலக் கைமாறுதல்களினால் அவற்றைச் சரியாகச் செயல்படுத்த இயலவில்லை.

குறிப்பு

திட்டக்குழு நிலச்சீர்திருத்தங்கள் செயல்பட முறையை ஆராய்ந்து சில குறைகளைச் சுட்டிக்காட்டியுள்ளத. சுமார் 82 சதவீதம் குத்தகைதாரர்களின் குத்தகைகள் தெளிவாகத் தீர்மானிக்கப் பெறவில்லை. சொந்தச் சாகுபடிக்கு 'நிலக்கிழார்கள் நிலத்தை குத்தகைதாரர்களிடமிருந்து திரும்பப்பெறலாமென்று சட்டமிருக்கின்றது. ஆனால் சொந்த சாகுபடியை தெளிவாக வரையறுக்கவில்லை. நிலக்குத்தகைதாரர்களை தாங்களே விரும்பிவிட்டுச் செல்கின்றார்கள்' என்ற பெயரால் தொடர்ந்து வெளியேற்றிக் கொண்டிருக்கின்றனர். நில வெளியேற்ற வழக்குகளில் தீர்ப்பளிப்பதில் காலதாமதமாவது இத்தகைய செயல்களுக்கு ஊக்கமளிக்ககின்றது.

**காரணங்கள்** : திட்டக்குழுவின் பணிசெய் வழிகாட்டும் பிரிவு (Task Force of the Planning Commission) நிலச்சீர் திருத்தங்களைச் சரியாகச் செயல்படுத்தாததற்குக் கீழ்க்கண்ட காரணங்களை கூறுகின்றது 1. உறுதியான விருப்பத்தோடு அரசியல்வாதிகள் செயல்படவில்லை. கூறுகின்ற கொள்கைக்கும் செயல்பாட்டுக்கும் இடையில் பெரிய இடைவெளி இருக்கின்றது. 2. கீழ்மட்டத்திலிருந்து விவசாயிகள் நிலம் கேட்டு போராட்டம் நடத்தியோ, வேறு வகையிலோ நெருக்கடியை ஏற்படுத்தும் நிலை இல்லை. 3. அரசு எந்திரத்தின் மனப்பான்மையும் மெதுவாக செயல்படும் போக்கும் மாற்றங்களுக்குத் தடையாகின்றன. 4. நீதிமன்றங்களின் உதவியோடு பல சீர் திருத்தச் சட்டங்கள் செயல்படுவதை ஒத்தி போடச் செய்து விடுகிறது.

**நிலச்சீர்த்திருத்தங்களை முறையாக செயல்படுத்துவதற்குத் தேவையான சில ஆலோசனைகள்:**

குறிப்பு

1. நிலச் உச்சவரம்புச் சட்டத்தை மிகத் தீவிரமாக செயல்படுத்த வேண்டும்.
2. எச்சமாக இருக்கக்கூடிய உபரிநிலத்தை நிலமற்ற விவசாயிகளுக்கு பகிர்ந்தளிக்க வேண்டும். தற்போது நமது பாரதபிரதமர் திரு. ராஜீவ்காந்தி அவர்கள் கொண்டு வந்துள்ள இருபது அம்சத் திட்டத்தில் உபரி நிலத்தை நிலமற்ற விவசாயிகளுக்கு பகிர்ந்தளித்தல் என்ற திட்டம் இதற்கு உறுதுணையாக இருக்கும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.
3. நிலச்சீர்த்திருத்தம் நமது நாட்டில் வெற்றிபெற வேண்டுமெனில் அரசியல் தலையீட்டை முற்றிலும் தடுக்க வேண்டும்.

"உழுபவர்களுக்கு நிலம் சொந்தம்" என்னும் நடைமுறைக்கு வராமல் நில உடைமை முறையிலிழருக்கும் குறைகளைப் போக்கள முடியாது" நில உடைமை முறைசிக்கலைத் தீர்க்காமல் வேளாண்மையில் புரட்சியை ஏற்படுத்த முடியாது அப்பொழுது காகிதத்தில் இருக்கின்ற சட்டங்களை உண்மையாக உறுதியாக, நம்பிக்கையோடு செயல்படுத்தினால் நமது நாட்டில் ஒரு பெரிய மாற்றம் ஏற்படுமென்று கூறலாம்.

1950 களிலே இந்திய மக்கள் தொகை 36 கோடி அப்போதைய மொத்த உணவு உற்பத்தி 51 மில்லியன் டன்கள் முதலாவது ஐந்தாண்டு திட்டம் 1950 ஆம் ஆண்டு தீட்டபட்டது விவசாயத்திற்கும் வேளாண் பாசனத்திற்கும் மொத்த உள் நாட்டு உற்பத்தியில் அதிக முக்கியத்துவம் அளிக்கபட்டது 10 சதவீதத்திற்கு மேல் விவசாயத்திற்கு ஒதுக்கபட்டது மிக பெரிய அணைகட்டுகளான பக்ராநங்கல் மற்றும் நாகார்ஜுனாசாகர் போன்றவை இதனால் மக்களின் நம்பிக்கையோடு உணவு உற்பத்தியும் உயர்ந்தது. நீர் தேக்கங்களும் அணைகட்டுகளும் தான் நவீன இந்தியாவின் கோவில் என்று அப்போதைய பாரத பிரதமர் நேரு அவர்கள் முழங்கினார். அதனால் பல லட்சம் விவசாய நிலங்களின் தாகம் தணிந்ததோடு அல்லாமல் வீடுகளுக்கும் மின்சார உற்பத்தியும் செய்யப்பட்டது.

**நம்பிக்கை தந்த 1950கள்**

1950 களிலே மக்கள் தொகை 36 கோடி அப்போதைய மொத்த உணவு உற்பத்தி 51 மில்லியன் டன்கள் முதலாவது ஐந்தாண்டு திட்டம்

1950 ஆம் ஆண்டு தீட்டப்பட்டது மொத்த விவசாயத்திற்கும் வேளாண் பாசனத்திற்கும் அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டது உள் நாட்டு உற்பத்தியில் 10 சதவிதத்திற்கு மேல் விவசாயத்திற்கு ஒதுக்கபட்டது மிக பெரிய அணைகட்டுகளான பக்ராநங்கல் மற்றும் நாகார்ஜூனாசாகர் போன்றவை கட்டப்பட்டன இதனால் மக்களின் நம்பிக்கையோடு உணவு உற்பத்தியும் வளர்ந்தது

**நிலையற்ற 1960கள்**

குறிப்பு

1962 ஆம் ஆண்டு சீனாவுடன் யுத்தம் ஏற்பட்டது மிகபெரிய பொருள் இழப்பு ஏற்பட்டது இதனால் நம் நாட்டில் ஒரு அசாதரணமான சூழல் ஏற்பட்டது இதை தொடர்ந்து 1965-66-ல் மிக மோசமான வறட்சி ஏற்பட்டு மிக கொடிய பஞ்சம் தலை விரித்தாடியது இந்த கால கட்டத்திலேயே அரசாங்கமே மக்களை ஒரு நாளுக்கு ஒரு வேளை உண்ணாமல் இருக்க சொன்னது அப்போதயை பாரத பிரதமர் லால் பகதூர் சாஸ்திரி அதற்கு முன்னுதாரனமான கூட இருந்தார். ஆனால் நிஜத்தில் மக்கள் நல்ல உணவு வாரத்திற்கு ஒரு முறை தான் உண்டநிலை இருந்தது பல்லாயிரம் பேர் உணவின்றி பசி கொடுமையால் மாண்டனர் பிறகு 1965-ல் பாக்கிஸ்தானுடன் யுத்தம் ஏற்பட்டு வட இந்தியாவில் பதற்றம் நிலவியது. இது போன்ற அடுக்கடுக்கான இன்னல்களினால் இந்தியா 1966-67 இல் 6.4 மில்லியன் டண் கோதுமையை அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்தது இந்த நேரத்திலேயே அமெரிக்க பத்திரிக்கைகள் இந்தியாவை பிச்சைகார நாடாக கேலி சித்திரம் வரைந்து உலக அரங்கிலேயே இந்தியாவையும் அதன் இறையான்மையையும் அசிங்கப்படுத்தியது.

பிறகு 1960களின் நடுவிலேயே மெக்சிகோ நாட்டை சார்ந்தவரும் உலகில் ஈடு இணையற்ற பயிர் பெருக்கவியல் விஞ்சானியுமான டாக்டர் நார்மன் போர்லாக் என்பவரின் உதவியோடு இந்தியாவிற்கு குறைந்த வயதுடைய குட்டை ரக கொதுமை அறிமுகம் செய்யப்பட்டது. இது அதிக மகசூல் தரவல்லதாகவும் நோய், பூச்சி மற்றும் வறட்சியை தாங்கி வளர கூடியதாகவும் இருந்ததால் உணவு தானிய உற்பத்தியில் மிக பெரிய புரட்சியே ஏற்பட்டது இதுதான் பசுமை புரட்சியின் ஆரம்ப காலம் எனலாம்.

**பசுமை புரட்சியின் பரிணாம வளர்ச்சி:**

இடைக்கால 1960 களில் இந்திய வேளாண் ஆராய்ச்சி கழகத்தின் வீரிய ஒட்டு கோதுமை சாகுபடி தொழில் நுட்பம் என்ற திட்டம்

செயல்படுத்தபட்டு அனைத்து கோதுமை வளரும் மகாணங்களிலும் செம்மையாக செயல்படுத்தபட்டது.

குறிப்பு

1971-ல் கோதுமை உற்பத்தி 11 மில்லியன் டன் என்ற அளவிலிருந்து 26 மில்லியன் டன் என்ற அளவிற்கு உயர்ந்தது இந்திய மக்களுக்கு பசியின் மீதிருந்த பயம் மறைய தொடங்கி இருந்த இந்த தருணத்தில் தான் வங்காள தேசம் உருவா காலம் அதுனது அதனால் வேளாண் இதனால் உற்பத்திக்கு அரசால் அதிக பணம் ஒதுக்கி செலவிடமுடியாத நிலை ஏற்பட்டது மக்களுக்கு எல்லை புரத்தை பற்றிய கவலையோடு உணவுத்தேவை பற்றிய இந்தி கவலையும் சேர்ந்தே இருந்தது என்று சொல்லலாம்.

**அணைக்கட்டு பாசன வாய்க்கால் நீர் மேலாண்மை அறிமுகம் :**

பெரிய அணைகளில் நீரை தேக்கி வைத்து அதிலிருந்து பாசன வாய்க்கால்களை வெட்டி சுழற்சி முறையில் நீரை பிரித்து கொடுக்கும் முறையானது 1970களில் அறிமுகப்படுத்தபட்ட இந்திய விவசாய பாசன முறையிலேயே ஒரு மாபெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது மேலும் நிலத்தடி நீரை பயன்படுத்தும் முறயையும் அறிமுகபடுத்தப்பட்டு பல லட்சம் புதிய பயிர் செய்யாத நிலங்களை விவசாயம் செய்ய வைத்த கால கட்டம் அது.

**அகில இந்திய நெல் மகசூல்**

1980 களில் நெல் உற்பத்தியில் ஒரு ஹெக்டேரின் சராசரி உற்பத்தி வெகுவாக பெருகியது அதாவது 1950களில் ஒரு ஹெக்டேருக்கு 750 கிலோ நெல் என்ற அளவிலிருந்து 1980-க்களில் 1.25 டன்னாக உயர்ந்து தற்போது 2 டன்னுக்கும் மேல் மேம்படுத்தப்பட்டுள்ளது.

## 10.4 உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

1. நிலச்சீர்திருத்தம் என்பது நில உரிமையாளர்கள் குத்தகைதாரர்கள் நில மேலாண்மை ஆகியவற்றில் ஏற்படும் கொள்கைமாற்றம்.

**2** .நிலச்சீர்திருத்ததின் நோக்கங்கள்

- சம உடைமை சமுதாயத்தை அடைய வேளாண் அமைப்பை மாற்றி அமைத்தல்
- சுரண்டல்களை தவிர்த்தல்
- கூட்டுறவு விவசாயம்

- உழவனுக்கே நிலம் சொந்தம் எனும் கொள்ளையை அமல்படுத்தல்
- அடிப்படை நில அளவை விரிவுபடுத்தி கிராமப்புற விவசாயிகளின் சமூகபொருளாதாரத்தை உயர்த்தல்
- வேளாண் உற்பத்தி உற்பத்தித்திறனை அதிகரித்தல்
- நில அமைப்பை கிராமப்புற ஏழைகளுக்கு ஏதுவாக செய்தல் உள்ளு;ர் நிறுவன மேம்பாட்டை சமபடுத்தல்

குறிப்பு

# அலகு – 11 விவசாய கடன்



குறிப்பு

## 11.1 நோக்கங்கள்

1. விவசாய கடன், வேளாண் மற்றும் கிராமப்புற மேம்பாட்டிற்கான தேசிய வங்கி பற்றி தெளிவு பெற.
2. கூட்டுறவு கடன், கிராமப்புற கடன்பட்ட நிலை பற்றி தெளிவு பெற.

## 11.2. பொருள் - விவசாய கடன்

பொருளாதார வளர்ச்சிக்காக நிதியை திரட்டுவது. இந்த வங்கி, பொதுவாக அங்கத்தினர் நாடுகளுக்கு அன்னியச் செலாவணியை அளிக்கிறது.

இந்தியாவின் முதுகெழும்பு விவசாயத்தில் தான் இருக்கிறது என்பர். பல்வேறு வகையான தொழில்களுக்கு தேவைப்படுவது போலவே வேளாண்மை தொழிலுக்கும் மூலதனம் மிகவும் இன்றியமையாததாக இருக்கிறது. விவசாயிகள் தங்கள் கடன் தேவைகளை பல வழிகளில் பூர்த்தி செய்து வருகின்றனர். முன்முதலாக விவசாயிகளுக்கு வங்கி கடன் என்பது கிராம தொடக்க கூட்டுறவு வங்கிகள் மூலம் தான் சாகுபடி செலவுகளுக்கு பணமும் இரு பொருட்கள் உரம் பூச்சி மருந்து முதலியவை வழங்கப்பட்டது. நீண்ட கால கடன் கூட்டுறவு நிலவள வங்கிகள் மூலம் வழங்கப்பட்டது. விவசாயிகள் தனியாரிடமும், கமிஷன் மண்டி, கந்து வட்டிக்காரர்களிடமும், உரக்கடைக்காரர்களிமும் கடன் பெற்று சாகுபடி செய்வதுண்டு.

ஆனால் வங்கிகள் அரசுடமை ஆக்கப்பட்ட பின்பு கிராமங்கள் பலவற்றில் வங்கி கிளைகள் திறக்கப்பட்டன அங்கு கிராம மேம்பாட்டிற்கும், குறிப்பாக வேளாண்மைக்கும் கடன்கள் வழங்கப்படுகின்றன. வங்கிகளில் தனியார் வங்கிகள் கிராம தொடக்க கூட்டுறவு வங்கிகள், சுட்டுறவு நிலவள வங்கிகள், கிராமிய வளர்ச்சி வங்கிகள், பொதுத்துறை வங்கிகள், வெளிநாட்டு வர்த்தக வங்கிகள்,

வங்கிசாரா நிதி நிறுவனங்கள் என்று பல வகைகள் உள்ளன மத்திய அரிசின் ரிசர்வ் வங்கியின் ஆணைப்படி வங்கிகள் கொடுக்கும் மொத்த கடன் அளவில் கட்டாயமாக 18 சதவீதம் வேளாண்மை அபிவிருத்திக்கும், 40 சதவீதம் முனன்னுரிமை கடனாகவும் வழங்கப்பட வேண்டும். இந்த இலக்கை ஒவ்வொரு ஆண்டும் ரிசர்வ் வங்கி ஆய்வு செய்து கண்காணித்து வருகிறது.

வங்கி கடன்களால் உள்ள நன்மை என்னவென்றால், குறைந்த வட்டி, எளிய தவணை, உடனடி சேவை என்பது தான் கடன்களில், பலவகைகள் உண்டு. இதில் குறுகிய கால கடனில் பயிர் சாகுபடி கடன்கள், உழவர் கடன் அட்டை திட்டம், விவசாய நகைகடன்கள் மகசூல் விற்பனைகடன் என்று பிரிவுகள் இருக்கின்றன. குறுகிய கால பயிர்களான நெல், கரும்பு, வாழை, சோளம், ராகி, உளுந்து, பயிறு, மிளகாய், எள், சூரியகாந்தி, பருத்தி, மஞ்சள், சோயா, வெங்காயம், புகையிலை, காய்கறிகள், வெற்றிலை மற்றும் இதர பயிர்களுக்கு பருவம் மற்றும் பட்டம் வாரியாக பயிர்க்கடன்கள் வழங்கப்படுகிறது. தென்னை, மா, போன்ற தோப்புகள் பராமரிக்கவும் பயிர்க்கடன்கள் வழங்கப்படுகிறது. பட்டத் தவறினால் நட்டம். எனவே விவசாயிகள் வாழ்வில் பயிர்க்கடன் முக்கியத்துவம் வாய்ந்தது.

இதனை உணர்ந்து விதை, உரம், பூச்சி மருந்து, களைக்கொல்லி, நுண்ணூட்ட சத்து போன்ற இடுபொருட்கள் வாங்கவும், நீர் மேலாண்மை, உழவு, களை எடுத்தல், எலி ஒழிப்பு, பூச்சி, பூஞ்சாண மருந்து தெளித்தல், அறுவடை போன்ற வேலைகளுக்கு கூலி கொடுக்கவும் தேவைப்படும் தொகையை கடனாக வழங்கப்படுகிறது.

**பயிர்க்கடன் பெற தகுதி**

சொந்த நிலம் அல்லது குத்தகை நிலம் உள்ளவர்கள் பயிர்க்கடன் பெற தகுதியானவர்கள். நில உரிமையாளர்களிடம் செய்து கொண்டுள்ள குத்தகை ஒப்பந்தத்தை காட்டி கடன் பெறலாம். பயிர்க்கடன் விண்ணப்பம் செய்பவர்கள் வேறு எந்த நிறுவனத்திடமும் இதே தேவைகளுக்காக கடன் வாங்கியிக்க கூடாது. மேலும் அப்படி கடன் வாங்கி கட்டாமலும், தவணை தவறிய நிலுவையில் உள்ளவராகவும் இருக்க கூடாது.

**கடன் பெறும் முறை**

பயிர்க்கடன் விண்ணப்ப படிவம் வங்கியிலேயே கிடைக்கும். நில சம்பந்தமான முழு விவரங்கள் அடங்கிய சிட்டா, அடங்கள், கிஸ்து, ரசீது

குறிப்பு

கிராம நிர்வாக அலுவலரின் சான்றிதழ் மற்றும் பாஸ்போர்ட் சைஸ் புகைப்படம் முதலியவற்றை வங்கியில் கொடுக்க வேண்டும். மேலும் வங்கியிலும் இதர வணிக வங்கிகளிலும் கடன் நிலுவையில் இல்லை என்பதற்கான சான்றிதழ் தேவைப்படும். ஒப்பந்த கரும்பு சாகுபடி செய்பவர்கள் சர்க்கரை ஆலையில் பதிவு செய்திருக்க வேண்டும். மேலும் கடன் பெறும் வங்கியில் சேமிப்பு கணக்கு வைத்திருக்க வேண்டும் அல்லது புதிதாக கணக்கு தொடங்க வேண்டும். ஒவ்வொரு பயிருக்கும் ஆண்டு தோறும் நிர்ணயிக்கப்பட்டுள்ள கடன் அளவு ஏக்கருக்கு எவ்வளவு என்பது மாவட்ட தொழில் நுட்ப குழுவின் பரிந்துரையின் பேரில் தீர்மானிக்கப்படுகிறது. இதில் பாதி பொருளாகவும், பாதியை பணமாகவும் பெறலாம். எத்தனை ஏக்கர், என்ன பயிர் என்பதை கொண்டு கடன் அளவு நிர்ணயிக்கப்படும்.

மத்திய ரிசர்வ் வங்கியின் ஆணைப்படி 50 ஆயிரம் வரையிலான விவசாய கடன்களுக்கு விளிம்பு தொகை கிடையாது. கடன் தொகை 50 ஆயிரத்திற்கு மேல் அதிகமானால் 15 முதல் 25 விழுக்காடுகள் வரை விளிம்பு தொகையாக நிர்ணயிக்கப்படும்.

தற்போதுள்ள நிலவரப்படி, 3 லட்சம் வரை 7 சதவீத வட்டி விதிக்கப்படுகிறது. இதற்கு மேல் உள்ள கடனுக்கு மாறுதலுக்கு உள்ளாகும். மத்திய அரசு, மத்திய ரிசர்வ் வங்கி அறிவிப்புக்கு ஏற்ப இது மாறுபடும். குறுகிய கால கடன் 3 லட்சம் வரை பெற்ற அறுவடை காலம் 6 மாதம் முடிந்தும் கடன் தொகையை கட்டாவிட்டால் 50 ஆயிரம் வரை 10 சதவீதமும், 50 ஆயிரத்துக்கு மேல் 3 லட்சம் வரை 11 சதவீதமும் வட்டி வசூலிக்கப்படும். 3 லட்சத்திற்கு மேல் 5 லட்சம் வரை 11.75 சதவீதம் வசூலிக்கப்படும்.

எந்த பயிர் சாகுப்படிக்காக கடன் வழங்கப்படுகிறதோ அதன் அறுவடைக்காலம் முடிந்து இரண்டு மாதத்திற்குள் வட்டியும், அசலும் சேர்த்து கட்டி முடிக்க வேண்டும். அறுவடை மகசூலை விற்று பணமாக்குவதற்காக இரண்டு மாத கால அவகாசம் தரப்படுகிறது.

பயிர்க்கடன் இரண்டு பருவம், இரண்டு அறுவடைக்கு பின் என்ற ரீதியில் திருப்பி செலுத்த வேண்டும்.

கரும்பு ஆலையில் ஒப்பந்த சாகுபடிதாரர்கள், கரும்பு அறுவடைக்கு பின் ஆலையில் இருந்து வங்கிகளுக்கு நேரிடையாக சம்மந்தப்பட்ட விவசாயிகளின் கணக்கிற்கு பணம் வந்து விடும். கடன்

தொகை வட்டி போக, மீதமுள்ள தொகை விவசாயிகளின் சேமிப்பு கணக்கில் வரவு வைக்கப்படும் கடன் பெறுவதன் மூலம் குறைந்த வட்டி, எளிய தவணை உன்னத சேவை என்ற நிலையை விவசாயிகள் பெற முடியும்.



**அங்கத்தினர் மூலதனம் மற்றும் அமைப்பு**

எல்லா ஆசிய நாடுகளும் இதில் அங்கத்தினர் ஆகலாம். ஆனால் அதிக நிதியைத் திரட்ட வேண்டி, மற்ற மண்டலங்ளிலுள்ள வளர்ச்சி பெற்ற நாடுகளும் இதில் அங்கத்தினராக சேர்க்கப்பட்டுள்ளனர். ஆசிய வளர்ச்சி வங்கியில் மொத்தம் 56 உறுப்பினர் உள்ளனர். இதில் 40 அங்கத்தினர் இந்த மண்டலத்திற்கு வெளியில் உள்ளவர்கள் ஆவர்.

ஆசிய வங்கியின் துவக்க முதல் ரூ.1000 மில்லியன். இதில் இந்த மண்டலத்திற்குள்ளே உள்ள நாடுகள் 60 சதவிகிதமும், வெளிஅங்கத்தினர் 40 சதவிகிதமும் அளிக்கின்றனர். 1977ல் இந்த வங்கியின் முதல் ரூ. 8711 மில்லியன் 1995ல் இந்த வங்கியின் அங்கீகரிக்கப்பட்ட முதல் 51893 மில்லியன். இதில் 43,078 மில்லியன் செலுத்தப்பட்ட முதலாகும். அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மெனி, கனடா மற்றும் ஜப்பான் இதில் வெளி அங்கத்தினர்களாக உள்ளனர். 20 சதவிகித வாக்குரிமை அங்கத்தினரிடையே சமமாக பரித்தளிக்கப்படுகிறது. பாக்கி 80 சதவிகதம் ஒவ்வொரு அங்கத்தினர் நாடுகளால் செலுத்தப்பட்ட பங்கு முதலின் அடிப்படையில் ஒதுக்கப்படுகிறது.

ஆசிய வங்கியை நிர்வகிக்க ஒரு இயக்குநர் குழு உள்ளது. இக்குழு ஆண்டுக்கு ஒரு முறை கூடுகிறது. இவ்வங்கியின் அன்றாட நடவடிக்கைகளை நடத்த பத்து அங்கத்தினர் குழு அமைக்கப்பட்டுள்ளது. 1974 ஏப்ரலில் ஆசிய வளர்ச்சி நிதி (AsianDevelopment Fund) ஏற்படுத்தப்பட்டது. 10 அங்கத்தினர் நாடுகள் 1974ல் 245.4 மில்லியன் செலுத்தினர்.

**வங்கியின் கடனளிக்கும் நடவடிக்கைகள்:-**

ஆசிய வளர்ச்சி வங்கியின் கடனளிக்கும் நடவடிக்கைகளை இரண்டாகப் பிரிப்பர். 1) சாதாரண நடவடிக்கைகள் 2) சிறப்பு நடவடிக்கைகள். சாதாரண நடவடிக்கைளில் குறிப்பிட்ட வளர்ச்சித் திட்டத்திற்கு தேவைப்படும் அந்நியச் செலாவணி அளிக்கப்படும். மேலும் கடன் பெறும் நாட்டுச் செலாவணியம் அளிக்கப்படும். அங்கத்தினர் நாடுகளது மைய வங்கிகளுக்கும் இது கடனளிக்கிறது. இந்த வங்கியின் சிறப்பு நடவடிக்கைளில் தொழில் நுணுக்க, உதவி சிறப்பு நிதி, விவசாய சிறப்பு நிதி, பலமுனை சிறப்பு நிதி முதலியவற்றிலிருந்து கடனளிப்பது

குறிப்பிடப்படுகிறது. சிறப்பு நிதியின் கீழ் கடனளிப்பது எளிய வட்டியிலும் நீண்ட காலத்திற்குமாக அமைகிறது.



இவை தவிர அங்கத்தினர் நாடுகளுக்கு இது தொழில்நுட்ப உதவி அளிக்கிறது. வளர்ச்சித் திட்டங்களை தயாரிக்கவும், அவற்றிற்கு நிதியுதவி அளிக்கவும், அவற்றை நிறைவேற்றவும் தொழில்நுட்ப உதவி அளிக்கப்படுகிறது. அங்கத்தினர் நாடுகள் நாட்டு அளவிலோ மண்டல அளிவிலோ விவசாய தொழில், போக்குவரத்து போன்றவற்றில் புதிய நிறுவனங்களைத் தோற்றுவித்தலில் இவ்வங்கியின் உதவி கிடைக்கிறது. 1990ல் வளரும் நாடுகளில் மரம் வளர்ப்பதன் மூலம் தட்பவெட்ப நிலையைப் பராமரிக்க கடன் அளிக்க இவ்வங்கி முன் வந்தது. இந்நாடுகளுக்கு விவசாயத்திற்கு கடனளிக்கும்போது நான்கில் ஒரு பகுதி காடுகள், சுற்றுச்சூழல், நீர்வள மேலாண்மைக்கு ஒதுக்கப்பட வேண்டும் என இவ்வங்கி குறிப்பிட்டது.

குறிப்பு

நிதித்துறையை வளர்க்க நினைக்கிறது. மேலும் அந்நிய நாட்டுக் கம்பெனிகளை இந்தியக் கம்பெனிகளோடு ஒருங்கிணைக்க எதிர்கால கொள்கைகளுக்கு உதவி யுனுடீ ஆராய்ச்சியையும் அளவீடுகளையும் மேற்கொள்கிறது. பொருளாதார கமிஷனின் கீழ் செயல்பட்டு வரும் ஆசிய மற்றும் தூரகிழக்கு நாடுகளின் பொருளாதார வளர்ச்சி பற்றிய வெற்றி, தோல்வி பற்றி ஒவ்வொரு ஆண்டும் அறிக்கை தயாரிக்கிறது.

**ADB பற்றிய மதிப்பீடு:-**

யுனுடீ பற்றி பல்வேறு கண்டனங்கள் சொல்லப்படுகிறன.

1) மற்ற நிதி நிறுவனங்களை விட யுனுடீ அதிக வட்டி விதிக்கிறது என சொல்லப்படுகிறது.
2) ADBபொதுவாக குறிப்பிட்ட திட்டங்கட்கே கடனளிக்கிறது. அதனால் வளர்ச்சிக் குறைவான நாடுகளின் வளர்ச்சியைப் பெருக்குவது என்ற அதன் நோக்கம் நிறைவேறவில்லை.
3) ADB தனியார்துறை நிறுவனங்களின் திட்டங்கட்கே உதவுகிறது. பொதுத்துறை வளர்ச்சித் திட்டங்கட்கு குறைவான கவனமே செலுத்தப்படுகிறது.
4) அமெரிக்கா மற்றும் அதன் நட்பு நாடுகளுக்கே அதிக உதவி செய்கிறது. மற்ற நாடுகள் அதிக உதவி பெற முடியவில்லை.

எனினும் யுனுடீ ன் உதவி இம்மண்டல வளர்ச்சிக்க உதவியாய் உள்ளது.

இந்தியா ADB துவக்கிய நாடுகளுள் ஒன்று. 1986லிருந்து ADBவுடைய உதவியை இந்தியா பெற்று வருகிறது. மின்சக்தி, சாலைகள், துறைமுகங்கள், நகர சுற்றுச்சூழல் வளர்ச்சி, தேக ஆரோக்கியம், சத்துணவு, வீட்டுக்கடன் முதலியவற்றுக்கு யுனுடீ இந்தியாவுக்கு உதவி வருகிறது.

விவசாய கடன்

## உலகமயமாக்குதல் (Globalization)

உலகப் பொருளாதாரத்தோடு ஒவ்வொரு நாட்டின் பொருளாதாரத்தை ஒருங்கிணைப்பதே உலகமயமாக்குதல் ஆகும். உலகமயமாக்குதல் என்ற சொல்லில் உய்த்துணரக்கூடிய பல செய்திகள் உள்ளன. அவை வணிகம், நேரடி முதலீடு மற்றும் முதல் மாற்றம் முதலியன. குறிப்பாகச் சொன்னால் உலகமயமாக்குதலில் இறக்குமதி வரிகளைக் குறைத்தல், இறக்குமதியின அளவிலுள்ள தடைகளை நீக்குதல், தனியார் முதலீடுகளின் வருகை, ஏற்றுமதிகளை ஒழுங்குபடுத்துதல், அறிவாளிகளின் பரிமாற்றத்திலுள்ள தடைகளை நீக்குதல் முதலியன அடங்கும். உலகமயமாக்குதலில் பன்னாட்டு வாணிபத்தில் அதிகமான வெளிப்படையான நிலையை உருவாக்குதல், பன்னாட்டு முதலீடு மற்றும் பன்னாட்டு நிதி முதலியன முக்கியம் சுருங்கச் சொன்னால் உலகம் முழுவதையம் ஒரு ஒன்று சேர்ந்த பொருளாதார அலகாக மாற்றம் வழிமுறையே உலகமயமாக்குதல் ஆகும். உலகப் பொருளாதாரத்தில் நாடுகளுக்கிடையே பொருட்கள், பணிகள் மற்றும் முதலீடு இவற்றின் மாற்றத்திலுள்ள தடைகளை நீக்குதல் குறிப்பிட்டுச் சொல்லப்படுகிறது.

குறிப்பு

.

**உலகமயமாக்குதலுக்கு கொண்டு சென்ற காரணிகள்:-**

1) பொருளாதாரக் கட்டாயச்சூழல்:- வளர்ச்சி பெற்ற நாடுகளில் வளர்ச்சி விகிதம் குறைந்து கொண்டு வந்தது. அதனால் அந்நாட்டுகள் அதிக வளர்ச்சியைப் பெறவும், வேலைவாய்பபைப் பெருக்கவும் எண்ணி வெளிநாடுகளில் தங்கள் பொருட்களுக்கும் பணிகளுக்கும் அங்காடியை விரிவாக்க எண்ணினர். மாறாக, வளர்ந்து வரும் நாடுகளில் நிதிநிலை, தொழில்நுட்பம் மற்றும் படித்தோருக்கு வேலையளித்தல் குறைவாக இருந்தன. அதனால் பன்னாட்டு நிறுவனங்களை அவை வரவேற்கத்தயாராயின. இதனால் வளர்ந்து வரும் நாடுகளில் படித்து வேலையில்லாதோருக்கு உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் வேலை கிடைத்தது.

குறிப்பு

2) உலக அரசியல் சூழ்நிலையில் மாற்றம்:- 1990க்கு முன் உலகத்தில் இரண்டு வரிசைகளாக உலக நாடுகள் இருந்தன. 1) முதலாளித்துவ தொகுதி நாடுகள் 2) சமதர்மத்தை அடிப்படையாகக் கொண்ட நாடுகள், ஒவ்வொரு தொகுதியும் கட்டுப்படுத்தப்பட்ட பொருளாதாரக் கொள்கைகளை கையாண்டன. ஆனால் 1990ல் சோவியத் யூனியன் சிதையுண்ட பின், சமதர்மத்தின் மீது நம்பிக்கை குறைந்தது. பொதுவுடைமை சீனாவில் பொருளாதார நிர்வாகத்தில் மாற்றம் ஏற்பட்டது. சீனாவும் அமெரிக்காவும் பெரிய வணிகக் கூட்டாளி நாடுகளாயின இத்தகைய உலகமாற்றச் சூழல் உலகப் பொருளாதாரச் சூழ்நிலையை மாற்றியது.

3) பன்னாட்டு நிறுவனங்களின் முயற்சி:- உலகமயமாக்குதலில் காட் (GATT) மற்றும் உலக வர்த்தக நிறுவனம் (WTO) பெரும் பங்கு வகித்தன. சுங்கவரி மற்றும் வாணிபம் பற்றிய பொது ஒப்பந்தத்தின் (GATT) முக்கிய நோக்கம் பன்னாட்டு வாணிபத்தை விரிவுபடுத்துவதும் நாடுகளிடையே வணிகத்தை தாரளமயமாக்க ஒரு பொது ஒப்பந்தம் ஏற்படுத்துவதும் தான். உலக மக்களின் வாழ்க்கைத்தரத்தை அதிகரிக்க காட் எண்ணியது. 1995ல் காட் உலக வர்த்தக நிறுவனமாக மாற்றப்பட்டது. உலக வாணிபத்தில் சீரான போட்டிச் சூழ்நிலையை உருவாக்குதும் பன்னாட்டு அறிவுரை கூறும் அமைப்பாக செயல்படுவதும் உலக வர்த்தக நிறுவனத்தின் குறிக்கோள்களாகும்.

4) தனிப்பட்ட நாடுகளின் ஒத்துழைப்பு முயற்சியும் தாராளமயமாக்குதல் கொள்கையும்: பல நாடுகள் தங்கள் நாடுகளின் வளர்ச்சி விகிதத்தை அதிகப்படுத்தவும், கூடுதல் வேலைவாய்ப்பை அளிக்கவும் தாராளமயமான பொருளாதார கொள்கையை கையாண்டன. அயல்நாட்டு வணிகம் மற்றும் முதலீட்டில் தாராளமயக் கையாளப்பட்டது. மிகச் சிறந்த கூறாகும். பொருளதார தாராளமயக் கொள்கையுடன் அரசுகள் ஏற்றுமதி வருவாய்க்கு சலுகைகள் அளித்தன. ஏற்றுமதிக்கு நேரடி மற்றும் மறைமுக மானியம் அளித்தன. ஆராய்ச்சிக்கு உதவின. மேலாண்மை வழிகாட்டி அளித்தன. கட்டமைப்பு வசதியை அதகரித்தன. அரசுகள் மற்ற நாடுகளோடு வாணிப ஒப்பந்தங்களில் ஈடுப்பட்டன.

**இந்தியாவும் உலகமயமாக்குதலும் (India and Globalization)**

விவசாய கடன்

1990 களில் இந்தியா பொருளாதார நெருக்கடியைச் சந்தித்தது. காரணம் ஏற்றுமதி வளர்ச்சி குறைவாக இருந்தது. வெளிநாட்டிலிருந்த இந்தியர்கள் போதிய பணம் அனுப்பவதில்லை. சலுகை முறையில் கடன்கள் குறைவாக வந்தன. வளைகுடா போரினால்- எண்ணெய் இறக்குமதிச் செலவு அதிகரித்தது. பன்னாட்டுச் செலுத்துகையில் நடப்புக் கணக்கில் பற்றாக்குறை ரூ.17369 கோடியாக 1990-91ல் இருந்தது. 1991ல் அந்நியச் செலவாணி இருப்பு ரூ.1100 மில்லியன் அளவாகவே இருந்தது. இந்திய அரசு சிக்கலில் இருப்பதைக் கண்ட பன்னாட்டுப் பணநிதியும், உலக வங்கியும் நிதிப் பற்றாக்குறையைக் குறைக்கவும் உள்நாட்டுத் துறைகளில் தாரளமயக் கொள்கையைக் கையாளவும் வற்புறுத்தின.

குறிப்பு

1991லிருந்து உலகமயமாக்குதலில் இந்திய எடுத்துள்ள நடவடிக்கைகளை சுருக்கிக் கூறலாம். இறக்குமதிகளில் தடைசெய்யப்பட்ட பல 1992-97 ஏற்றுமதி இறக்குமதிக் கொள்கையின் கீழ் இலவசமாக வரியின்றி இறக்குமதி செய்யப்பட்டன. சிறப்பு இறக்குமதி அனுமதி முறை (SPL) கொண்டுவரப்பட்டது. 164 இறக்குமதி இனங்கள் இதற்குள் வந்தன. படிப்படியாக இறக்குமதி வரிகள் குறைக்கப்பட்டன. உலக வர்த்தக நிறுவனத்தின் கட்டாயத்தின் பேரில் இறக்குமதி வரி முடிந்த பொருளுக்கு 40 சதவிகிதமாகவும், நடுத்தரப் பொருள் மற்றும் எந்திரங்களுக்கு 25 சதவிகிதமாகவும் 2005ல் ஆகின. மேலும் பன்னாட்டு வாணிபம் தொடர்புடைய அறிவு சார்ந்த சொத்து உரிமையில் (Intellectual Property Rights) உள்நாட்டுச் சட்டத்தை மாற்றும் கட்டாயம் ஏற்பட்டது. இதனால் அயல்நாட்டு கம்பெனிகளுக்கு மருந்து மற்றும் விவசாய இரசாயணப் பொருட்களில் முழு உரிமை அளிக்கப்பட்டது. வெளிநாட்டு முதலீட்டாளருக்கு எதிராக எந்தவித வேறுபடுத்தலும் செய்யப்படமாட்டாது என உறுதியளிக்கப்பட்டது. உலகமயமாக்கலின் கீழ் இந்தியாவிற்குள் அயல்நாட்டு முதல் தாரளமாக, எளிதில் வரலாம் என்ற வசதி செய்யப்பட்டது. வெளிநாட்டு முதலீட்டாளருக்கும் வெளிநாட்டில் வசிக்கும் இந்தியருக்கும் சிறப்பான சலுகைகள் வழங்கப்பட்டன. வெளிநாட்டு முதலீட்டாளர் இந்தியக் கம்பெனிகளில் 51 சதவிகித அளவு பங்கு வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டது. வெளிநாட்டில் வாழும் இந்தியர்கள் ஏற்றுமதி நிலையங்கள், வணிக நிலையங்கள், உணவகங்கள், மருத்துவமனைகள் முதலியவற்றில் 100 சதவிகிதப் பங்கு வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர்.

**உலகமயமாக்குதலால் இந்தியாவில் ஏற்பட்ட விளைவுகள் (Consequences of Globalization in India):-**

குறிப்பு

1) **ஏற்றுமதி விரிவாக்கம்:** 1990-91ல் மொத்த உள்நாட்டு உற்பத்தியில் (GDP) ஏற்றுமதி 6.2 சதவிகிதமாக இருந்தது. இது 1995-96ல் 8.9 சதவிகிதமாகியது. மேலும் ஏற்றுமதியின் அளவு 2007-08ல் 160 பில்லியன் இலக்கை அடைய வாய்ப்பு உள்ளது.

2) **இறக்குமதி அதிகரிப்பு**: இறக்குமதி தாராள மயமாக்கப்பட்டதால் அதன் அளவு இந்தியாவில் அதிகரிதது 1990-91ல் இறக்குமதியின் வளர்ச்சி விகிதம் 14.4 சதவிகிதமாக இருந்தது. இது 1995-96ல் 21.6 சதவிகதமாகி, 2000-01ல் 24.1 சதவிகிதமாகிறது. 2007-2008 முதல் பாதியில் இறக்குமதி வளர்ச்சி 25.5 சதவிகிதமாக இருந்தது.

3) **அயல்நாட்டுச் செலுத்திநிலையில் முன்னேற்றம்:** 1990-91ல் இந்தியாவில் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் நெருக்கடியாகன நிலை ஏற்பட்டது. இதனால் வாணிபத்தில் தாராளமயக் கொள்கை கையாளப்பட்டது. அடிப்படை மாற்றங்கள் செயல்படுத்தப்பட்டன. 1997-98ல் அயல்நாட்டுச் செலுத்திநிலை சீரடைந்து ஏற்றுமதி அளவு குறைந்தும்கூட 1998-99ல் அயல்நாட்டுச் செலுத்துநிலையை சிக்கலின்றி பராமரிக்க முடிந்தது.

4) **ரூபாயின் மாற்றுவீதத்தில் உறுதித்தன்மை நிலைநாட்டப்படுதல்:** 1990-91ல் உலகத்தின் முக்கியமான ஐந்து நாணயங்களுக்கு எதிராக ரூபாயின் மதிப்பு குறைக்கப்பட்டது. (22 சதவிகித அளவு) பின்னர் ரூபாயை ஓரளவுக்கு மாற்றிக்கொள்ளதாக்குதல் (Convertibility) கொள்கை பின்பற்றப்பட்டது. 1993ல் அமெரிக்க டாலருக்கு எதிராக ரூபாய் அதன் உறுதித் தன்மையை காட்டியது. பின்னர் 1998-99ல் ரூபாயின் மதிப்பு அமெரிக்க டாலருக்கு எதிராக 7.1 சதவிகிதம் குறைந்தது. அதனால் 1க்கு இந்திய ரூபாய் 48 கொடுக்க வேண்டிருந்தது. படிப்படியாக மாறி ரூபாயின் மதிப்பு இன்று 1க்கு மீண்டும் ரூ.50 ஆக உள்ளது.

5) **முதல் வரத்து:** இந்தியாவில் கையாளப்பட்ட முதல் அங்காடி மற்றும் வணிகச் சீர்திருத்தங்களால் அயல்நாட்டு முதலீட்டாளருக்கு

நம்பிக்கை ஏற்பட்டது. இதன் விளைவாக அயல்நாட்டு நேரடி முதலீடு அதிகரித்து 2001-02ல் ரூ.3904 மில்லியன் ஆகிறது.

6) **வெளிநாட்டு கடன் நிலையில் முன்னேற்றம்:** மொத்த உள்நாட்டு உற்பத்தியில் வெளிநாட்டுக் கடன் விகிதம் 1991ல் 30.4 சதவிகிதமாக இருந்தது. இது 2002ல் 20.9 சதவிகிதமாக குறைத்தது.

7) **அந்நியச் செலாவணி இருப்பு:** இந்தியாவின் அந்நியச் செலாவணி இருப்பு 2004ல் 120 பில்லியனாக இருந்தது. இன்று அது படிப்படியாக அதிகரித்து வருகிறது. (இன்று 200 பில்லியன் டாலர்)

குறிப்பு

**பாதக விளைவுகள்**

1) **நடப்புக் கணக்கில் பற்றாக்குறை:** 1991-92லிருந்து 2000-01 வரையுள்ள காலத்தில் மொத்த உள்நாட்டு உற்பத்தியில் வாணிபப் பற்றாக்குறை (Trade Deficit) சதவிகிதத்திலிருந்து 3.1 சதவிகிதமாக அதிகரித்தது. வாணிப இடைவெளி 2007-08 முற்பகுதியில் 36.92 பில்லியன் (2006-07ல் 26.02 பில்லியன்)

2) **வெளிநாட்டு நேரடி முதலீட்டில் பின்தங்கிய நிலை:** வெளிநாட்டு நேரடி முதலீடு சைனா, இந்தோனேசியா, மலேசியா, தாய்லாந்து ஹாங்காங், சிங்கப்பூர் முதலியவற்றை விட இந்தியாவில் குறைவு. அதோடு குறிப்பிட்ட நிறுவனங்களிலும் அந்திய முதலீடு அதிகரிக்கவில்லை.

3) **முதலீடு குறைவு:** இந்தியாவில் அந்நிய நாட்டு முதலீடு போதுமானதாக இல்லை.

4) **பன்னாட்டு வணிக நிறுவனங்கள் (MNCs):** பன்னாட்டு வணிக நிறுவனங்களின் பங்கு அதிகரித்தது. அதனால் போட்டி, திறந்தவெளிநிலை, தனியார்மயம் ஏற்பட்டு உலகிலுள்ள ஏழைகள் பாதிக்கப்பட்டனர். இந்தியா இதற்கு விதிவிலக்கல்ல.

எனவே உலகமயமாக்குதலில் சில நன்மைகள் இருப்பினும் அதிலுள்ள இடர்களை எளிதில் உதறித்தள்ள இயலாது. வளர்ந்த நாடுகள் வளரும் நாடுகளுக்கு போதிய அளவு உதவவில்லை. அவை காப்புக் கொள்கையை கையாண்டு வருகின்றன. அதனால் தான் ஐக்கிய

நாடுகள் சபை சமத்துவத்தோடு கூடிய பதிவு பன்னாட்டுப் பொருளாதார முறையை கொண்டு வர வலியுறுத்துகிறது. புதிய **தோஹா** சுற்றுப்பேச்சு வார்த்தைகள் இதற்கு நல்ல பதிலளிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

**குறிப்பு**

இந்தியாவின் முதுகெழும்பு விவசாயத்தில் தான் இருக்கிறது என்பர். பல்வேறு வகையான தொழில்களுக்கு தேவைப்படுவது போலவே வேளாண்மை தொழிலுக்கும் மூலதனம் மிகவும் இன்றியமையாததாக இருக்கிறது. விவசாயிகள் தங்கள் கடன் தேவைகளை பல வழிகளில் பூர்த்தி செய்து வருகின்றனர். முன்முதலாக விவசாயிகளுக்கு வங்கி கடன் என்பது கிராம தொடக்க கூட்டுறவு வங்கிகள் மூலம் தான் சாகுபடி செலவுகளுக்கு பணமும் இரு பொருட்கள் உரம் பூச்சி மருந்து முதலியவை வழங்கப்பட்டது. நீண்ட கால கடன் கூட்டுறவு நிலவள வங்கிகள் மூலம் வழங்கப்பட்டது. விவசாயிகள் தனியாரிடமும், கமிஷன் மண்டி, கந்து வட்டிக்காரர்களிடமும், உரக்கடைக்காரர்களிமும் கடன் பெற்று சாகுபடி செய்வதுண்டு.

ஆனால் வங்கிகள் அரசுடமை ஆக்கப்பட்ட பின்பு கிராமங்கள் பலவற்றில் வங்கி கிளைகள் திறக்கப்பட்டன அங்கு கிராம மேம்பாட்டிற்கும், குறிப்பாக வேளாண்மைக்கும் கடன்கள் வழங்கப்படுகின்றன. வங்கிகளில் தனியார் வங்கிகள் கிராம தொடக்க கூட்டுறவு வங்கிகள், சுட்டுறவு நிலவள வங்கிகள், கிராமிய வளர்ச்சி வங்கிகள், பொதுத்துறை வங்கிகள், வெளிநாட்டு வர்த்தக வங்கிகள், வங்கிசாரா நிதி நிறுவனங்கள் என்று பல வகைகள் உள்ளன மத்திய அரிசின் ரிசர்வ் வங்கியின் ஆணைப்படி வங்கிகள் கொடுக்கும் மொத்த கடன் அளவில் கட்டாயமாக 18 சதவீதம் வேளாண்மை அபிவிருத்திக்கும்,40 சதவீதம் முனன்னுரிமை கடனாகவும் வழங்கப்பட வேண்டும். இந்த இலக்கை ஒவ்வொரு ஆண்டும் ரிசர்வ் வங்கி ஆய்வு செய்து கண்காணித்து வருகிறது.

வங்கி கடன்களால் உள்ள நன்மை என்னவென்றால், குறைந்த வட்டி, எளிய தவணை, உடனடி சேவை என்பது தான் கடன்களில், பலவகைகள் உண்டு. இதில் குறுகிய கால கடனில் பயிர் சாகுபடி கடன்கள், உழவர் கடன் அட்டை திட்டம், விவசாய நகைகடன்கள் மகசூல் விற்பனைகடன் என்று பிரிவுகள் இருக்கின்றன. குறுகிய கால பயிர்களான நெல், கரும்பு, வாழை, சோளம், ராகி, உளுந்து, பயிறு, மிளகாய், எள், சூரியகாந்தி, பருத்தி, மஞ்சள், சோயா, வெங்காயம், புகையிலை, காய்கறிகள், வெற்றிலை மற்றும் இதர பயிர்களுக்கு பருவம்

மற்றும் பட்டம் வாரியாக பயிர்க்கடன்கள் வழங்கப்படுகிறது. தென்னை, மா, போன்ற தோப்புகள் பராமரிக்கவும் பயிர்க்கடன்கள் வழங்கப்படுகிறது. பட்டம் தவறினால் நட்டம். எனவே விவசாயிகள் வாழ்வில் பயிர்க்கடன் முக்கியத்துவம் வாய்ந்தது.

இதனை உணர்ந்து விதை, உரம், பூச்சி மருந்து, களைக்கொல்லி, நுண்ணூட்ட சத்து போன்ற இடுபொருட்கள் வாங்கவும், நீர் மேலாண்மை, உழவு, களை எடுத்தல், எலி ஒழிப்பு, பூச்சி, பூஞ்சாண மருந்து தெளித்தல், அறுவடை போன்ற வேலைகளுக்கு கூலி கொடுக்கவும் தேவைப்படும் தொகையை கடனாக வழங்கப்படுகிறது.

**குறிப்பு**

சொந்த நிலம் அல்லது குத்தகை நிலம் உள்ளவர்கள் பயிர்க்கடன் பெற தகுதியானவர்கள். நில உரிமையாளர்களிடம் செய்து கொண்டுள்ள குத்தகை ஒப்பந்தத்தை காட்டி கடன் பெறலாம். பயிர்க்கடன் விண்ணப்பம் செய்பவர்கள் வேறு எந்த நிறுவனத்திடமும் இதே தேவைகளுக்காக கடன் வாங்கியிக்க கூடாது. மேலும் அப்படி கடன் வாங்கி கட்டாமலும், தவணை தவறிய நிலுவையில் உள்ளவராகவும் இருக்க கூடாது.

பயிர்க்கடன் விண்ணப்ப படிவம் வங்கியிலேயே கிடைக்கும். நில சம்பந்தமான முழு விவரங்கள் அடங்கிய சிட்டா, அடங்கள், கிஸ்து, ரசீது கிராம நிர்வாக அலுவலரின் சான்றிதழ் மற்றும் பாஸ்போர்ட் சைஸ் புகைப்படம் முதலியவற்றை வங்கியில் கொடுக்க வேண்டும். மேலும் வங்கியிலும் இதர வணிக வங்கிகளிலும் கடன் நிலுவையில் இல்லை என்பதற்கான சான்றிதழ் தேவைப்படும். ஒப்பந்த கரும்பு சாகுபடி செய்பவர்கள் சர்க்கரை ஆலையில் பதிவு செய்திருக்க வேண்டும். மேலும் கடன் பெறும் வங்கியில் சேமிப்பு கணக்கு வைத்திருக்க வேண்டும் அல்லது புதிதாக கணக்கு தொடங்க வேண்டும். ஒவ்வொரு பயிருக்கும் ஆண்டு தோறும் நிர்ணயிக்கப்பட்டுள்ள கடன் அளவு ஏக்கருக்கு எவ்வளவு என்பது மாவட்ட தொழில் நுட்ப குழுவின் பரிந்துரையின் பேரில் தீர்மானிக்கப்படுகிறது. இதில் பாதி பொருளாகவும், பாதியை பணமாகவும் பெறலாம். எத்தனை ஏக்கர், என்ன பயிர் என்பதை கொண்டு கடன் அளவு நிர்ணயிக்கப்படும்.

மத்திய ரிசர்வ் வங்கியின் ஆணைப்படி 50 ஆயிரம் வரையிலான விவசாய கடன்களுக்கு விளிம்பு தொகை கிடையாது. கடன் தொகை 50 ஆயிரத்திற்கு மேல் அதிகமானால் 15 முதல் 25 விழுக்காடுகள் வரை விளிம்பு தொகையாக நிர்ணயிக்கப்படும்.

தற்போதுள்ள நிலவரப்படி, 3 லட்சம் வரை 7 சதவீத வட்டி விதிக்கப்படுகிறது. இதற்கு மேல் உள்ள கடனுக்கு மாறுதலுக்கு உள்ளாகும். மத்திய அரசு, மத்திய ரிசர்வ் வங்கி அறிவிப்புக்கு ஏற்ப இது மாறுபடும். குறுகிய கால கடன் 3 லட்சம் வரை பெற்ற அறுவடை காலம் 6 மாதம் முடிந்தும் கடன் தொகையை கட்டாவிட்டால் 50 ஆயிரம் வரை 10 சதவீதமும், 50 ஆயிரத்துக்கு மேல் 3 லட்சம் வரை 11 சதவீதமும் வட்டி வசூலிக்கப்படும். 3 லட்சத்திற்கு மேல் 5 லட்சம் வரை 11.75 சதவீதம் வசூலிக்கப்படும்.

குறிப்பு

எந்த பயிர் சாகுப்படிக்காக கடன் வழங்கப்படுகிறதோ அதன் அறுவடைக்காலம் முடிந்து இரண்டு மாதத்திற்குள் வட்டியும், அசலும் சேர்த்து கட்டி முடிக்க வேண்டும். அறுவடை மகசூலை விற்று பணமாக்குவதற்காக இரண்டு மாத கால அவகாசம் தரப்படுகிறது.

.

பயிர்க்கடன் இரண்டு பருவம், இரண்டு அறுவடைக்கு பின் என்ற ரீதியில் திருப்பி செலுத்த வேண்டும்.

## 11.3. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

கரும்பு ஆலையில் ஒப்பந்த சாகுபடிதாரர்கள், கரும்பு அறுவடைக்கு பின் ஆலையில் இருந்து வங்கிகளுக்கு நேரிடையாக சம்மந்தப்பட்ட விவசாயிகளின் கணக்கிற்கு பணம் வந்து விடும். கடன் தொகை வட்டி போக, மீதமுள்ள தொகை விவசாயிகளின் சேமிப்பு கணக்கில் வரவு வைக்கப்படும் கடன் பெறுவதன் மூலம் குறைந்த வட்டி, எளிய தவணை உன்னத சேவை என்ற நிலையை விவசாயிகள் பெற முடியும்.

## 11.5 வேளாண்மைக் கடன் அளவும் நிலையும்

இந்திய வேளாண்மையைப் பின்னிப் பிணைத்திருக்கும் தலையாய சிக்கல்களில் ஒன்று உழவர்களை அழுத்திக் கொண்டிருக்கும் கடன்பாரம். நாட்டுப்புறங்களில் கடன்படாத உழவர்களே இல்லையென்று கூறுமளவிற்குப் பெரும்பாலானவர்கள் கடனென்ற சேற்றுக்குழியில் அகப்பட்டு மீளும் வழியறியாது தவிக்கின்றனர். வேளாண்மையில் வேண்டிய அளவு வருவாய் இல்லை.

இந்த நிலையைப் பொருளியலறிஞரான திவாரி என்பவர் “மிகுதியான விவசாயிகள் தவிர்க்க முடியாத கடனுக்குள் மூழ்கியுள்ளார்கள் அவர்கள் கடனில் வாழ்ந்து கடனிலேயே இறந்து தங்களுக்குப் பின்னும் கடனையே விட்டுச் செல்கின்றார்கள் என்று

கூறுகின்றனர். கடன் பாரம் உழவர்களின் திறமையைப் பாதிக்கின்றது. இறுதியில் வேளாண்மை உற்பத்தி குறைகின்றது.

ஒருமுறை கடன்பட்டவர்கள் அதிலிருந்து மீள முடிவதில்லை. "தற்கொலை செய்துகொள்ள விரும்புகின்றவனுக்குத் தூக்குக்கயிறு உதவுவதைப்போல உழவனுக்குக் கடன் உதவுகின்றது." என்றொரு பிரெஞ்சுப் பழமொழி உண்டாம் அது இந்தியக்கடன்பட்ட உழவனின் நிலையை அப்படியே படம் பிடித்துக் காட்டுவதை அறிகின்றோம்.

**கடனின் மொத்த அளவு**

குறிப்பு

நமது நாட்டு உழவர்கள் பட்டிருக்கும் கடனின் அளவு ஆண்டுக்காண்டு மிகுந்து வருகின்றது இதனை கடன்பாடு பற்றிய பல்வேறு மதிப்பீடுகள் துல்லியமாகக் காட்டுகின்றன.

ரிசர்வ் வங்கி நியமித்த கிராமக்கடன் புள்ளிவிவரச் சேமிப்புக்குழு அளிக்கையில் 1955 ஆம் ஆண்டில் ஆண்டொன்றிற்கு இந்திய உழவர்கள் ஏறத்தாழ 759 கோடி ரூபாய் கடன் பெறுகின்றனர் என்று கூறப்பெற்றது. தேசிய வருவாய்க்குழு 915 கோடி ரூபாய் இருக்குமென்று கருதுகின்றது. எஸ்.திருமலை கடனளவை ரூ.1,800 கோடியென மதிப்பிடுகிறார்.

**கடன்படக் காரணங்கள்**

இந்திய உழவர்கள் கடன்பட்டிருப்பதற்குப் பலவகையான காரணங்கள் உண்டு. கடன் சிக்கலைத் தீர்க்கவோ கடன் சுமை கடன்படுவதற்கான காரணங்களை அறிந்து கொள்ள வேண்டும். கீழ்க்கண்ட தலையாய காரணங்களால் இந்திய உழவர்கள் கடன் பட்டிருக்கிறார்களென்று கூறலாம்.

1. வேளாண்மையின் வருவாய் குறைவு: பிற்போக்கான கருவிகளைப் பயன்படுத்துவதாலும் நிலம் சிறு சிறு துண்டுகளாக சிதறிக் கிடைப்பதாலும். பழைய சாகுபடி முறைகளைப் பின்பற்றுவதாலும் உற்பத்தி குறைவாக இருக்கின்றது. பெரும்பாலான உழவர்களுக்கு வருமானத்தை விடச் செலவே அதிகம். 1956-ஆம் ஆண்டில் வேளாண்மை உழைப்பு விசாரணைக்குழு ஒரு விவசாயிக் குடும்பத்தின் ஆண்டு வருமானம் ரூ.437 என்றும் ஆனால் செலவோ ரூ.617 என்றும், இதனால் ஆண்டொன்றிற்கு பற்றாக்குறை ரூ.180 என்றும் கூறியுள்ளது கவனிக்கத்தக்கது. பற்றாக்குறை வருவாயை ஈடுகட்ட உழவர்கள் கடன் வாங்குகின்றனர்.
2. எண்ணற்ற மக்கள் வாழ்க்கைக்கு நிலவருவாயையே நம்புகின்றனர். இதனால் தலை வருமானம் மிகவும் குறைந்துள்ளது. மக்கட்

குறிப்பு

பெருக்கத்தின் விளைவால் வறுமையின் பிடி இறுகியுள்ளது. உயிர்வாழவே கடன் வாங்க வேண்டிய நிலையில் பல உழவர்கள் உள்ளனர்.

3. உழவர்கள் தொழிலின் செழிப்பிற்காக மட்டும் கடன் வாங்கினால் கடன் தீராத சிக்கலாக இருக்காது. ஆனால் உழவர்கள் வாங்கும் கடனில் பெரும் பகுதியைத் திருவிழாக்களுக்கும் திருமணம் போன்ற சடங்குகளுக்கும் செலவிடுகின்றனர். நாட்டு வருவாய்க் குழு குடியானவர்கள் வாங்கும் கடனில் ஏறத்தாழ 83 சதவிகிதத்தை உற்பத்தி தவிர பிற செலவுகளுக்கே பயன்படுத்துகின்றனரென்று கணக்கிட்டுக் கூறியது.
4. மிகவும் கூடிய கூட்டு வட்டிக்கு பணம் வாங்குவதால் உழவர்களால் கடனைத் திரும்பக் கட்ட முடியவில்லை அரசும் கூட்டுறவுச் சங்கங்களும் ஓரளவுதான் கடன் கொடுக்கின்றன. குடியானவர்கள் தங்களுக்கு தேவையான கடனில் பெரும் பகுதியை லேவாதேவிக்காரர்களிடமிருந்தும் வணிகர்களிடமிருந்தும் சொந்தக்காரர்களிடமிருந்தும் பெறுகின்றனர். கொடுக்கின்ற வட்டி விகிதம் மிகவும் அதிகம். 300 சதவிகிதம் வரை வட்டி வாங்குகின்றனர். இதனால் கடன்பட்ட உழவரால் கடனைத் தீர்க்க முடிவதில்லை.
5. மூதாதையரின் கடன் தொடர்ந்து வருகின்றது தந்தையின் கடனைத் தீர்ப்பது மகனின் கடமையாகின்றது தந்தையின் சொத்திற்கு மேல் கடனிருந்தால் சட்டப்படி கடனின் பாரம் மகனைச் சாராது என்ற உண்மை பலருக்குத் தெரிவதில்லை. இதனால் பழங்கடனைத் தீர்ப்பதிலேயே பலர் நொந்து போகின்றனர்.
6. பருவமழை தவறுவதால் வேளாண்மை பாதிக்கின்றது. இது உழவர்களைக் கடன்படச் செய்கிறன்றது. சராசரி ஐந்து ஆண்டுகளில் ஓராண்டுக்குச் சிறந்த விளைச்சலாகவும், ஓராண்டு மிகவும் மோசமான விளைச்சலாகவும் மற்றைய மூன்று ஆண்டு சுமாரான விளைச்சலாகவும் இருப்பதாகக் கணக்கிட்டுள்ளனர். பருவமழையில் சூதாட்டமாக வேளாண்மை இருப்பதால் உழவர்கள் கடன் வாங்கிய தொடர்ந்து வேளாண்மையை மேற்கொள்ள வேண்டியுள்ளது.
7. இப்பொழுதிருக்கின்ற நிலத்தீர்வை முறையும் உழவர்களை கடனாளிகளாக்குகின்றது. பணமாக வரி செலுத்தவேண்டும். நிலத்தின் அளவை ஒட்டி வரி விதிக்கின்றார்களே தவிர விளைச்சலை ஒட்டி வரி நிர்ணயிப்பதில்லை. நிலவரி வசூலிப்பதில் கட்டுப்பாடும்

கெடுபிடிகளும் மிகுதி பல விவசாயிகள் கடன் வங்கி நிலவரி செலுத்தும் நிலையில் உள்ளனர்.

8. கால்நடைகளின் இறப்பு மற்றொரு காரணம் ஆகும். கால்நடைகளுக்கு வரும் சப்பை நோய் போன்றவை பல கால்நடைகளைக் குறுகியகாலத்தில் மாய்த்து விடுகின்றன. நாட்டுப் புறங்களில் கால்நடை மருத்துவ வசதி குறைவால் இந்தக் கொடுமையை முழுமையாகத் தவிர்க்க முடியவில்லை. கால்நடைகளின்றி வேளாண்மை நடைபெறாதாகையால், கடன் வாங்கிக் கால்நடை வாங்க வேண்டிய நிலைக்குப் பலர் ஆளாகின்றனர்.



9. கிராமக் கைத்தொழில்கள் சீர்குலைந்ததால் விவசாயிகளுக்குத் துணைத்தொழில் இல்லாமல் போய்விட்டன. ஆண்டு முழுவதும் வேளாண்மையில் வேலை இருப்பதில்லை. கைத்தொழில்கள் மூலம் கிடைத்த வருவாய் இல்லாமல் போனதால் பற்றாக்குறை மிகுந்து வருகின்றது.
10. மலேரியாக் காய்ச்சல் போன்ற நோய்களால் தளர்ந்து போகின்ற உழவர்களின் வருமானம் குறைந்தது கடன் வாங்கியே காலம் தள்ள வேண்டிய தேவை ஏற்படுகின்றது.
11. விவசாயிகள் சாதாரணச் சண்டைச் சச்சரவுகளைத் தீர்ப்பதற்குக்கூட நீதிமன்றங்களை நாடிச்செல்கின்றனர். வெறும் வரப்பு தகராறுக்காக ஆயிரக்கணக்காகப் பணம் செலவு செய்கின்றவர்களும் உண்டு. இந்த மனப்போக்கால் அவர்கள் கடன்படுகிறார்கள்.

**விளைவுகள்**

கடன் பொருளாதார அடிப்படையில் உற்பத்தித் திறனைப் பாதிக்கின்றது. உழைப்பின் பலனெல்லாம் கடனைத் திரும்பச் செலுத்தவே போதுமானதாயில்லை. இதனால் ஆர்வமின்றி உழைக்கின்றார்கள். கடன் கொடுத்தவர்களுக்கே கடனைத் திருப்பிக் கொடுக்க விளைச்சலை உடனடியாக விற்க வேண்டிய இக்கட்டுக்கு ஆளாகின்றனர். இதனால் கிடைக்க வேண்டிய பலன் கைமாறிச் செல்ல உழவர்கள் சோர்ந்து விடுகின்றனர்.

கடனால் சமுதாயத் தொடர்புகள் பாதிக்கின்றன. கடன் கொடுத்தவருக்கும் கடன் பட்டவருக்குமிடையில் சண்டைகள் ஏற்படுகின்றன. கடன்பட்டவனைச் சமுதாயம் செல்லாக் காசாக மதிக்கின்றது. இருப்பவன்- இல்லாதவன் என்ற ஏற்றத் தாழ்வு ஏற்படுகின்றது.

குறிப்பு

**தடுப்பு நடவடிக்கைகள்**

1. அரசு உழவர்களுக்கு கடன்தர வேண்டிய அவசியத்தை உணர்ந்தது. நல்ல விளைச்சலில்லாத ஆண்டுகளில் உழவர்களுக்கு குறைந்த வட்டியில் அரசு கடன் கொடுக்க தொடங்கியது.
2. கடன்பட்ட உழவர்களுக்குப் பாதுகாப்பளிக்கும் வகையில் அரசு சட்டங்கள் கொண்டு வந்தது கடனைத் திருப்பித் தர முடியாத விவசாயிகளைச் சிறையிலிடுவதைத் தடுக்கவும் தேங்கிய கடனின் பழைய வரலாற்றையறிந்து விவசாயிக்குச் சாதகமாக வட்டியைக் குறைக்கவும், கூடியவரை கடனைத் தீர்க்க நிலத்தை விற்பதைத் தவிர்க்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.
3. கடன்பட்ட விவசாயிகளிடமிருந்து கடன் கொடுத்தவர்களுக்கு நிலம் கைமாறுவதைத் தடுக்கவும் அரசு முயற்சிசெய்தது. பஞ்சாப் நில வெளியேற்றச் சட்டம் 1901 ஆம் ஆண்டில் கொண்டுவரப் பெற்றது.
4. கடன் சுமையைக் குறைக்கவும், சில நடவடிக்கைகள் எடுத்தனர். கடன் தீர்வுக் கழகங்களை அமைத்துக் கடன் கொடுத்தவரின் நல்லெண்ணத்தின் மூலமாகக் கடனைக் குறைக்க சட்டங்கள் வந்தன.

## 11.4. வேளாண் மற்றும் கிராமப்புற மேம்பாட்டிற்கான தேசிய வங்கி(NABARD)

வேளாண்மை மற்றும் கிராம வளர்ச்சி பற்றி மறுபரிசீலனை செய்த குழு நபார்டு என்ற நிறுவனத்தை தோற்றுவிக்க பரிந்துரை செய்தது. அதன்படி 1982 ஜுலை நபார்டு தோற்றுவிக்கப்பட்டது.

**நபார்டின் தேவையும் குறிக்கோளும்:**

ஒருங்கிணைந்த கிராம வளர்ச்சியைப் பெற வேளாண்மை சிறுத்தொழில், குடிசைத்தொழில், கிராமத்தொழில், கைவினைப் பொருட்கள் மற்றும் கிராமத்திலுள்ள துணைத் தொழில்களும் தேவையான கடன் வசதியை அளிக்க நபார்டு ஏற்படுத்தப்படுவதற்கு அன்றைய நிதியமைச்சர் திரு.சு.வெங்கட்ராமன் அறிவித்தார். விவசாயம் என்பதில் பூக்கள் உருவாக்குதல், கால்நடை வளர்ப்பு காடுகள், பால்பண்ணை மற்றும் கோழி வளர்த்தல் சேர்க்கப்பட்டன.

**நிதி:**

நபார்டின் மூலதனம் ரூ.100 கோடி, இதை ரூ.500 கோடியாக அதிகரிக்கலாம். துவக்க முதலான ரூ.100 கோடியை மத்திய அரசும், ரிசர்வ் வங்கியும் சமமாக அளித்தன.

**நிர்வாகம்:**

நபார்டு நிர்வாகம் ஒரு இயக்குநர் குழுவிடம் விடப்பட்டது. அதில் கீழ்க்கண்டவர்கள் இருப்பர்:

அ) ஒரு தலைவர்

ஆ) கிராமப் பொருளாதாரம் மற்றும் கிராம வளர்ச்சி பற்றிய அனுபவம் உடைய 2 இயக்குநர்கள்.

இ) கூட்டுறவு வங்கி பற்றி அனுபவம் உடைய 2 இயக்கநர்கள்.

ஈ) ரிசர்வ் வங்கியின் இயக்குநர்களில் 3 இயக்குநர்கள்

உ) மத்திய அரசு அதிகாரிகளில் 3 இயக்குநர்கள்

ஊ) மாநில அரசு அதிகாரிகளில் 2 இயக்குநர்கள்

எ) ஒரு நிர்வாக இயக்குநர்

ஏ) ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட முழுநேர இயக்குநர்கள்

தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர் 5 வருட காலம் பதவியில் இருப்பர் ஒவ்வொரு இயக்குநரும் 3 வருட காலம் பதவி வகிப்பர். இந்த குழு விவசாயம், விவசாயக்கடன், கூட்டுறவு, சிறுதொழில், குடிசைத் தொழில் பற்றிய அனுபவமுள்ளவர்கள் அடங்கிய அறிவுரைக் குழுவை அமைக்கும்.

**பணிகள்:**

மத்திய அரசு ரிசர்வ் வங்கியும் கூட்டாகச் சேர்ந்து உரிமை கொண்டாடும் சட்டப்பூர்வ கார்பொரேசன் நபார்டு ஆகும். விவசாய மறுநிதி மற்றும் வளர்ச்சிக் கழககத்தின் (ARDC) எல்லா வணிகத்தையும் நபார்டு எடுத்துக் கொண்டுள்ளது. ரிசர்வ் வங்கியும் கிராம வளர்ச்சி மற்றும் விவசாயக் கடன் பற்றிய வணிகத்தை நபார்டுக்கு மாற்றிவிட்டது.

நபார்டு கடன் பத்திரங்கள் வெளியிடலாம். இதற்கு மத்திய அரசு உறுதியளிக்கும் நபார்டு மத்திய அரசிடமும், ரிசர்வ் வங்கியிடமும் கடன் பெறலாம். அது அரசு, நகராட்சிகள், வங்கிகள் ஆகியவற்றிடமிருந்து வைப்புகள் பெறலாம். நபார்டு அந்நியச் செலாவணி கடன் பெறலாம். நபார்டு அந்நியச் செலாவணி கடன் பெறலாம். இவ்வங்கி தான் மத்திய அரசு சார்ந்த நிறுவனங்களுடன் தொடர்பு கொள்ளும் நிறுவனமாக செயல்படுகிறது. இவ்வங்கி ஆராய்ச்சியை வளர்க்கிறது. இது கடனை மாற்றயமைத்தல் நடுத்தரகாலக் கடன் அளித்தல், மாநில அரசின் பங்கு முதலுக்கு உதவுதல், உறுதியளித்தல், நேரடி கடன் வழங்குதல் முதலிய பணிகளைச் செய்கிறது. கிராமக் கடன் தொடர்புடைய எல்லா நடவடிக்கைகளையும் இது ஒருங்கிணைக்கிறது. இது மாநில நிலவள

வங்கிக்கு மறுநிதி அளிக்கிறது. 1995-96ல் நபார்டு கூட்டுறவு வங்கிகளுக்கு குறுகிய கால கடனாக ரூ.4750 கோடி அளித்துள்ளது. நபார்டு கிராம கட்டமைப்புக்கு உதவுகிறது. இதற்காக நபார்டிடம் ரூ.2000 கோடி இருப்பு நிதி அளிக்கப்பட்டுள்ளது. இந்நிதியிலிருந்து கிராமக் கட்டமைப்பு வசதிகளைப் பெருக்க மாநில அரசுகளுக்கு கடன் வழங்கப்படுகிறது.

குறிப்பு

நபார்டு விவசாயிகளின் பல்வேறு நிதித் தேவைகளை நிறைவேற்றும் ஒரே நிறுவனமாகச் செயல்படுகிறது. கடன் பெறுவோர் அதிக வட்டி செலுத்த வேண்டிய கட்டாயம் இல்லாமல் நபார்டு பார்த்துக்கொள்ள வேண்டும். பல்வேறு நிதி நிறுவனங்களுக்கிடையே புரிந்துக்கொள்ளுதல் நிலவ இது உதவ வேண்டும் கூட்டுறவுச் சங்கங்களின் செயல்பாட்டை திறமையுள்ளதாக ஆக்க முயல வேண்டும். காலம் கடந்த கடன் அளவினை (Overdues) குறைக்க நபார்டு உதவ வேண்டும்.

.

சரிபார்க்க:

குறிப்பு : அ) உங்களுடைய விடையை கீழ்கண்டவாறு பதில் அளிக்கவும்.

ஆ) உங்களுடைய பதிலை இந்த அலகின் இறுதியில் சரிபார்த்துக் கொள்ளவும்.

1. நபார்டு வங்கியின் பணி என்ன?
2. கூட்டுறவு கடன் என்றால் என்ன?

## 11.5. கூட்டுறவு கடன்

கூட்டுறவு கடன் அமைப்பு தான் மாநிலத்தில் தனி பெரிய நிறுவனக்கடன் வழங்கும் முறையாக விளங்குகிறது. கிராமப்புற மக்களுக்கு கூட்டுறவு வங்கிகள் குறைந்த அளவு வட்டி விகிதங்களில் கடன் வழங்குகிறது. இதன் மூலம் விவசாயிகள் முறையற்ற கடன் வசிதிகளான அதிக வட்டிக்கு கடன் வாங்குவது குறைக்கப்பட்டுள்ளது. சமூக ரீதியாகவும், புவியியல் ரீதியாகவும் இந்த நிறுவன முறை விவசாயிகள் கடன் பெறுவதற்கு ஏற்றதாக இருக்கிறது.

பொதுமக்களிடமிருந்து வைப்பு நிதிகளை ஈர்த்தல் மற்றும் பணம் தேவைப்படுவோருக்கு அவர்களின் பாதுகாப்புக்காக பத்திரங்களை வைத்துக் கொண்டு கடனளித்தல் முக்கிய பணியாகும். இவை பால்பண்ணை, கைத்தறி, சர்க்கரை மற்றும் இவைச்சார்ந்த இதர கூட்டுறவுகள் ஆகியவற்றின் கடன் தேவைகளை பூர்த்தி செய்கிறது. தொடக்க வேளாண்மை கூட்டுறவு வங்கிகள், நபார்டு வங்கிகள் விவசாயிகளுக்கு நீண்டகால கடன் நடுத்தர தவணைகடன் நிலம் வாங்குதல் புது கிணறு அமைத்தல் இருக்கின்ற கிணறுகளை ஆழப்படுத்துதல் ஆகியவற்றிற்கு கடன் வழங்குகிறது. நகர்புற கூட்டுறவு வங்கிகளும், நகர்புற மக்களுக்கு கடன் வழங்குகிறது.

குறிப்பு

**வீட்டுக்கடன் பெண் தொழில் முனைவோருக்கானகடன் திட்டம்:**

பயிர்கடன்களுக்கு வட்டியில் மானியம் அளித்தல் பண்ணை சாரா கடன்களுக்கு வட்டி குறைத்தல், நகை கடன், கிஸான் கடன் அட்டை திட்டம், நளிந்த பிரிவு மக்களுக்கு கடன் அளித்தல், சிறுகடன் திட்டம். சுய உதவிக் குழுக்களுக்கு உதவி அளித்தல், பெண் சுய தொழில்முனைவோர் கடன் திட்டம், வேலை செய்யும் பெண்களுக்கான கடன் திட்டம்,தாய்மைக்கால கடன் திட்டம், தொழில்நெறிஞர் கடன் திட்டம், தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர் உறுப்பினர்களுக்கு வட்டியில்லா முதலீட்டு கடன், பெண் உறுப்பினர்களுக்கு வட்டியில்லா முதலீட்டு கடன் ஆகியவை கூட்டுறவு வங்கியின் மூலம் வழங்கப்படுகிறது.

தொடக்க வேளாண்மை கூட்டுறவு வங்கியில் உள்ள 2000 பெண் உறுப்பினர்களுக்கு வட்டியில்லா பங்கு முதலீடுகள் ரூ.500 விகிதத்தில் வழங்கவும், உடல் ஊனமுற்றோருக்கு ரூ.500 என்ற விகிதத்திலும் கூட்டுறவு நகர்புற வங்கிகளில் ஆயிரம் பெண் உற்பினர்களுக்கு ரூ.500 என்ற விகித்திலும் கூட்டுறவு வங்கிகளில் வழங்கப்படுகிறது.

பதினோாவது ஐந்தாண்டு திட்டத்தில் தொடக்க வேளாண்மை கூட்டுறவு வங்கிகள் விவசாயிகளுக்கு ஒருங்கிணைந்த சேவைகள் தொழில்நுட்பம் மற்றும் மேம்படுத்தப்பட்ட சாகுபடி முறைகள் வழங்குவதிலும் முக்கிய பங்கு வகிக்கிறது. தொடக்க வேளாண்மை கூட்டுறவு வங்கிகள் நெல் கொள்முதல் நிலையங்களாக தமிழ்நாடு நுகர்பொருள் வாணிப கழகத்திற்காக செயல்பட்டு நெல் கொள்முதலை குறைந்தபட்ச ஆதரவு விலையில் அரசு அறிவித்த தொகையில் டெல்டா இல்லாத பகுதிகளில் செயல்படுகிறது. இந்திய தேசிய வேளாண்மை கூட்டுறவு விற்பனை கூட்டமைப்பு ( NAFED) ஆகியவற்றின் மூலம் விவசாயப் பொருட்களை விவசாயிகளிடமிருந்து நேரடியாக கொள்முதல்

செய்கிறது. கூட்டுறவு வங்கி விலைபொருட்கள் மீது கடன் வழங்குவதை விவசாயிகளுக்கு அதிக அளவில் நஷ்டத்தை விளைச்சல் அதிகமாக இருக்கும் காலங்களில் தவிர்ப்பதற்காக பயிர்களின் எண்ணிக்கையை அதிகரித்துள்ளது.

## 11.6. உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

குறிப்பு

1. ஒருங்கிணைந்த கிராம வளர்ச்சியைப் பெற வேளாண்மை சிறுத்தொழில், குடிசைத்தொழில், கிராமத்தொழில், கைவினைப் பொருட்கள் மற்றும் கிராமத்திலுள்ள துணைத் தொழில்களும் தேவையான கடன் வசதியை அளிப்பது.

2. பொதுமக்களிடமிருந்து வைப்பு நிதிகளை ஈர்த்தல் மற்றும் பணம் தேவைப்படுவோருக்கு அவர்களின் பாதுகாப்புக்காக பத்திரங்களை வைத்துக் கொண்டு கடனளித்தல்

## 11.7 கிராமக் கடன்படுநிலை: (Rural Indebtedness)

கிராமக் கடன்படுநிலை பல்லாண்டுகளாக அவசரமான சிக்கல்களின் ஒன்றாக உள்ளது. விவசாயம் தொடர்பான ராயல் குழு கூறியிருப்பது போல,"இந்திய விவசாயி கடனில் பிறக்கிறார். கடனில் வாழ்கிறார். கடனுடன் இறக்கிறார். கடனையே விட்டுச் செல்கிறார்". கிராம மக்கள் வட்டிக்கடைக்காரரிடத்தில் பெரிதும் கடன்பட்டுள்ளனர். கடனின் பளு ஒரு சந்ததியிலிருந்து இன்னொரு சந்ததிக்கு செல்கிறது.

**கடன்படுநிலைக்கு காரணங்கள**; (Causes for Indebtedness)

விவசாயிகளின் தொடர்ச்சியான கடனுக்கு பல்வேறு காரணங்கள் உள்ளன.

**1. மூதாதையரது கடன்:**

கடனில் பெரும் பகுதி மரபுரிமை வழியாக பெறப்பட்டத. விவசாயி தனது தந்தையின் சொத்துக்களைப் பெறுகிறார். அதே போல அவரது கடனையும் பெறுகிறார். ஒவ்வொரு இந்திய விவசாயியும் மூதாதையரது கடனை அடைப்பது தன் கடமை என எண்ணுகிறார். எனவே அந்தப்பளுவினால் அவர் துயரமடைகிறார்.

**2. ஏழ்மை:**

கிராம கடன்படுநிலைக்கு முக்கிய காரணம் இந்திய விவசாயிகள் அதிர்ச்சியூட்டும் ஏழ்மை தான். முற்றிலும் ஏழையாக இருப்பதாலும் உதவியற்ற நிலையில் உள்ளதாலும் அவர் கடன் வாங்குகிறார். சேமிப்பு இல்லாத காரணத்தால் கடன் வாங்குவதைத் தவிர வேறு வழியில்லை. சேமிப்பு குறைவாக இருப்பதால் கடனைத் திரும்பச் செலுத்துதல் இயலாதிருக்கிறது. எனவே கடன் பளு தவிர்க்க இயலாததாக

ஆகிவிடுகிறது. கடன் வளர்கிறது. அத்துடன் அவரது துயரமும் வளர்கிறது.

**3. பருவநிலை பொய்ப்பது:**

இந்தியாவில் மழை அடிக்கடி பொய்த்து விடுகிறது. இதனால் பஞ்சம் ஏற்படுகிறது. பருவநிலை கோளாறு அடிக்கடி நிகழுகிறது. இதனால் விவசாயம் மிதமிஞ்சிய அளவு நிலையற்றதாகி விடுகிறது. வறட்சி, வெள்ளம்,ஆலங்கட்டி மழை, இடியுடனான புயல் முதலியன விவசாயத்தைப் பாதிக்கின்றன. இவை விவசாயிக்கு தாங்க முடியாத தன்பம் கொடுக்கின்றன.

குறிப்பு

**4. நிலத்தில் நெருக்கடி:**

கிராமப்புறங்களில் மக்கள் தொகை அதிகரிக்கிறது. ஆனால் நிலத்தின் அளிப்பு அளவானது. இதனால் தலா வருமானம் குறைந்து விட்டது. மிகக் குறைந்த வருமானம் போதுமானதாக இல்லை. எனவே விவசாயிகள் கடன் வாங்க வேண்டிய நிலைக்கு தள்ளப்பட்டனர்.

**5. நிலங்கள் உட்பரிவாக்கப்படுதலும், துண்டாடப்படுவதும்:**

கிராமப்புறங்களில் பெரும்பாலான மக்கள் நிலத்தையே பற்றிக் கொள்வதால் தனி மனிதருக்கான உடமை மிகவும் சிறியதாகி விடுகிறது. உட்பிரிவாக்கப்படுதலாலும், தூண்டாடப்படுவதாலும் நிலவுடைமைகள் மேலும் சிறிய துண்டுகளாக பிரிக்கப்படுகின்றன. இது பொருளாதார வீணடிப்பிற்கு கொண்டு செல்கிறது. அவரது வருமானம் குறைகிறது. தனது குடும்பத்தைக் காப்பாற்ற சிறிய பண்ணைகளிலிருந்து விவசாயிகளுக்கு கிடைக்கும் மிகக் குறைந்த வருமானமே கிராம கடன்படுநிலைக்கு அடிப்படைக் காரணமாகும்.

**6. விவசாயிகளது அறியாத தன்மை மற்றும் கல்வியறிவற்றநிலை:**

விவசாயிகளது அறியாமையால் குழந்தைகளை நிறைய பெற்றுக் கொள்கின்றனர். வாழ்வுக்குத் தேவையானவற்றை பெருக்கிக்கொள்ளாமல் மக்கள்தொகை அதிகமாகிக் கொண்டு வருகிறது. எனவே தனக்கும்தன் குடும்பத்திற்கும் குறைந்த அளவு வாழ்வுத் தேவையைப் பெற விவசாயி கடன் பெறுகிறார். அவரது வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்பது கல்வியறிவின்மையாகும். அவரது எளிய தோற்றத்தாலும் அறியாமையாலும புத்திக்கூர்மையுள்ள வட்டிக் கடைக்காரரின் பிடியில் அவர் அகப்பட்டு கொள்கிறார். இது பற்றி கீழ்க்கண்டவாறு கூறப்படுகிறது. “கடன் வாங்குவதற்கு வட்டிக் கடைக்காரர் தூண்டுகிறார். வழக்கறிஞரோ சண்டை போடச் சொல்கிறார், வணிகரோ வீணடிக்க கூறுகிறார்”.

குறிப்பு

.

**7. நீதிமன்ற வழக்குகள்:**

இந்திய விவசாயிகளுக்கு நீதிமன்றங்களில் வழக்குகளில் ஈடுபட ஆர்வம் உண்டு. அந்த வழக்குகள் நீண்ட நாட்களுக்கு நடைபெறுகின்றன. அவை அதிக செலவு பிடிக்கக்கூடியவை. எல்லைக்கோட்டுத் தகராறுகள் அல்லது சிறிய காரியத்திற்கான சண்டைகளால் அவர்கள் நீதிமன்றத்திற்கு செல்கின்றனர்.

அவர்கள் நீதிமன்றச் செலவிற்கு கடன் வாங்குகின்றனர். அதனால் அவர்களது கடன் அடுக்கடுக்காக வளர்கிறது.

**8. உற்பத்திக்குப் பயன்படாத மற்றும் ஊதாரித்தனமான செலவுகள்:**

இந்திய விவசாயிகளது வருமானம் குறைவு. அவர்கள் தங்கள் குடும்பங்களில் நிகழும் பிறப்பு, திருமணம் முதலியவற்றிற்கு அதிகம் செலவிடுகின்றனர். அவர்கள் மத நம்பிக்கையில் ஆழமாக உள்ளனர். எனவே இது எல்லையற்ற செலவுக்கு வழி வகுக்கிறது.

**9. இறுக்கமான நில வருவாய்முறை:**

இறுக்கமான நில வருவாய் மதிப்பீடு மற்றும் வசூலிப்பு முதலியன கிராமக்கடன் அதிகரிப்புக்கு காரணங்களாகும்.

**கடன்படு நிலையின் தீமைகள்** (Evils of Indebtedness)

கிராமக்கடன்படு நிலையின் விளைவுகள் மிகவும் மோசமானவை.

1. கடன்படுநிலை குறைந்த வாழ்க்கைத் தரத்திற்கும் குறைந்த வருமானத்திற்கும் கொண்டு செல்கிறது. குறைந்த வருமானமும் வறுமையும் விவசாயிகளை உள்ளத்தாலும், உடலாலும் பாதிக்கிறது. இது சமுதாயத்தை வீழ்ச்சியுறச் செய்கிறது.

2. விவசாயப்பொருட்களை இலாபகரமாகவும் முறையாகவும் விற்பதை கடன் பாதிக்கிறது. வட்டிக்கடைக்காரரிடம் விவசாயி கடன்பட்டிருப்பதால் தனது பொருளை ஏற்கனவே ஒப்புக்கொண்ட விலையில் போட்டியில்லாத சந்தையில் விற்க வேண்டி வருகிறது.

3. பழைய கடனை அடைக்கவோ மூலதன முன்னேற்றத்திற்கோ விவசாயி பேரளவுத் தொகையை கடன் வாங்குகிறார். விவசாயி குறுகிய காலத்தில் வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்தி விடுவதாக ஒப்புக்கொண்டு கடன் வாங்குகிறார். எனவே விவசாய உற்பத்திக்குப் பயன்படாமல் விவசாயியின் வருமானம் கடனை செலுத்தவே பயன்படுகிறது.

4. கடன்படுநிலையால் சொத்து நட்டமாகிறது. அதோடு நிலம் இது நாட்டின் எதிர்காலத்திற்கு இடர்மிக்க பொருளாதார, சமூக விளைவுகளை உண்டாக்குகிறது.

5. வட்டிகக்கடன் கொடுப்பவர் செல்வாக்குள்ள நிலச்சுவான்தாரராக இருந்தால் கடன்படுநிலையால் கடன் பெறுபவர் அடிமை வேலைக்கு உள்ளாகிறார். வட்டிக்கடைகாரருக்கு கடன்பெறுபவர் இலவசப் பணி செய்ய வேண்டி வருகிறது. சில நேரங்களில் அவரது மனைவியும் குழந்தைகளும் கொஞ்ச சம்பளத்திற்கு வேலை செய்ய வேண்டி வருகிறது.

**கடன் நிவாரணநடவடிக்கைகள்- அரசின் பங்கு**

## (Role of State in Debt Relief Measures)

### 1. நிவாரண நடவடிக்கைகள் : (Measures of Relief)

கிராமக்க கடன்படுநிலையின் தீங்குகளால், நிவாரண நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. தக்காண விவசாய நிவாரணச் சட்டம் 1879 தான் முதல் நடவடிக்கை ஆகும். இதன்படி விவசாயியின் கருவிகள், கால்நடைகள் முதலியவற்றை கடனுக்காக கைப்பற்றக் கூடாது. அவரை கைது செய்யக்கூடாது. மேலும் அவர் தவணைகளில் பணம் செலுத்தலாம்.

வட்டிக்குக் கடன் கொடுக்கும் சட்டம் 1918ன் படியும் அதன்பின் 1925, 1946ல் கொண்டு வரப்பட்ட திருத்தங்கள் மூலம் விவசாயியிடமிருந்து நியாயமான வட்டியே வாங்க வேண்டும். ஆனால் இந்தச் சட்டம் செயல்படவில்லை. காரணம் விவசாயிக்கு குறைந்த வட்டியில் கடன் கொடுக்க எந்த நிறுவனமும் ஏற்படுத்தப்படவில்லை.

உலகப் பெருமந்தத் காலத்தில் விவசாயியின் கடன்பளு அதிகமாகியது. அதனால் மாநில அரசுகள் வட்டிக்கடைக்காரர்கள் கடன் பாக்கி வழக்குகளை நீதிமன்றத்திற்கு எடுத்துச் செல்வதற்கு தடை விதித்தன. அதோடு இரண்டுவித நடவடிக்கைகளை மாநில அரசுகள் எடுத்தன. ஒன்று இணைக்கப்படுதல் மூலம் அல்லது மன வேற்றுமை நீக்கப்படுதல் மூலம் கடனைக்குறைத்தல். கடனைத் திருப்பிச் செலுத்தாதபோது சொத்துக்களைக் கைப்பற்றுவதற்கு எதிராக சில தடைகள் விதிக்கப்பட்டன.

அ) **கடனைத் திருப்பிச் செலுத்துவதை தள்ளிப்போடுவது (Moratorium)**

கடனை மீட்க நீதிமன்றங்களில் நடவடிக்கை நடத்துவதை இது தடை செய்கிறது. இது கடன் கொடுத்தவர்கள் நீதிமன்ற ஆணைகளை கடன்பெற்ற விவசாயகளுக்கு எதிராக பயன்படுத்துவதை தடை செய்கிறது. அதோடு நீதிமன்றத்திற்கு கடனுக்காக விரைந்து செல்வதையும் தடைசெய்கிறது. நிலத்தை விற்க ஏற்கனவே பெறப்பட்ட ஆணைகளை நல்லவிலை வரும் வரை செயல்படுத்தாமல் இருக்க நிறுத்தி வைக்க ஏற்பாடு செய்யப்பட்டது. கடன் பெற்றவர் தவணைகளில் செலுத்த வாய்ப்பு அளிக்கப்பட்டது.

**ஆ)கடனைப் பேசித் தீர்க்கும் முறை (Conciliation of Debts):**

கடனைப் பேசித் தீர்க்கும் அல்லது இணைக்கப்படுதல் சட்டங்களின் மூலம், கடன்களைக் குறைக்கவும் அவற்றை தவணைகளாக செலுத்தவும் கடன் இணைக்குழுக்கள் (Debt Conciliation Boards) ஏற்படுத்தப்பட்டன.

.

**இ) கடனை கட்டாயமாக குறைத்தல்:**

கடன் நிவாரணச் சட்டங்கள் கடனாளிகளுக்கு கூடுதல் நிவாரணம் அளிக்க இயற்றப்பட்டன. அவற்றின் முக்கிய நோக்கங்கள்: i)முன்னர் பெறப்பட்ட கடனைவிட இரண்டு மடங்குக்கு மேல் போகாமல் வரவேண்டிய கடனைக் குறைத்தல் ii)மந்த காலத்திற்குரிய வட்டியின் பாக்கித் தொகையை குறைத்தல் iii) பின்னருள்ள காலத்திற்கு வட்டி வீதத்தை நிர்ணயித்தல்.

**2. வட்டிக்குக் கடன் கொடுப்பவரது நடவடிக்கைகளை ஒழுங்குப்படுத்துதல் (Regulation of Moneylender's Activities)**

1930ல் கணக்குகளை ஒழுங்குப்படுத்தும் சட்டங்களை பஞ்சாப் அரசு நிறைவேற்றியது. பின்னர் மற்ற அரசுகளும் இத்தகைய சட்டங்களை நிறைவேற்றின. இச்சட்டங்கள் கடன் பெற்றவர்களை கடன் கொடுத்தவர்கள் கணக்குகளைத் திறமையாக (தில்லுமுல்லாக) கையாண்டு ஏமாற்றமல் இருக்கச் சட்டத்தில் குறிப்பிடப்பட்ட படிவத்தை கையாள வேண்டும் என குறிப்பிடப்பட்டன. மேலும் விதிக்கப்படும் வட்டி வீதம் தனியாக குறிப்பிடப்பட வேண்டும் எனவும் குறிப்பிட்டது.

1937ல் மாநில சுயாட்சி பெற்றபின், வட்டிக்கடைக்காரர் பற்றிய பஞ்சாப் பதிவுச் சட்டம் 1938லும், அதே ஆண்டு வங்காளச் சட்டமும்,

பீகார் சட்டமும் நிறைவேற்றப்பட்டன. இச்சட்டங்களை பதிவு செய்தல், அனுமதி பெறுதல், வட்டிக் கடைக்காரரை ஒழுங்குப்படுத்துதல் ஆகிவற்றுக்காக நிறைவேற்றப்பட்டன.

குறிப்பு

இச்சட்டங்கள் கீழ்க்கண்டவற்றை குறிப்பிட்டன: i)இச்சட்டங்கள் வட்டிக்குக் கடன் கொடுப்பவர் பற்றிய பதிவாளரிடம் வட்டிக்கடைக்காரர்கள் கட்டாயமாகப் பதிவு செய்ய வேண்டும் எனவும், அவர்களது நடவடிக்கைகளை மேற்கொள்ள அனுமதி பெற வேண்டும் எனவும் குறிப்பிட்டன.

ii) இந்த அனுமதிகளை ஆண்டுக்கொரு முறை புதுப்பிக்க வேண்டும்.

iii)அனுமதி பெற்ற வட்டிக்கடைக்காரரே கடனை மீட்கவோ பாக்கியை வசூலிக்கவோ நீதிமன்றங்களை அணுக முடியும்

iv) வட்டிக்காரர்கள் கணக்குகளை குறிப்பிட்ட படிவத்தில் வைத்திருக்க வேண்டும். கணக்குகளை அவ்வப்போது கடனாளிகளுக்கு தெரிவிக்க வேண்டும்.

v) கடன் பெற்றவர் செலுத்திய எல்லாத் தொகைக்கும் வட்டிக்கு கடன் கொடுப்பவர் சரியான ரசீது கொடுக்க வேண்டும்.

vi)இச்சட்டங்கள் உச்ச அளவு வட்டி வீதங்களை நீர்ணயம் செய்தது. எனை) இச்சட்டத்தில் குறிப்பிடப்பட்ட சரத்துக்களை மீறினால் வட்டிக்குக் கடன் கொடுப்பவரது அனுமதி ரத்து செய்யப்படும். சில சட்டங்கள் அனுமதி பெறாது வட்டிக்கு கடன் கொடுப்பவரது அனுமதி ரத்து செய்யப்படும். சில சட்டங்கள் அனுமதி பெறாது வட்டிக்கு கடன் கொடுப்பதை குற்றம் என கருதின.

### 3. அதிக வட்டி ∴அநியாய வட்டி (தனி வட்டி) விதிப்பதை கட்டுப்பாடு செய்யும் சட்டங்கள் (Laws for checking Usurious Interest)

வட்டிக்கடைக்காரர் கடனுக்கு அதிக வட்டி விதிப்பதை தடை செய்யும் சட்டம் 1918ல் கொண்டு வரப்பட்டு, பின்னர் 1925, 1946ல் திருத்தம் செய்யப்பட்டது. இச்சட்டப்படி 12 வருடத்திற்கு முன்னர் உள்ள கடன் வழக்குகள் வரை நீதிமன்றங்கள் ஒவ்வொன்றாக ஆராயலாம். குறிப்பிடப்பட்ட வட்டி அதிகமாக இருக்குமானால் கடன் பெற்றவருக்கு நிவாரணம் அளிக்கலாம்.

1930ல் பஞ்சாப் கணக்கு ஒழுங்குமுறைச் சட்டம் கொண்டு வரப்பட்டது. இது எல்லா வட்டிக்குக்கடன் கொடுப்போரையும் கடன்

வாங்கும் எல்லா நபருக்கும் தனித்தனி கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும் என குறிப்பிடப்பட்டது. வட்டி தனியாக காட்டப்பட வேண்டும். வட்டியை அசலோடு சேர்க்கக்கூடாது என்றது. மற்ற மாநிலங்களிலும் அதிக வட்டியைத் தடை செய்யும் சட்டம் கொண்டு, வரப்பட்டு வட்டிக்கு கடன் கொடுப்போரது நடவடிக்கைகள் ஒழுங்குப்படுத்தின.

குறிப்பு

கடன் பெற வேறு மாற்றுவழி இல்லாததால் வட்டிக்குக் கடன் அளிப்போர் மீது கொண்டு வரப்பட்ட கட்டுப்பாடுகள் தாளிலேயே இருந்தன. அதிக வட்டியே பெறப்பட்டது. சட்டங்கள் சரிவர நிறைவேற்றப்படாததால் ஒழுங்கு முறைகளை வட்டிக்குக்கடன் கொடுப்போர் மீற வாய்ப்பிலிருந்தது. கடன் கொடுப்பதை மேற்பார்வை செய்ய முடியவில்லை. எனவே சட்ட நடவடிக்கைகள் வெற்றியடையவில்லை. கிராமக்கடன் ஆய்வு கமிட்டி (Rural CrditSurvey Committee) குறிப்பிட்டது போல நாடு முழுவதும் வட்டிக்கடைக்காரர் மீது கொண்டு வரப்பட்ட கட்டுப்பாடுகள் மீறப்பட்டன. வட்டிக்காரர்கள் உபயோகித்த தப்பிக்கும் வழிகள் வருமாறு:

அ) கடன் கொடுக்கப்பட்டதற்கு மிக அதிகமான அசலுக்கு புரோநோட்டு எழுதி வாங்குதல்.

ஆ) சட்டப்படி இல்லாத வீதத்தில் வட்டி கணக்கிடப்பட்டு கடன் கொடுக்கப்பட்ட பணத்திலிருந்து கழிக்கப்படும்.

இ) முக்கிய புரோட்நோட் தவிர இன்னொரு புரோநோட் பணியாளர் பெயரில் தயாரிப்பது (கூடுதல் வட்டியைப் பெற)

ஈ) கடன்பட்டவரிடமிருந்து முன்னரே பொருளை வாங்குதல்: அதற்கான தஸ்தாவேஜீகளை தயாரித்தல்.

உ) கடன் பெறுபவரது நிலத்தையோ கால்நடைகளையோ அடமானமாக எழுதி வாங்குதல்.

இவ்வாறு வட்டிக்கு கடன் கொடுப்பவர் சட்டங்களின் எல்லாச் சரத்துக்களையும் மீறிவிட்டனர். ஆனால் வணிக வங்கிகள் தேசீயமயம் ஆக்கப்பட்ட பின்னர், வட்டிக்குக் கடன் கொடுப்பவரது பங்கு கிராமப் பொருளாதாரத்தில் குறைந்துள்ளது. ஏராளமான சட்டங்கள் கொண்டு வரப்பட்டு வட்டிக்குக் கடன் கொடுப்பதைப் பற்றி நம்பிக்கை குறையச் செய்துள்ளது. கடனைத் திரும்பப் பெறுவதும் கடினமாக உள்ளது. கூட்டுறவுச் சட்டங்கள், வணிக வங்கிகள், மண்டல கிராம வங்கிகள் முதலியன கிராமப்புற பகுதிகளில் தீவரமாக போட்டியிட

ஆரம்பித்துள்ளன. கிராமங்களில் கல்வியறிவும் விழிப்புணர்வும் ஏற்பட்டுள்ளது. பழைய நட்பும், கிராம உறுதித்தன்மையும் இப்பொழுது கிராமங்களிலேயே வேறு லாபகரமான முதலீட்டு வாய்ப்புக்கள் இருப்பதால் அவற்றில் ஈடுபட கடன் கொடுப்போர் விரும்புகிறன்றனர்.

**குறிப்பு**

### 20 அம்ச திட்டமும் கடன் நிவாணமும் (Debt Relief under 20 point Economic Programme)

திருமதி இந்திராகாந்தி 1975ல் 20 அம்ச திட்டத்தை வெளியிட்டார். இதன்படி கிராமக் கடன்களை பெறுவது தள்ளி வைக்கப்பட வேண்டும். ஏழைகள் கடன்களை செலுத்த வகை செய்ய வேண்டும். கிராமக் கடன்படுநிலை படிப்படியாக நீக்கப்பட வேண்டும். முதன்முதலாக, இத்திட்டத்தில் நிலமற்ற விவசாயிகள் மற்றும் கிராமக் கைவினைஞரது ஆண்டு வருமானம் ரூ.2400ஐ தாண்டாமல் இருந்தால் கடன்படு நிலையிலிருந்து மொத்த நிவாரணம் அளிக்கப்பட வேண்டும். இதே மாதிரிச் சலுகை பாசன வசதியற்ற, 1 ஏக்க வரை நிலம் வைத்துள்ள சிறு விவசாயிகளுக்கும் அளிக்கப்படும். இவர்களது கடன் வட்டியோடு, முழுவதும் நீக்கப்படுவதாக கருதப்படும். பாசன வசதியற்ற 2 ஏக்கர் வரை நிலம் உள்ளவர்களது கடன் குறைக்கப்படும். இதில் உற்பத்தியில் நுகர்வுக்கும், பண்ணை முதலீட்டுக்கும் உள்ளதை கழித்து மீதியில் குறைக்கப்பட கடன் கணக்கிடப்படும். இதை ஏழு வருடங்கள் வரை திருப்பிச் செலுத்தலாம்.

### விவசாய மற்றும் கிராம கடன் நிவாரணத் திட்டம் 1990:

இத்திட்டத்தை 1990- 91ல் அன்றைய நிதியமைச்சர் மது தண்டவதே கொண்டு வந்தார். அது “கடனை விட்டுக் கொடுக்கும் திட்டம்” (Loan Waiver Scheme) என அழைக்கப்பட்டது. பொதுத்துறை வங்கிகளிலோ மண்டல கிராம வங்கிகளோ கடன் வாங்கியவருக்கு ரூ.10,000 வரை கடன் நிவாரணம் இத்திட்டம் மூலம் அளிக்கப்பட்டது. இதே மாதிரி கூட்டுறவுக் கடன்களையும் மாநில அரசுகள் விட்டுக்கொடுத்துள்ளன. இத்தகைய முறையில் கடனைத் தள்ளுபடி செய்வதை பொருளாதார அடிப்படையில் நியாயப்படுத்த முடியாது. காரணம் அது நேர்மையான முறையில் கடனைத் திருப்பிக்கொடுப்பவரது ஒழுக்கத்தைச் சிதைக்கிறது.

# அலகு -12 விவசாயத் தொழிலாளர்கள் அல்லது விவசாயத்தில் உழைப்பு

குறிப்பு



## 12.1 நோக்கங்கள்

1. விவசாய தொழிலாளர்களின் சிறப்பியல்புகள்பற்றி அறியவும்.
2. விவசாய தொழிலாளர் மற்றும் ஊதியங்களைபற்றி தெரிந்து கொள்ள.

## 12.2 பொருள் - விவசாய தொழிலாளர்

உற்பத்திக் காரணிகளில் உழைப்பும் ஒன்றாக இருக்கிறது. ஊதியத்திற்காகஎடுக்கும் மனித முயற்சிகள் அனைத்தும் உழைப் அது மூளை உழைப்பாளர்கள் வேறு பணி செய்யும் உழைப்பாளரிடமிருந்துவேறுபட்டு உள்ளன. ஆகவே வேளாண்மை உழைப்பாளர் பற்றி இலக்கணம் கூறுவதில் சிக்கள் உள்ளன. காரணம்வேளாண்மையில் வேலைநிலை தற்காலிகமாக உள்ளது மேலும் விவசாயத் தொழிலாளர் ஒரு பண்ணையிலிருந்து இன்னொன்றுக்கு மாறிக்கொண்டே இருக்கின்றனர்.

### இலக்கணம்

முதல் விவசாயத் தொழிலாளர் விசாரணைக்குழு 1950-51ல் வேளாண்மைத் தொழிலாளருக்கு கீழ்கண்டவாறு இலக்கணத்தை கூறியுள்ளது

நடந்துமுடிந்த ஓராண்டில் வேலை செய்த நாட்களில் 50 சதவிகித அளவு விவசாயக் கூலியாக விவசாய நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்த அனைவரும் வேளாண்மைத் தொழிலாளர் ஆவர்.

இரண்டாவது விவசயத் தொழிலாளர் விசாரணைக்குழு 1956-57ல் விவசாயத் தொழிலாளரை குறிப்பிட்டுச் சொல்ல வருமானத்தை அடிப்படையாகக் கொண்டது. முன்னைய ஆண்டில் ஒருவரது

வருமானத்தில் விவசாயக் கூலி அதிக அளவாக இருந்தால் அவரை விவசாயத் தொழிலாளர் என கருதலாம் என்று குறிப்பிட்டது

இந்த விசாரணைகளில் கீழ்கண்ட விவசாய நடவடிக்கைகளில் ஒன்றிலோ அதற்கு மேற்பட்டதிலோ பணம் பெற்றோ , பண்டம் பெற்றோ அல்லது இரண்டையும் பகுதியாகப் பெற்றோ ஈடுபட்டால் அவரை விவசாயத் தொழிலாளர் என குறிப்பிடலாம்

குறிப்பு

**அ) உழவுத் தொழில்**

**ஆ) பால்பண்ணை**

**இ) உற்பத்தி, பயிரிடுதல், பூச்செடி நட்டு, பூ பயிரிடுதல்**

**ஈ) கால்நடைகள், தேனீ வளர்த்தல், கோழி வளர்த்தல்**

**உ) மற்ற பண்ணை நடவடிக்கைகள் , பொருளை சேமித்து அங்காடிக்கு கொண்டு செல்லுதல்**

தொழிலாளர் நலம் பற்றிய குழு 1969ல் விவசாயத் தொழிலாளி பற்றி கீழ்க்கண்டவாறு இலக்கணம் கூறியது

“பண்ணை உழைப்பிலிருந்தோ மற்ற தொடர்புடைய நடவடிக்கைகளிலிருந்தோ கூலி வேலை மூலமே வருமானம் பெற்று வாழ்க்கை நடத்துபவரே விவசாயத் தொழிலாளர” என வரையறுக்கலாம்.

## விவசாய தொழிலாளார்களின் வகைகள்

வேளாண்மையின் இயல்பைப் பொறுத்து நம்நாட்டில் வேளாண்மையில் ஈடுபட்டிருப்பவர்களை அ ) நில உடமையாளர்கள்
ஆ ) குத்தகைதாரர்கள் இ ) விவசாய உழைப்பாளர்கள் என்று மூன்று பிரிவுகளுக்குள் கொண்டு வந்துள்ளனர்.

ஆனால் இது திட்டவட்டமாக அமையவில்லை என கருத்தப்பட்டது. காரணம் சிறிய விவசாயிகளும், நிலத்தை குத்தகைக்கு எடுத்துச் சாகுபடி செய்பவர்களும் விவசாய உழைப்பாளர்களாக இருக்கின்றனர்.

காங்கிரஸ் வேளாண்மைச் சீர்த்திருத்தக்குழு விவசாய உழைப்பாளிகளை மூன்று வகையாக பிரித்தது

குறிப்பு

அ) உழவர்கள், அறுவடை செய்பவர்கள், களை எடுப்பவர்கள், நாற்று நடுபவர்கள் போன்றவர்களை " பண்ணை உழைப்பாளர்கள் " Field workers ) என்றும்.

ஆ) கரைபோடுதல், தோண்டுதல், குளங்களில் வண்டல் மண்ணைத் திரட்டுதல் போன்ற பணிகளை செய்பவர்களை சாதாரண உழைப்பாளர்கள் என்றும்

இ) கொத்தர், தச்சர், கொல்லர் போன்றோரை தொழில்நுட்பத் திறனுடைய உழைப்பாளர்கள் என்றும் பிரித்தது

**3. உழைப்புப் பற்றிய தேசிய வேளாண்மைக்குழு**

( National Commission of Labour )

வேளாண்மை உழைப்பாளர்களை இரண்டாகப் பிரித்தது

1) நிலமற்ற உழைப்பாளர்கள்

2) மிகச் சிறிய விவசாயிகள்

**1) நிலமற்ற உழைப்பாளர்கள் மேலும் இரண்டு பிரிவாக பிரிக்கப்படுகின்றனர்**

அ) விவசாய பண்ணைகளோடு இணைந்த நிரந்தர உழைப்பாளர்கள்

ஆ) தற்காலிக அல்லது கூலி உழைப்பாளர்கள் .

நிரந்தர உழைப்பாளர்கள் பொதுவாக ஆண்டு அடிப்படையிலோ , பருவகால அடிப்படையிலோ பணி செய்வார்கள். நிலவுடையாளர்களோடு அவர்களுக்குள்ள தொடர்பு ஒரு விதமான ஒப்பந்த அடிப்படையில் அமையும். அவர்களது கூலி மரபின் அடிப்படையில் தீர்மானிக்கப்படும் மாறாக தற்காலிக தொழிலாளர்கள் அதிக வேலைக் காலத்தில் மட்டும் வேலைக்கு அமர்த்தப்படுவர்.எடுத்துக்காட்டாக விதைக்கப்படும்பொழுதும் அறுவடை காலத்திலும் அவர்களது வேலை தற்காலிகமாக அமையும் . அவர்களுக்கு சந்தை விகிதத்தில் கூலி கொடுக்கப்படும் சுருங்கச் சொன்னால் அவர்கள் எந்த நிலத்தோடும் இணைக்கப்பட்டவரல்லர்.

**2 சிறிய விவசாயிகள் மூன்று பிரிவுகளாக பிரிக்கப்படுகின்றனர்**

அ) சிறிய நிலம் வைத்திருப்பவர்களும் விவசாயக் கூலிகளாக வேலை செய்பவருமான சிறிய விவசாயிகள்

ஆ) தங்கள் வேலைக்கு மற்றவர் நிலத்தின் விளைச்சலில் ஒரு பகுதியை கூலியாகப் பெறுகின்ற பங்குதாரர்கள

இ) மற்றவர்கள் நிலத்தை குத்தகைக்கு எடுத்து பணி செய்வதோடு விவசாயக் கூலிகளாக இருப்பவர்கள்.

## 12.3. விவசாய தொழிலாளர்களின் சிறப்பியல்புகள்

( Characteristics of Agricultural Labour )

குறிப்பு

விவசாயத் தொழிலாளர்க்கு சில தனிப்பட்ட இயல்புகள் உள்ளன. அதனால் அவர்கள் தொழில்களில் பணிபுரிவோரை ஒப்பிடுகையில் வேறுபட்டு அமைந்துள்ளனர்

### 1. அமைப்பற்றவர்கள் ( Unroganised )

விவசாயத் தொழிலாளர் அமைப்பற்றவர். தொழில் நிறுவனங்களில் இருப்பது போல, விவசாயத் தொழிலாளர் ஒத்திசைவோடு வேலை செய்யத் தேவையில்லை. விவசாயத் தொழிலாளர் ஒருவரோடொருவர் தொடர்பு இல்லாததால் கருத்துள்ள அமைப்பினை வளர்க்க இயலவில்லை

### 2 தொழில் திறனற்றவர் ( Unskilled )

விவசாயத் தொழிலாளர் அடிப்படையில் தொழில் திறனற்றவர். உழவுத் தொழிலில் அவர்கள் திறன் படைத்தவரல்ல . எனவே அவர்களது அளிப்பு நிறைவான நெகிழ்ச்சியுடையது. அவர்கள் சம்பாதிப்பது மாற்று வருமானம் போலத்தான் . இதனால் முதலாளி பெரும்பாலும் அங்காடியில் நிலவும் கூலியைவிட குறைவாக கொடுத்து தன்னுடைய தனிப்பட்ட இலாபத்தை பெருக்கிக் கொள்கிறார்.

### 3. இடம்விட்டு இடம் மாறுபவர் ( Migratory )

விவசாயத் தொழிலாளர் இடம்விட்டு இடம் மாறும் இயபுடையவர் விவசாயம் சுறுசுறுப்பாக உள்ள பருவகாலத்தில் தொழிலாளர்கள் தூரத்திலிருந்து கூட வேலை நடைபெறும் இடத்திற்கு மாறிச் செல்கின்றனர்.

### 4. முதலாளி பெரும் வசதி படைத்தவராக இல்லாது இருத்தல்

விவசாயத் தொழிலாளரை வேலைக்கு அமர்த்தும் முதலாளி கூட பெரும் வசதி படைத்தவராக இல்லாதிருக்கலாம் . இந்நிலையில் ஒரு சிறு விவசாயி இன்னொரு சிறு விவசாயியை வேலைக்கு அமர்த்தலாம்.

எனவே முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையே நேரடித் தொடர்பு இருத்தல் விவசாயத் தொழிலாளர் பற்றி தெளிவாகத் தெரிகிற இயல்பாக உள்ளது.

5. **விதிக்கு உட்படாமை**

குறிப்பு

விவசாயத் தொழிலாளி எந்தவித விதிமுறைக்கும் ஒழுங்கிற்கும் கட்டுபடவில்லை, விதி பெரும்பாலும் மீறப்படுகிறதே தவிர பின்பற்றப்படவில்லை

இவ்வாறு விவசாயத் தொழிலாளி தொழில்களில் வேலை செய்யும் தொழிலாளரை விட மிகவும் மாறுபட்டு உள்ளார். அவர் அமைப்பற்றவராக உள்ளார். அவரது பேசும் சக்தி மிகக் குறைவு பொதுவாக தேவையை விட அவர்களின் அளிப்பு அதிகமாக உள்ளது. விவசாயத் தொழிலாளர் பொதுவாக ஒடுக்கப்பட்ட வகுப்பினராக உள்ளனர்.

**இந்தியாவில்விவசாயத் தொழிலாளர் வளர்ச்சி**

இந்திய அரசு நான்கு விசாரணைகளை விவசாயத் தொழிலாளர் தொடர்பாக நடத்தியுள்ளது. முதல் இரண்டும் வேளாண்மைத் தொழிலாளர் விசாரனை ( Agricultural Labour Enquiry ) என அழைக்கப்பட்டது. அவை முறையே 1950 - 51லும் 1956 - 57லும் நடத்தப்பட்டன. பின்னர் 1964 - 65லும் 1974 - 75லும் கிராமத் தொழிலாளர் விசாரணை ( Rural Labour Enquiry) நடத்தப்பட்டது. இவற்றின்படி 1964 - 65லும் 1974-75லும் கிராமத் தொழிலாளர் விசாரணை ( Rural Labour Enquiry ) நடத்தப்பட்டது.

இவற்றின்படி 1964 -65ல் இருந்ததைக் காட்டிலும்1974-75 விவசாயத் தொழிலாளர் குடும்பங்களின் எண்ணிக்கை 5.4 மில்லியன் அதிகரித்தது. அதாவது நாட்டில் கிராமத் தொழிலாளர் குடும்பங்களில் விவசாயத் தொழிலாளர் குடும்பங்கள் 80 சதவிகிதமாக இருந்தது. கிரமப்புறங்களில் பணிபுரிவோரின் அமைப்பைப் பார்த்தால் நிலமற்ற தொழிலாளரின் சதவிகிதம் 1971ல் 9.6 ஆக இருந்தது. இது 1982ல் 11.3 சதவிகிதமாக ஆகியது. தற்காலிகத் தொழிலாளரை ஒப்புநோக்குகையில் சுயவேலைவாய்ப்பில் ஈடுப்படிருப்போர் எண்ணிக்கை குறைந்து கொண்டே வந்துள்ளது. கிராமத்திலிருந்து வேலையாட்கள் நகரத்திற்கு மாறிச் சென்றதோடு, கிராமப் பகுதிக்குள் விவசாயத்திலிருந்து விவசாயம் அல்லாத நடவடிக்கைகளுக்கு தொழிலாளர் மாறிச் சென்றனர். அண்மைக் காலத்தில் நடத்தப்பட்ட ஆய்வுகள் தமிழ்நாடு , உ.பி , பஞ்சாப் ,

ஹரியானா , ராஜஸ்தான், ம.பி போன்ற மாநிலங்களில் தொழில்நுட்ப மாறுதல்களால் விவசாயத் தொழிலாளர் வேலை இழந்தனர் என குறிப்பிட்டன.

விவசாயத் தொழிலாளர் குடும்பங்களில் 70 சதவிகிதத்தினர் மாதம் ஒன்றுக்கு ரூ. 100க்கு குறைவான செலவு செய்கின்றனர். பெரும்பாலான விவசாயத் தொழிலாளர் குடும்பங்கள் ஏழ்மைக் கோட்டிற்கு கீழே தான் உள்ளன. 1991ம் ஆண்டில் கிராமத் தொழிலாளர் பற்றிய தேசியக்குழு பசுமைப் புரட்சியில் விவசாயத் தொழிலாளர் பெரும் பங்காற்றினாலும் அதன் பலனில் அவர்களுக்கு அதிகம் கிடைக்கவில்லை என குறிப்பிட்டது. 1991ம் ஆண்டின் தேசீயக் குழுவின் ( The National Commission on Rural Labour ) குறிப்புப்படி 1970களில் இருந்ததை விட 1980களில் விவசாயத் தொழிலாளரின் உண்மைக் கூலி பொதுவாக அதிகரித்தது மாநில அளவிலான உண்மைக் கூலி வேறுபாடுகள் குறைந்தன விவசாயக் கூலியில் ஆண் - பெண் வேறுபாடு குறைந்தது. மேலும் அவர்களது உரிமை பற்றி கிராம அளவில் விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது அரசியல் கட்சிகள் குறைந்தபட்ச கூலியைச் செயல்படுத்த வலியுறுத்தின.

## விவசாயத் தொழிலாளரது சிக்கல்கள் அல்லது குறைவான பொருளாதார நிலை

## ( Problems of Agricultural Labour or Poor Economic Condition )

### 1. தாழ்ந்த சமுதாய நிலை

பெரும்பாலான விவசாயத் தொழிலாளர்கள் பின் தங்கிய மற்றும் தாழ்த்தப்பட்ட , மலைவாழ் வகுப்பினர். அவர்களுக்கு சமுதாயத்தில் குறைவான அந்தஸ்தே உள்ளது. அவர்கள் ஆடு - மாடு போல் நடத்தப்படுகின்றனர்

### 2. அமைப்பற்றவராக இருத்தல்

விவசாயத் தொழிலாளர் தொழிற்சங்க அமைப்புகளை உருவாக்க முடியாது. அவர்கள் படிப்பறிவற்றவர் அறிவில்லாதவர். அவர்கள் 5.76 லட்சம் கிராமங்களில் பரவி விரவி உள்ளனர்

### 3. பகுதி நேர, பருவகால வேலை:

பல பகுதிகளில் விவசாயம் பருவகாலத் தொழிலாகவே உள்ளது. எனவே தொழிலாளருக்கு விவசாய காலத்தில் மட்டுமே வேலை கிடைக்கிறது.

பொதுவாக வருடத்தில் 197 நாட்களுக்கு மட்டுமே வேலை கிடைக்கிறது. பல வேளைகளில் போதிய வேலை கிடைக்கவில்லை எனவே அவர்களது வருமானமும் வாழ்க்கைத் தரமும் மிகக் குறைவாக உள்ளது. அவர்களது உண்மை வருமானமும் குறைந்தே உள்ளது.

**4. கிராமக்கடன் படுநிலை:**

விவசாயக் கூலியாட்கள், ஏழைகளாக உள்ளனர். அவர்களிடம் சேமிப்பு இல்லை . அதனால் அவர்கள் வட்டிக்கு கடன் கொடுப்போரிடமும் பெரிய நிலச்சுவாந்தாரிடமும் விவசாயம் அல்ல நேரங்களில் கடன் பெறுகின்றனர். அதற்கு அதிக வட்டி செலுத்துகின்றனர். கடனைத் திரும்பச் செலுத்த முடியாத நிலை ஏற்பட்டு , பல வேளைகளில் விவசாயத் தொழிலாளர் அடிமைத் தொழிலாளி போல ஆகிவிடுகின்றனர்.

**அரசின் நடவடிக்கைகள் ( Govt. Measures )**

**1) அடிமைத் தொழிலாளி நிலையை நீக்குதல்**

1975ல் மைய அரசு ஒரு அவரச் சட்டத்தின் மூலம் அடிமைத் தொழிலாளி நிலையை நீக்கியது . இது பின்னர் மக்களவைச் சட்டம் மூலம் மாற்றியமைக்கப்பட்டது. இந்தியாவில் மொத்தம் 22.4 லட்சம் அடிமைத் தொழிலாளிகள் இருப்பதாக கணக்கிடப்பட்டுள்ளது. 10 மாநிலங்கள் மட்டுமே இதனை ஒப்புக்கொண்டு மறுசீரமைப்பு வேகமாக நடைபெறவில்லை. இது பற்றி 20 அம்சத் திட்டத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**2) குறைந்தபட்ச கூலி:**

மத்திய அரசு 1948ல் குறைந்தபட்ச கூலி சட்டதை கொண்டு வந்தது. அதன்படி மொத்தச் செலவையும் வாழ்க்கைத் தரத்தையும் அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு மாநிலமும் குறைந்தபட்ச கூலியை நிர்ணயிக்க வேண்டும். இருபது அம்ச திட்டத்தில் இக்கூலி மாற்றியமைக்கப்பட்டது. இக்கூலி அளவு நாள் ஒன்றுக்கு ரூ 3 லிருந்து ரூ 8 வரை இருந்தது. பல மாநிலங்களில் மத்திய அரசு நிர்ணயித்தைவிட உண்மையாக கொடுக்கப்பட்ட கூலி குறைவாக இருந்தது. காரணம் இக்கூலி அளவை மைய அரசு சரியாக நிர்ணயிக்கவில்லை˙ விவசாயத் தொழிலாளர் அமைப்பற்றவராக இருந்தனர் தொழிலாளர் உபரியாக இருந்தனர்.விவசாயத் தொழிலாளர் சமூக அந்தஸ்தில் குறைவானவராக இருந்தனர்.

குறிப்பு

**3.வேலை நேரத்தை ஒழுங்குபடுத்தல் :**

நிலச்சீர்திருத்தக் குழு விவசாயத் தொழிலாளரது வேலை நேரம் பற்றி கீழ்கண்ட கருத்துரைகளை வழங்கியது. அவை

1) பெண்களுக்கு 10 மணி நேரமும் ஆண்களுக்கு 12 மணி நேரமும் மிகாமல் வேலை நேரம் இருக்க வேண்டும் .

2) 8 மணி நேரத்திற்கு மேல் பணிக்கு , குழந்தைகளும் இரவு நேரங்களில் பணியில் அமர்த்தப்படக் கூடாது

3) தொழிலாளர் வருகைப் பதிவேடும் கூலிப் பதிவேடும் முதலாளியால் பாரமரிக்கப்பட வேண்டும்

**4. நிலச் சீர்திருத்தங்கள்**

குறு விவசாயிகள், சிறு விவசாயிகள் மற்றும் நிலம்ற்ற விவசாயத் தொழிலாளர்க்கு உதவ அரசு பல்வேறு நிலச்சீர்திருத்தங்களை கொண்டு வந்தது. பல மாநிலங்கள் ஒருவர் எவ்வளவு நிலம் வைத்திருக்கலாம் என்பதைக் குறித்த நில உச்சவரம்பு சட்டத்தை நிறைவேற்றியுள்ளன. உபரி நிலங்கள் அரசால் பெறப்பட்டு பகிர்ந்தளிக்கப்படுள்ளன. குத்தகைக்கு சீர்திருத்தங்களும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**5) குறு விவசாயிகள் மற்றும் விவசாயத் தொழிலாளர் திட்டம்**

இந்திய அரசு 1969ல் குறுவிவசாயிகள் மற்றும் விவசாயத் தொழிலாளர் திட்டத்தையும் அறிமுகப்படுத்தியது. இத்திட்டங்கள் விவசாயிகளுக்கு துணை வேளைவாய்ப்புக்கான பால்பண்ணை ஆடு வளர்த்தல், கோழிவளர்த்தல் மற்றும் சாலைகள் அமைத்தல் முதலியவற்றை ஏற்படுத்தித் தந்தன. முதலை முதலீடு செய்தால் குறு மற்றும் விவசாயாத் தொழிலாளர் வளர்ச்சி அமைப்புக்கள் 33 1.˙.3 சதவிகித மானியம் அளித்தன. இத்திட்டங்கள் விவசாய நடவடிக்கைகள் இல்லாத நேரங்களில் விவசாயத் தொழிலாளரது வருமானத்தை அதிகப்படுத்தின.

**6) தொழிலாளர் கூட்டுறவுகள்**

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் விவசாயத் தொழிலாளரை அங்கத்தினராக கொண்டு தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அத்தகைய சங்கங்கள் , சாலைகள் அமைத்தல் , கால்வாய்கள் வெட்டுதல் போன்ற அரசு ஒப்பந்தங்களை எடுத்துக்கொண்டு பணியாற்றின. இதனால் இடைத்தரகர்கள் மற்றும் ஒப்பந்தகாரர்கள்

குறிப்பு

தவிர்க்கப்பட்டனர். ஒரு பாவமும் அறியாத விவசாயத் தொழிலாளர்கள் சுரண்டலிலிருந்து விடுபட்டார்கள்

**7) கிராமக் கடன்களை தீர்த்தல்**

ஏழைத் தொழிலாளர்கள் கடன் சுமையிலிருந்து விடுபட வேண்டும் என அரசு கருதியது. அதனால் தகுந்த நடவடிக்கை எடுத்து சிறு விவசாயிகள் வளர்ச்சி அமைப்பு ( SFDA ) விவசாயிகளுக்கு கடன் அளித்து உதவுகிறது.

**8) வேலை உறுதித் திட்டம்:**

மஹாராஷ்ராவில் வேலை உறுதித் திட்டத்தை அரசு அறிமுகப்படுத்தியது. அதன்படி வேலையற்ற விவசாயத் தொழிலாளரில் வேலை செய்ய தகுதியுடைய்வர்களுக்கு 5 கிலோ மீட்டருக்குள் வேலைவாய்ப்பு அளிக்கப்படும் . இதனை மற்ற மாநிலங்களும் பின் தொடர தொடங்கியுள்ளன

**9) 20 அம்ச திட்டம்**

இருபது அம்ச திட்டத்தை அரசு 1975ல் அறிவித்தது. அதில் விவசாயத் தொழிலாளருக்கு கீழ்கண்ட திட்டங்கள் அறிவிக்கப்பட்டன.

அ) அடிமைத் தொழிலாளர் நிலை அகற்றப்படுதல்

ஆ) கடன் வசூலிப்பு தள்ளிவைக்கப்படுதல்

இ) குறைந்தபட்ச கூலியை உயர்த்துதல்

ஈ) வீட்டு மனைகள் வங்குதல்உ) நில உச்சவரம்பு சட்டதை வேகமாக நிறைவேற்றி , உபரி நிலங்கலை சிறு விவசாயிகள் மற்றும் நிலமற்ற விவசாயத் தொழிலாளர்க்கு பகிர்ந்தளித்தல் . இவை தவிர 2001ல் விவசாயக் கூலிக் தொழிலாளர்க்கு(18 முதல் 60 வயது வரை உள்ளவர்) சமுதாயப் பாதுகாப்பு நன்மையும் அளிக்கப்பட்டு வரப்படுகிறது.

**இந்தியாவில் விவசாயத் தொழிலாளர் வளர்ச்சி**

இந்திய அரசு நான்கு விசாரணைகளை விவசாயத் தொழிலாளர் தொடர்பாக நடத்தியுள்ளது. முதல் இரண்டும் வேளாண்மைத் தொழிலாளர் விசாரனை ( Agricultural Labour Enquiry ) என அழைக்கப்பட்டது. அவை முறையே 1950 - 51லும் 1956 - 57லும் நடத்தப்பட்டன. பின்னர் 1964 - 65லும் 1974 - 75லும் கிராமத் தொழிலாளர் விசாரணை ( Rural

Labour Enquiry) நடத்தப்பட்டது. இவற்றின்படி 1964 - 65லும் 1974-75லும் கிராமத் தொழிலாளர் விசாரணை ( Rural Labour Enquiry ) நடத்தப்பட்டது.

இவற்றின்படி 1964 -65ல் இருந்ததைக் காட்டிலும்1974-75 விவசாயத் தொழிலாளர் குடும்பங்களின் எண்ணிக்கை 5.4 மில்லியன் அதிகரித்தது. அதாவது நாட்டில் கிராமத் தொழிலாளர் குடும்பங்களில் விவசாயத் தொழிலாளர் குடும்பங்கள் 80 சதவிகிதமாக இருந்தது. கிரமப்புறங்களில் பணிபுரிவோரின் அமைப்பைப் பார்த்தால் நிலமற்ற தொழிலாளரின் சதவிகிதம் 1971ல் 9.6 ஆக இருந்தது. இது 1982ல் 11.3 சதவிகிதமாக ஆகியது. தற்காலிகத் தொழிலாளரை ஒப்புநோக்குகையில் சுயவேலைவாய்ப்பில் ஈடுப்படிருப்போர் எண்ணிக்கை குறைந்து கொண்டே வந்துள்ளது. கிராமத்திலிருந்து வேலையாட்கள் நகரத்திற்கு மாறிச் சென்றதோடு, கிராமப் பகுதிக்குள் விவசாயத்திலிருந்து விவசாயம் அல்லாத நடவடிக்கைகளுக்கு தொழிலாளர் மாறிச் சென்றனர். அண்மைக் காலத்தில் நடத்தப்பட்ட ஆய்வுகள் தமிழ்நாடு , உ.பி , பஞ்சாப் , ஹரியானா , ராஜஸ்தான், ம.பி போன்ற மாநிலங்களில் தொழில்நுட்ப மாறுதல்களால் விவசாயத் தொழிலாளர் வேலை இழந்தனர் என குறிப்பிட்டன.

விவசாயத் தொழிலாளர் குடும்பங்களில் 70 சதவிகிதத்தினர் மாதம் ஒன்றுக்கு ரூ. 100க்கு குறைவான செலவு செய்கின்றனர். பெரும்பாலான விவசாயத் தொழிலாளர் குடும்பங்கள் ஏழ்மைக் கோட்டிற்கு கீழே தான் உள்ளன. 1991ம் ஆண்டில் கிராமத் தொழிலாளர் பற்றிய தேசியக்குழு பசுமைப் புரட்சியில் விவசாயத் தொழிலாளர் பெரும் பங்காற்றினாலும் அதன் பலனில் அவர்களுக்கு அதிகம் கிடைக்கவில்லை என குறிப்பிட்டது. 1991ம் ஆண்டின் தேசீயக் குழுவின் ( The National Commission on Rural Labour ) குறிப்புப்படி 1970களில் இருந்ததை விட 1980களில் விவசாயத் தொழிலாளரின் உண்மைக் கூலி பொதுவாக அதிகரித்தது மாநில அளவிலான உண்மைக் கூலி வேறுபாடுகள் குறைந்தன விவசாயக் கூலியில் ஆண் - பெண் வேறுபாடு குறைந்தது.

மேலும் அவர்களது உரிமை பற்றி கிராம அளவில் விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது அரசியல் கட்சிகள் குறைந்தபட்ச கூலியைச் செயல்படுத்த வலியுறுத்தின.

## 12.4. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. விவசாயத் தொழிலாளர் என்பவர் யார்?

## 2. விவசாய தொழிலாளர்களின் வகைகள் யாது?

## 12.5. விவசாய தொழிலாளர் மற்றும் ஊதியங்கள்

குறிப்பு

பெரும்பாலான விவசாயத் தொழிலாளர்கள் பின் தங்கிய மற்றும் தாழ்த்தப்பட்ட , மழைவாழ் வகுப்பினர். அவர்களுக்கு சமுதாயத்தில் குறைவான அந்தஸ்தே உள்ளது. அவர்கள் ஆடு - மாடு போல் நடத்தப்படுகின்றனர்

**அமைப்பற்றவராக இருத்தல்**

விவசாயத் தொழிலாளர் தொழிற்சங்க அமைப்புகளை உருவாக்க முடியாது. அவர்கள் படிப்பறிவற்றவர் அறிவில்லாதவர். அவர்கள் 5.76 லட்சம் கிராமங்களில் பரவி விரவி உள்ளனர்

**பகுதி நேர, பருவகால வேலை:**

பல பகுதிகளில் விவசாயம் பருவகாலத் தொழிலாகவே உள்ளது. எனவே தொழிலாளருக்கு விவசாய காலத்தில் மட்டுமே வேலை கிடைக்கிறது. பொதுவாக வருடத்தில் 197 நாட்களுக்கு மட்டுமே வேலை கிடைக்கிறது. பல வேளைகளில் போதிய வேலை கிடைக்கவில்லை எனவே அவர்களது வருமானமும் வாழ்க்கைத் தரமும் மிகக் குறைவாக உள்ளது. அவர்களது உண்மை வருமானமும் குறைந்தே உள்ளது.

**கிராமக்கடன் படுநிலை:**

விவசாயக் கூலியாட்கள், ஏழைகளாக உள்ளனர். அவர்களிடம் சேமிப்பு இல்லை . அதனால் அவர்கள் வட்டிக்கு கடன் கொடுப்போரிடமும் பெரிய நிலச்சுவாந்தாரிடமும் விவசாயம் அல்ல நேரங்களில் கடன் பெறுகின்றனர். அதற்கு அதிக வட்டி செலுத்துகின்றனர். கடனைத் திரும்பச் செலுத்த முடியாத நிலை ஏற்பட்டு , பல வேளைகளில் விவசாயத் தொழிலாளர் அடிமைத் தொழிலாளி போல ஆகிவிடுகின்றனர்.

**விவசாயாத் தொழிலாளர் மற்றும் ஊதியங்கள்**

சமீப காலமாக கூலி என்பது பெரும்பாலனவர்களுடைய கவனத்தை ஈர்த்துள்ளது. தொழிலாளிகளின் பக்கம் இருந்து பார்க்கும்பொழுது கூலி ஒரு வருமானமாகும். அதே சமயம் முதலாளியின் பக்கம் இருந்து பார்க்கும் பொழுது அது செலவாகும். முதலாளியின்

செலவைக் கணக்கிடுவதில் சம்பளம், கூலி இவற்றைத் தவிர வளர்ந்துவரும் நடைமுறையாகிய சம்பளத்துடன் கூடிய விடுமுறைகள், சமூகப் பாதுகாப்பு மற்றும் பிற வசதிகள் மற்றும் சம்பளம் எல்லாவகையான கடன்கள், பொருளாகக் கொடுக்கப்படும் நன்மைகளின் பணமதிப்பு, முதுமைக்கால நன்மைகள், பேறுகால நன்மைகள், விபத்துக் காலங்களுக்கு நஷ்ட ஈடு, மாநில தொழிலாளர் காப்பீடு போன்ற சமூகப் பாதுகாப்பு கட்டணங்கள், குடும்ப ஓய்வுகால நிதி, ஆட்குறைப்பால் வேலை இழந்தோருக்கு நன்மைகள் மற்றும் பிற கூட்டான நன்மைகள் இவற்றையும் உள்ளடக்கியது ஆகும்.

குறிப்பு

கூலியைப் போலவே உற்பத்தித்திறனும் சமீப காலமாக அதிக முக்கியத்துவம் பெற்று வருகிறது. உற்பத்தித்திறன் தொடர்ந்து அதிகரிக்காமல் தொழிலாளியின் வாழ்க்கைத்தரத்தில் உண்மையான முன்னேற்றத்தைக் காண முடியரிறது. பொதுவாக உற்பத்தித்திறன் கூடவில்லையெனில் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் கூலி உயரும் பொழுது விலை உயரும். இதனால் கூலி உயர்வினால் ஏற்படும் நன்மை பயனின்றிப் போகிறது. ஒரு தொழிற்சாலையில் இருக்கின்ற தொழிலாளர்களை சிறந்த முறையில் பயன்படுத்துவதற்கு உற்பத்தித்திறனை அடிப்படையாகக் கொண்ட கூலி உதவுகிறது. இது ஒரு தொழிலாளி கூடுதலான வருவாயை ஈட்டுவதற்கும் காரணமாகிறது.

தேசீய தொழிலாளர் கமிஷன், ஐந்தாண்டுத் திட்டங்கள் மற்றும் நியாகக் கூலி குழு ஆகியவை உற்பத்தித்திறனோடு இணைந்த கூலியின் முக்கியத்துவத்தை உணர்ந்துள்ளன. 1983-ல் பாராளுமன்றத்தின் மதிப்பீட்டுக் குழு நாட்டின் நலன் கருதி ஆலை தொழிலாளர்களுடைய கூலியானது உற்பத்தித்திறனோடு இணைக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்தியது. உற்பத்தித்திறனோடு கூலியை இணைப்பது என்பது ஒரு எளிதான செயல் அல்ல.

ஒரு தொழிலாளியின் உற்பத்தி கூடும்பொழுது அது கூலி உயர்வாக மாறுவது இல்லை. ஏனெனில் இதற்கு தொழிலாளர்கள் மற்றும் முதலாளிகள் இடையே நல்ல ஒற்றுமை இருக்க வேண்டியது அவசியமாகும். நல்ல வலிமை வாய்ந்த தொழிற்சங்கங்களும் சுமுகமான தொழில் உறவுகளும் இருக்க வேண்டும். உற்பத்திக் காரணங்களால் அதிகரிக்கப்பட்ட உற்பத்தித்திறனின் பயனைப் பங்கிடுவதற்கு தேசீய அளவில் ஏற்றுக்கொள்ளப்பட்ட விதி எதுவும் இல்லாமல் இருப்பது மற்றொரு தடையாகும்.

குறிப்பு

அதிகரித்த உற்பத்தித்திறன் பயனை முற்காலத்தில் தொழிலாளர்கள் சமமாகப் பெறவில்லை. மேலும் தொழிற்சாலை அல்லது தொழிலாளியின் உற்பத்தித்திறனை அளவிடுவதில் சிக்கல் இருந்தது. தொழிலாளிகளின் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டவைகளான மின்சாரப் பற்றாக்குறை, நிர்வாகக் குறைபாடு, மூலப்பொருட்கள் பற்றாக்குறை பொருட்களின் தேவைகளில் ஏற்றத்தாழ்வு இவைகள் தொழிலாளர் நல அமைச்சர் திரு.வீரேந்திர பட்டீல் தொழிலாளர் உற்பத்தித்திறனை ஒரு தொழிலாளி உற்பத்தி செய்கின்ற உற்பத்தியோடு ஒப்பிட்டுக் கூறினார்.

மேற்கூறிய நடைமுறைச் சிக்கல்கள் காரணமாக கூலியை உற்பத்தித்திறன் ஒன்றோடு மட்டும் இணைத்துக் கூற முடியாது. கூலி வீதங்களை செய்வதற்கு வாழ்க்கைச் செலவில் ஏற்படும் மாற்றம் இலாப அளவு, தொழில் நுணுக்கம் மற்றும் கூலியின் சுமை (பஞ்சப்படி, இலாபத்தில் பங்கு இதர நன்மைகள்) ஆகிய பல்வேறு காரணங்களையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

1994-ல் தொழிலாளர் அமைச்சகம் உற்பத்தித்திறனுடன் இணைந்த கூலி முறையைக் கொண்டுவர எல்லா மத்திய பொதுத்துறை நிறுவனங்களின் கருத்துக்களையும் கேட்டது. அதற்கு 130 பொதுத்துறை நிறுவனங்கள் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்தன. எல்லா மத்திய பொதுத்துறை நிறுவனத்திலும் உற்பத்தித்திறனுடன் இணைந்த ஊக்கத் திட்டம் நடைமுறையில் இருப்பது தெரிய வந்தது. இந்திய மத்திய குடிசைத் தொழில்கள் கழகம் உற்பத்தித்திறனுடன் இணைந்த போனஸ் திட்டத்தை அறிமுகப்படுத்தியுள்ளது.

**விவசாய தொழிலாளர் ஊதியங்கள்**

விவசாயிகள் உற்பத்தியை பெருக்க வேண்டும் அல்லது உற்பத்தி செலவினை குறைக்க வேண்டும். உற்பத்தி முறைகளில் புதிய உத்திகளையும், புதிய தொழில்நுட்பங்களையும் புகுத்த வேண்டியது கட்டாயமாகிறது. உற்பத்தியில் நவீன எந்திரங்களை பயன்படுத்துவதன் மூலம் ஓரளவு உற்பத்தி செலவுகளை குறைக்கலாம். உற்பத்தி செலவுகளை குறைக்க உழைப்பாளர்களின் ஊதியத்தை குறைப்பது அவசியமாகிறது. ஊதியத்தை நேரடியாக குறைக்க இயலாதபோது அதற்கான மாற்று வழிமுறையாக கண்டறியப்பட்டது தான் அயலாக்கம்-செலவு குறைவாக இருக்கும்.

## 12.6. உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

விவசாயத் தொழிலாளர்கள் அல்லது விவசாயத்தில் உழைப்பு

1.விவசாய நடவடிக்கைகளில் ஒன்றிலோ அதற்கு மேற்பட்டதிலோ பணம் பெற்றோ , பண்டம் பெற்றோ அல்லது இரண்டையும் பகுதியாகப் பெற்றோ ஈடுபட்டால் அவரை விவசாயத் தொழிலாளர் என குறிப்பிடலாம்

2.. வேளாண்மையின் இயல்பைப் பொறுத்து நம்நாட்டில் வேளாண்மையில் ஈடுபட்டிருப்பவர்களை

**குறிப்பு**

அ ) நில உடமையாளர்கள்

ஆ ) குத்தகைதாரர்கள்

இ ) விவசாய உழைப்பாளர்கள் என்று மூன்று பிரிவுகளுக்குள் கொண்டு வந்துள்ளனர்.

குறிப்பு

# அலகு – 13 இயற்கைக் விவசாயக் கொள்கை



## 13.1 நோக்கங்கள்

1. இயற்கை விவசாய கொள்கை 2000 பற்றி அறியவும்.
2. விவசாயிகள் மீது தேசிய கமிஷன் பற்றி தெரிந்து கொள்ள.

.

## 13.2 தேசிய விவசாயக்கொள்கை 2000

1. வேளாண் துறையில் வளர்ச்சியை 4% அதிகமாக்குதல்.
2. மண், நீர் மற்றும் பல்லுயிர் பாதுகாப்பு
3. சமத்துவம்
4. தேவைப்படும் பொருளாதார தாரயமாக்கல் மற்றும் பூகோளமயமாக்குதலில் இருந்து எழுந்த சவால்களை எதிர்கொள்ளும் வகையில் விவசாய உற்பத்திகளின் ஏற்றுமதியிலிருந்து சிறிய சந்தைகள் மற்றும் தேவைகளை பூர்த்தி செய்வது இதனுடைய நோக்கமாகும்.

**பண்புகள்:**

1. வேளாண்மையின் விலை மற்றும் விவசாயிகளின் விலை பாதுகாப்பு அல்லது (குணநல கட்டுப்பாடு) ஆட்சியில் விவசாய வளர்ச்சியை ஊக்குவித்தது அரசாங்கத்தின் ஒரு பகுதியாக இருக்கும் வளங்கள் மற்றும் தொழில்நுட்பங்கள் போதுமான அளவு கிடைக்க வேண்டும் விவசாயிகளுக்கு கடன் மற்றும் பருவகால மற்றும் விலை ஏற்ற இறக்கங்களிலிருந்து அவர்களை பாதுகாக்க வேண்டும்.
2. தனியார் துறை பங்களிப்பை ஊக்குவிப்பதற்காக ஒப்பந்த வேளாண்மை மற்றும் நில குத்தகை செய்தல், விரைவுப்படுத்தப்பட்ட தொழில்நுட்ப பரிமாற்றம், மூலதன ஊக்குவிப்பு, பயிர் உற்பத்திற்கான சந்தைகள் குறிப்பாக எண்ணெய் வித்துக்கள் பருத்தி மற்றும் தோட்டக்களைப்பயிர்கள் ஆகியவற்றை அனுமதித்தல்.

3. வேளாண்மையில் உள்ள தனியார் துறை முதலீடு குறிப்பாக விவசாய ஆராய்ச்சி, மனித வளமேம்பாடு பிந்தை அறுவடை மேலாண்மை மற்றும் சந்தைப்படுத்துதல் போன்றவற்றில் ஊக்கமளித்தல்.
4. இறக்குமதியில் கட்டுப்பாடு அகற்றபட்ட பிறகு உலகச்சந்தையில் அதிக விலையுள்ள ஏற்ற இறக்கத்தின் பாதகமான தாக்கத்திலிருந்து விவசாயிகளை பாதுகாக்கவும் மற்றும் ஏற்றுமதியை ஊக்குவிப்பதற்காக சரக்கு வாரியான உத்திகள் மற்றும் கொள்கைகள் வகுக்கப்பட்டது.
5. பொருட்களின் விலையிலான பரந்த ஏற்ற இறக்கங்களை குறைப்பதற்கு எதிர்கால சந்தைகள் பற்றிய புரிதலை அதிகரிக்கும்.
6. நாட்டில் உள்ள விவசாய பொருட்களின் இயக்கத்தின் மீதான கட்டுப்பாடு குறைக்கப்படுகிறது.
7. கிராமிய மின்மயமாக்கலில் முக்கிய அழுத்தம் கொடுக்கப்படுகிறது.
8. பண்ணை இயந்திரம் மற்றும் கருவிகள், உரங்கள் சேமிப்பு மற்றும் செயலாக்கம் போன்ற பொருட்களின் மீதாக சுங்க வரி மதிப்பாய்வு செய்யப்படும்.
9. நீர்ப்பாசனம் மற்றும் பிற புதிய விவசாய நோக்கங்களுக்கான புதிய புதுப்பிக்கத்தக்க ஆதார மூலங்களை பயன்படுத்துதல் ஊக்கமளிக்கப்படும்.
10. விவசாயிகளுக்கு உரிய நேரத்தில் போதுமான அளவு கடன் வழங்குவதற்காக கிராமப்புற மற்றும் பண்ணை கடன் திட்டங்களின் முற்போக்கு நிறுவனமயமாக்கல் தொடரும்.

குறிப்பு

## 13.3. உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

1. தேசிய விவசாயக்கொள்கை 2000 எதற்காக ஏற்படுத்தப்பட்டது
2. இயற்கை விவசாய கொள்கை 2000 பண்புகள் என்ன?

---

**விவசாயிகளின் தேசீய ஆணையம் (National Commision For Farmers)**

நவம்பர் 18 2004 அன்று ஹேகு விவசாயிகளின் தேசீய ஆணையம் இந்திய அரசால் அமைக்கப்பட்டது. பேராசிரியர் எம்.எஸ்.சுவாமிநாதன் தலைமையில் அமைக்கப்பட்டது. டிசம்பர் 2004 முதல் அக்டோபர் 2006 வரை இது ஐந்து அறிக்கைகளை சமர்பித்தது.

குறிப்பு

11 வது ஐந்தாண்டு திட்டத்திற்கான அணுகுமுறையை வேகமான மற்றும் முழுமையான வளர்ச்சியை இலக்காக அடைய பரிந்துரை செய்தது. இந்த அறிக்கையில் ஐந்தாவது அறிக்கை மிக முக்கியமானது. இது விவசாயிகளின் துயரங்களுக்கும் விவசாயிகளின் தற்கொலைக்கான காரணத்திலும் அதிக கவனம் செலுத்தியது. இந்தியாவில் விவசாயிகளையும் விவசாயதுறைகளையும் உள்ளடக்கிய வளர்ச்சிக்கு பரிந்துரைகள் உள்ளன. இருப்பினம் விவசாயிகளுக்கான தேசிய ஆணையத்தின் அறிக்கையில் பெரும்பாலான பரிந்துரைகள் இன்னும் நடைமுறைப்படுத்தப்படவில்லை.

**விவசாயிகளின் தேசிய ஆணைகளின் பரிந்துரைகள்**

**1. நில சீர்திருத்தம்**

பயிர் மற்றும் கால்நடை இரண்டிற்கும் நிலத்தை அணுகுவதற்கான அடிப்படை பிரச்சனையை எதிர்கொள்ள நிலச்சீர்திருத்தங்கள் அவசியம். நில உடைமை சமத்துவமின்மை நில உரிமைகளில் பிரதிபலிக்கிறது. 1991-92-ல் மொத்த நிலப்பகுதிகளில் உள்ள கிராமப்புற குடும்பங்களில் கீழ் பங்கு 3 சதவிகதம் மட்டுமே இருந்தது. இதில் முதல் 10 சதவிகிதம் 54 சதவீதமாக உயர்ந்தது. எங்கு வேண்டுமானாலும் நிலமற்ற தொழிலாளர் குடும்பங்களுக்கு குறைந்தபட்சம் ஒரு ஏக்கர் வீடாவது வழங்கப்பட வேண்டும். அவை வீட்டு தோட்டங்களுக்கும் விலங்கு வளர்ப்பதற்கும் இடமளிக்கும். தேசிய நில பயன்பாட்டு சேவை மையத்தை அமைத்தல், நிலத்தடி நீரை சேமித்தல், சுற்றுச்சூழலை காப்பது, அங்காடி காரணிகளை இணைப்பது ஆகியவை இந்த ஆணையத்தின் முக்கிய பரிந்துரைகளாகும்.

**2. நீர்**

நீர் எல்லோருக்கும் பொதுவான வளமாகும். இது தனியார் சொத்து அல்ல. மழைநீர் தொட்டிகள் கட்டாயமாக அமைக்கப்பட வேண்டும். இதற்காக நிதி உதவி வழங்கப்பட வேண்டும். சொட்டுநீர் பாசனம் தெளிப்பான், மேம்பட்ட நீர்பாசன நடைமுறைகள் மூலம் கோரிக்கை மேலாண்மை ஆகியவற்றை அமைக்க வேண்டும். நிலத்தடி நீரின் முக்கியத்துவத்தை அறிவுறுத்த வேண்டும். குறைந்த நீரை பயன்படுத்தி விவசாயம் செய்யும் முறைகளை அறிவுறுத்தவேண்டும். 2004-05 ல் கோழி மற்றும் கால்நடை மூலமாக விவசாய மொத்த உள்நாட்டு உற்பத்தி 26 சதவீதம் ஏற்பட்டது.

**மீன்வளம் :**

கடலோர மற்றும் உள்நாட்டு மீன்வளத்துறை இரண்டும் மில்லியன் கணக்கான குடும்பங்களுக்கு வாழ்வாதாரமாக விளங்குகிறது. வேலைவாய்பையும் வழங்குகிறது. விஞ்ஞான மீன்வளர்ப்பு, அறுவடை மற்றும் செயலாக்கம் ஆகியவற்றின் மூலம் மீனவ குடும்பங்களின் வருமானத்தை மேம்படுத்தலாம்.

**கூட்டுறவு வேளாண்மை மற்றும் சேவை கூட்டுறவு:**

குறிப்பு

சிறு மற்றும் குறு விவசாயிகளுக்கு கூட்டுறவு விவசாயம் சிறந்தது. ஏனெனில் டிராக்டர்கள் மற்றும் பிற விவசாய உபகரணங்கள் போன்ற மையப்படுத்தப்பட்ட சேவைகள், அத்துடன் நனைத்தல் மற்றும் உலர்த்தும் இயந்திரங்கள் போன்றவை சிறிய அளவிலான பரவலாக்கப்பட்ட உற்பத்திக்கு ஆதாரவளிக்கும். இது உற்பத்தி செலவீனங்களை குறைத்து உற்பத்திகளின் தரம் மற்றும் அதன் மூலம் வருவாயை அதிகரிக்கும்.

**சுய உதவிக் குழுக்களால் குழு விவசாயம்:**

விவசாய நிலத்தை உற்பத்தி செய்ய சுய உதவிக குழுக்களை ஊக்குவிக்கும்.

**ஒப்பந்த வேளாண்மை**

உற்பத்தியாளர்களுக்கும் வாங்குபவர்களுக்கும் நன்மையளிக்க கூடியது. காய்கறி, பழங்கள், மலர்கள், மருத்துவ தாவரங்கள், கிழங்கு பயிர்கள், பருப்பு வகைகள் எண்ணெய் வித்துக்கள், கரும்பு தானியங்கள் மற்றும் பருத்தி போன்ற பண்ணை பொருட்களின் முக்கிய குழுக்களுக்கு ஒப்பந்த தொழில்துறைக்கான நடைமுறை விதிகளை உருவாக்க வேண்டும்.

**விவசாயிகள் நிறுவனங்கள்:**

சிறு விவசாயிகள் மற்றும் சுய உதவிக்குழுக்கள் போன்ற நிறுவனங்கள் பங்குதாரர்களாகவும் இருக்க வேண்டும்.

2014-15-ல் விவசாயிகளை பாதுகாக்க மத்திய மற்றும் மாநில அரசுகள் மற்றும் நிதியியல் நிறுவனங்கள் இணைந்து ஒரு சந்தை விலை உறுதிப்படுத்துதல் நிதி நிறுவப்பட வேண்டும். இது விலை ஏற்ற இறக்க காலங்களில் விவசாயிகளை பாதுகாக்கும்.

## 13 .4 உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

**1.தேசிய விவசாயக்கொள்கை 2000**

வேளாண் துறையில் வளர்ச்சியை 4% அதிகமாக்குதல்.

மண், நீர் மற்றும் பல்லுயிர் பாதுகாப்பு

குறிப்பு

சமத்துவம்

தேவைப்படும் பொருளாதார தாரயமாக்கல் மற்றும் பூகோளமயமாக்குதலில் இருந்து எழுந்த சவால்களை எதிர்கொள்ளும் வகையில் விவசாய உற்பத்திகளின் ஏற்றுமதியிலிருந்து சிறிய சந்தைகள் மற்றும் தேவைகளை பூர்த்தி செய்வது இதனுடைய நோக்கமாகும்.

**2. பண்புகள்:**

வேளாண்மையின் விலை மற்றும் விவசாயிகளின் விலை பாதுகாப்பு அல்லது (குணநல கட்டுப்பாடு) ஆட்சியில் விவசாய வளர்ச்சியை ஊக்குவித்தது அரசாங்கத்தின் ஒரு பகுதியாக இருக்கும் வளங்கள் மற்றும் தொழில்நுட்பங்கள் போதுமான அளவு கிடைக்க வேண்டும் விவசாயிகளுக்கு கடன் மற்றும் பருவகால மற்றும் விலை ஏற்ற இறக்கங்களிலிருந்து அவர்களை பாதுகாக்க வேண்டும்.

தனியார் துறை பங்களிப்பை ஊக்குவிப்பதற்காக ஒப்பந்த வேளாண்மை மற்றும் நில குத்தகை செய்தல், விரைவுப்படுத்தப்பட்ட தொழில்நுட்ப பரிமாற்றம், மூலதன ஊக்குவிப்பு, பயிர் உற்பத்திற்கான சந்தைகள் குறிப்பாக எண்ணெய் வித்துக்கள் பருத்தி மற்றும் தோட்டக்களைப்பயிர்கள் ஆகியவற்றை அனுமதித்தல்.

வேளாண்மையில் உள்ள தனியார் துறை முதலீடு குறிப்பாக விவசாய ஆராய்ச்சி, மனித வளமேம்பாடு பிந்தை அறுவடை மேலாண்மை மற்றும் சந்தைப்படுத்துதல் போன்றவற்றில் ஊக்கமளித்தல்.

இறக்குமதியில் கட்டுப்பாடு அகற்றபட்ட பிறகு உலகச்சந்தையில் அதிக விலையுள்ள ஏற்ற இறக்கத்தின் பாதகமான தாக்கத்திலிருந்து விவசாயிகளை பாதுகாக்கவும் மற்றும் ஏற்றுமதியை ஊக்குவிப்பதற்காக சரக்கு வாரியான உத்திகள் மற்றும் கொள்கைகள் வகுக்கப்பட்டது.

பொருட்களின் விலையிலான பரந்த ஏற்ற இறக்கங்களை குறைப்பதற்கு எதிர்கால சந்தைகள் பற்றிய புரிதலை அதிகரிக்கும்.

நாட்டில் உள்ள விவசாய பொருட்களின் இயக்கத்தின் மீதான கட்டுப்பாடு குறைக்கப்படுகிறது.

கிராமிய மின்மயமாக்கலில் முக்கிய அழுத்தம் கொடுக்கப்படுகிறது.

பண்ணை இயந்திரம் மற்றும் கருவிகள், உரங்கள் சேமிப்பு மற்றும் செயலாக்கம் போன்ற பொருட்களின் மீதாக சுங்க வரி மதிப்பாய்வு செய்யப்படும்.

நீர்ப்பாசனம் மற்றும் பிற புதிய விவசாய நோக்கங்களுக்கான புதிய புதுப்பிக்கத்தக்க ஆதார மூலங்களை பயன்படுத்துதல் ஊக்கமளிக்கப்படும்.

விவசாயிகளுக்கு உரிய நேரத்தில் போதுமான அளவு கடன் வழங்குவதற்காக கிராமப்புற மற்றும் பண்ணை கடன் திட்டங்களின் முற்போக்கு நிறுவனமயமாக்கல் தொடரும்.

குறிப்பு

# அலகு - 14 உலக வர்த்தக அமைப்பு (WTO)



குறிப்பு

## 14.1 நோக்கங்கள்

1. உலக வர்த்தக அமைப்பு( WTO), இந்திய வேளாண்மை பற்றி அறிவு பெற.
2. தோகா( DOHA)விவசாயம் பற்றிய உடன்பாடு பற்றி தெளிவு பெற.

## 14.2 உலக வர்த்தக நிறுவனமும், வேளாண்மையும்:

**உலக வர்த்தக நிறுவனத்தின் தோற்றம்:**

1994ல் உலக வர்த்தக நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது. அதற்கு முன் 1947ல் 23 நாடுகள் சுங்கவரி மற்றும் வாணிபம் பற்றிய பொது ஒப்பந்த்தை (GATT) உருவாக்கின. பின்னர் 1994-ல் 118 நாடுகள் இதில் கலந்து கொண்டன. சுங்கவரிகளை குறைப்பதும், காப்புக் கொள்கை முறியடிப்பதும் இதன் நோக்கமாக இருந்தது. இருமுக ஒப்பந்தங்களை கைவிட்டு பன்முக ஒப்பந்தங்களை உருவாக்க திட்டம் தீட்டப்பட்டது. நாடுகளுக்கிடையே வேற்றுமைப்படுத்தாத வகையில் உலக வாணிபத்தை நடத்துவது பற்றி வலியுறுத்திக் கூறப்பட்டது. இந்தக் குறிகோள்களை அடைய 8 சுற்றுப்பேச்சு வார்த்தைகள் கையாளப்பட்டன. 1947ல் ஜெனிவாவில் முதல் சுற்றும், எட்டாவது சுற்று 1986-94ம் ஆண்டுகளில் உருகுவேயிலும் நடைபெற்றன. உருகுவே சுற்று (Uruguary Round) மிகவும் சிக்கலானது. இதில் கான்கன் நிர்வாக இயக்குநர் ஆர்தர் டங்கல் முயன்று ஒரு ஒப்பந்தத்தை உருவாக்கினார். அதற்கு டங்கல் திருத்தங்கள் (Drunkel Draft) என்று பெயர். அது பலவற்றை உள்ளடக்கியது. இந்த திருத்தங்கள் வளர்ந்த நாடுகளுக்கு சாதகமாகவும்,வளரும் நாடுகளுக்கு பாதகமாகவும் அமைந்தன. வளர்ந்த நாடுகளின் கட்டாயத்தின் பேரில் ஏப்ரல் 15, 1994ல் வளரும் நாடுகள் இதனை ஒப்புக்கொண்டு கையெழுத்திட்டன.

இறுதிச்சட்டத்தில் கையெழுத்திட்டதன் விளைவாக உலக வர்த்தக நிறுவனம் (W.T.O) தோற்றுவிக்கப்பட்டது. முதலில் 1994ல் 104 அங்கத்தினர் நாடுகள் இருந்தன. இன்று 149 உறுப்பு நாடுகள் உள்ளன. உலக வர்த்தக நிறுவனம் ஒரு நிலையான பன்னாட்டு அமைப்பு, அது பண்டங்களில் நிகழும் பன்னாட்டு வாணிபம், பணி தொடர்புடைய வாணிபம், அந்திய முதலீடு, மூளைசார்ந்த உழைப்பு உரிமை ஆகியவற்றை பேணிப் பாதுகாப்பதாக உள்ளது.

குறிப்பு

பங்கு, பணிகள்: உலக வர்த்தக நிறுவனத்திற்கு 5 பணிகள் உள்ளன. அவை: 1) பன்முக ஒப்பந்தங்களை நிறைவேற்றுதல் மற்றும் நிர்வகித்தல் 2) பன்முக வாணிபத் தொடர்பில் நாடுகளுக்கிடையே ஒரு பேச்சுவார்த்தை அமைப்பாக விளங்குதல் 3) தகராறுகளைத் தீர்க்கும் வழிமுறைகளையும் விதிகளையும் உவாக்குகிறது 4) வாணிபக் கொள்கை மறுபரிசீலனை அமைப்பை தோற்றுவிக்கிறது. 5) உலக வர்த்தக நிறுவனம், பன்னாட்டுப் பணநிதி (IMF) மற்றும் உலக வங்கி (World Bank) இவற்றுடன் ஒத்துழைக்கும்.

இறுதி முடிவெடுக்கும் அமைப்பாக அமைச்சர்கள் கூட்டம் (Ministerial Conference) உள்ளது. இது பன்முக வாணிப ஒப்பந்தங்களை உருவாக்குகிறது. 1995லிருந்து இதுவரை 6 அமைச்சர்கள் கூட்டம் நடந்துள்ளது. அவை: சிங்கப்பூர், ஜெனிவா, சியாட்டில், தோஹா, கான்சென், ஹாங்காங் (டிசம்பர் 2005).

இது தவிர, எல்லாப் பிரதிநிதிகளையும் உள்ளடக்கியதாக பொதுக்குழு (General Council) உள்ளது. இது தகராறுகளைத் தீர்க்கும் அமைப்பாகவும் வாணிபக் கொள்கை மறுபரிசீலனை குழுவாகவும் உள்ளது.

**அமைச்சர்கள் கூட்டத்தில் விவாதிக்கப்பட்டவை:**

சிங்கப்பூரில் நடத்த முதல் அமைச்சர்கள் கூட்டத்தில் நான்கைப் பற்றி பேசப்பட்டது. அவை:

1) முதலீட்டிற்கும் வாணிபத்திற்கும் இடையேயுள்ள தொடர்பு, 2) வாணிபத்திற்கும் போட்டிக் கொள்கைக்கும் இடையேயுள்ள தொடர்பு, 3) அரசு கொள்முதல் வெளிப்படைத்தன்மை 4) வாணிப வசதிகள், ஜெனவா கூட்டம் வாணிபம் மற்றும் சுங்கவரி பற்றிய பொது ஒப்பந்தத்தின் 50வது ஆண்டு கொண்டாட்டத்தை குறிப்பிட்டு அமைந்தது. சியாட்டில் பேச்சுவார்த்தை முறிவுற்றது. தோஹா

குறிப்பு

·

கூட்டத்தில் ஒருங்கிணைந்த பணித்திட்டம் கையாளப்பட்டது. அதில் மற்ற சிக்கல்களோடு, விவசாயம் பணித்துறை பற்றிய பேச்சுவார்த்தைக்கு கால அவகாசம் விதிப்பது பற்றி குறிப்பிடப்பட்டது. தோஹா அமைச்சர் கூட்டத்தில் வாணிபம் தொடர்புடைய அறிவு சார்ந்த சொத்து உரிமை (Trade Related IntellecturalProperty Rights orTRIPS) மற்றும் பொது சுகாதாரம் பற்றி ஒப்பந்தம் நிறைவேற்றப்பட்டது. ஐந்தாவது அமைச்சர் கூட்டம் கான்கக் (Cancun) என்ற இடத்தில் நடந்தது. தோஹா பணித் திட்டத்தின் வளர்ச்சி பற்றி மறுபரிசீலனை செய்ய இதில் எண்ணப்பட்டது. ஆனால் விவசாயம் மற்றும் சிங்கப்பூர் கருத்துருக்கள் பற்றி அங்கத்தினரிடையே பெரும் கருத்து வேறுபாடு ஏற்பட்டதால் இப்பேச்சு வார்த்தை முறிவடைந்தது. ஹாங்காங்கில் நடைபெற்ற ஆறாவது கூட்டத்தில் சில குறிப்பிட்ட பகுதிகள் பற்றி முடிவெடுக்க காலக்கெடு விதிக்கப்பட்டது.

**உலக வர்த்தக அமைப்பில் உருவான ஒப்பந்தங்கள்**

1) வேளாண்மை பற்றிய ஒப்பந்தம்: வேளாண்மை வணிகம் பற்றி நீண்டகால கொள்கையை உருவாக்க உலகவர்த்தக நிறுவனம் எண்ணியது. விவசாயப் பொருட்களின் மீதான சுங்கவரியை குறைப்பது பற்றி குறிப்பிடப்பட்டது. வளர்ந்த நாடுகள் 6 வருடத்தில் விவசாயப் பொருட்கள் மீதான வரியை 36மூ குறைக்க வேண்டும் எனவும், வளர்ந்துவரும் நாடுகள் 10 ஆண்டுகளில் 24மூ குறைக்க வேண்டும் எனவும் குறிப்பிடப்பட்டது.
2) ஆடை, நெசவுப் பொருள் தொடர்புடைய ஒப்பந்தம்: நெசவுப் பொருள், ஆடை தொடர்புடையவற்றில் 10 ஆண்டு கால அவகாசத்தில் இறக்குமதிப் பங்கீடை பிரித்து விடுவது பற்றி குறிப்பிடப்பட்டது. இதனால் இன்று பருத்து ஆடை, உடை முதலியவற்றில் பங்கீடு கைவிடப்பட்டது.

3) அங்காடி ஒழுங்கு பற்றிய ஒப்பந்தம்: உறுப்பு நாடுகளில் தொழில் மற்றும் விவசாயப் பொருட்களுக்கான சுங்கவரியை 37மூ குறைக்கும். அமெரிக்காவும், ஐரோப்பிய யூனியனும் பாதியாக வரியைக் குறைக்கும்.

4) வாணிபம் தொடர்புடைய முதலீட்டு நடவடிக்கைகள் (TRIMS): இதில் வெளிநாட்டு முதலீட்டுக்கு சாதகமான உள்நாட்டுக் கொள்கை அமைவது பற்றியும், அளவுக்கட்டுப்பாடுகளை நீக்குவது

குறித்தும் குறிப்பிடப்பட்டது. இதில் குறிப்பிடப்பட்டவை: வெளிநாட்டு முதலீட்டார்கள் உள்நாட்டு இடுமானங்களைப் பயன்படுத்த வேண்டும்: ஏற்றுமதிக்காக உற்பத்தி செய்ய வேண்டும். அந்நியச் செலவாணி வரவு செலவுகளை சமப்படுத்த வேண்டும். உள்ளூர் உற்பத்தியில் ஒரு பகுதிக்கு மேல் ஏற்றுமதி செய்யக்கூடாது.

குறிப்பு

5) அறிவு சார்ந்த சொத்து உரிமை பற்றிய ஒப்பந்தம் (Agreement of TRIPS): உருகுவே சுற்றில் ஒப்புக்கொள்ளப்பட்ட அறிவு சார்ந்த சொத்துரிமை பற்றிய நிபந்தனைகள் கடுமையாகவே இருந்தன. இந்தச் சட்டத்தில் பதிப்புரிமை, காப்புரிமைச்சீட்டு (Patent), தொழில் வடிவமைப்பு முதலியவும் சேர்க்கப்பட்டன. இந்த ஒப்பந்தத்தில் உணவு, மருந்து, ரசாயனப் பொருள் முதலியவற்றிற்கு பொருள் காப்புரிமை வழங்கப்பட்டது. பதிப்புரிமைக்கு 50 வருட பாதுகாப்பும், பொருள் காப்புரிமைக்கு 20 வருட பாதுகாப்பும் அளிக்கப்பட்டன.

6) பணிகள் பற்றிய ஒப்பந்தம்: முதன் முறையாக உருகுவே சுற்றில் வங்கியியல், காப்பீடு, சுற்றுலா, கடல் பயணம், உழைப்பாளிகளின் நகர்வு பற்றி குறிப்பிடப்பட்டது.

7) தகராறுகளைத் தீர்த்து வைக்கும் அமைப்பு: பன்னாட்டு வணிக முறையில் பாதுகாப்பை தோற்றுவிக்கவும், தப்பித்துக் கொள்ளும் வழிமுறைகளைக் களையவும் று.வு.மு-ல் இவ்வமைப்பு ஏற்படுத்தப்பட்டது. இனிமேல் 18 மாதங்களுக்குள் தகராறுகள் தீர்க்கப்பட வேண்டும் என குறிப்பிடப்பட்டுள்ளது.

இவை தவிர உருகுவே சுற்றில் பொருட்களை அனுப்புவதற்கு முன் சரிபார்த்தல், இறக்குமதி அனுமதி, குவிப்பதற்கு எதிரான நடவடிக்கைகள், மானியம், பாதுகாப்பு நடவடிக்கைகள் முதலியவை பற்றியும் ஒப்பந்தங்கள் உருவாகின.

**உலக வர்த்தக அமைப்பும் இந்தியா மீது அதன் தாக்கமும்**

இந்தியா பல பொருட்களில் சுங்கவரியை ஏற்றுவதில்லை என ஒப்புக்கொண்டது. இறக்குமதி அளவுகளை குறைப்பதை நீக்கியது. விவசாயப் பொருட்கள் மற்றும், மருந்துகளுக்கு காப்புரிமைச் சீட்டு வழங்கப்பட்டுள்ளது. சில மருந்துப்பொருள் உற்பத்தியில் உள்ளூர் பொருட்களைப் பயன்படுத்தவது பற்றி குறிப்பிடப்பட்டது 22 நுகர்வோர்

பொருட்களில் இலாபப்பங்கீடு செய்வது பற்றியும் குறிப்பிடப்பட்டது. வெளிநாட்டுப் பணியை அளிப்பவர்கள் இந்தியாவில் 33 நடவடிக்கையில் ஈடுபட இந்திய உறுதியளித்தது. இந்தியாவில் சுங்கவரி மதிப்பீட்டுச் சட்டம் நு.வு.மு-ல் ஒப்பந்தச் சரத்தினை ஒட்டி மாற்றியமைக்கப்பட்டது.

குறிப்பு

முதலாவதாக காட் செயற்குழு 2005ல் நு.வு.மு ன் செயல்பாட்டினால் உலகப்பண்ட வர்த்தகம் ரு.ளு. கூ745 பில்லியன் அளவு அதிகரிக்கும் என்பதால் இந்தியா இத்துறைகளில் அதிக இலாபம் பெறும் என எதிர்பார்க்கப்படுகிறது. குறைந்தது வணிக இலாபம் ஆண்டு ஒன்றுக்கு உபரி ஏற்றுமதி 2.7 பில்லியன் அமெரிக்கா டாலர் ஆக இருக்கும் என மதிப்பிடப்பட்டுள்ளது.

இரண்டாவதாக பங்கீடு இல்லாத அமைப்பில் இந்தியாவின் ஆடை, நெசவுப் பொருள் முதலியவற்றின் ஏற்றுமதி வெகுவாக அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. குறிப்பாக அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய அங்காடிகளில் நமது பொருட்கள் குவிய வாய்ப்பு உண்டு. ஆனால் சீனாவின் போட்டியை நாம் சமாளிக்க வேண்டியிருக்கும்.

மூன்றாவதாக, உள்நாட்டு மானியத்தை வளர்ந்த நாடுகள் குறைத்துக் கொள்வதால் உலக விலைகள் அதிகமாகும். அதனால் நமது விவசாய ஏற்றுமதி அதிகரிக்கும். விவசாயத்திட்டங்கட்கு விதி விலக்குகளும் அளிக்கப்பட்டுள்ளன. எனவே இவ்வொப்பந்தத்தினால் நமது பொது விநியோகத் திட்டம் பாதிக்கப்படாது.

நான்காவதாக, உருகுவே சுற்றுப் பேச்சுவார்த்தைகளால் குவிப்பு மானியமுறை, பாதுகாப்பு அளித்தல் மற்றும் தகராறுகளைத் தீர்த்தல் போன்ற பன்முக விதிகள் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன.

## 14.3. உலக வர்த்தக அமைப்பு (WTO) மற்றும் இந்திய வேளாண்மை

2001ல் தோகாவில் உலக வாணிபச் சுற்றுப் பேச்சுக்கள் நடைபெற்று முற்றுப்பெறாது போயின. தோகா பேச்சுவார்த்தைகளின் முக்கிய நோக்கம் வளர்ந்துவரும் நாடுகளுக்கு சார்பாக உலக வாணிபச் சமநிலையின்மையை குறைத்தலாகும். 21 வளர்ந்த நாடுகளில் மானியம் மட்டும் கூ250 பில்லியனாக சென்ற ஆண்டு இருந்தது. வளர்ந்துவரும் நாடுகள் மிக குறைவாக மானியம் (Subsidies) அளித்தன. தோகா சுற்றுப் பேச்சுக்கள் நிறைவேறாததற்கு காரணம் அமெரிக்காவும், ஐரோப்பிய யூனியன் நாடுகளும் விவசாயத்திற்கு அவை அளித்து வந்த உள்நாட்டு

குறிப்பு

மானியத்தை குறைக்க முன்வரவில்லை. விவசாயப் பொருட்களுக்கு ஐரோப்பிய யூனியனில் அங்காடி வசதிகள் வேண்டும் எனவும் இந்திய போன்ற நாடுகள் தொழில் பொருட்களுக்கு விதிக்கின்ற சுங்கவரியை குறைக்க வேண்டும் எனவும் அமெரிக்கா வலியுறுத்தி வருகிறது. மானியம் அளிப்பதால் வாணிபத்தில் ஈடுபடும் நாடுகளில் பதட்டம் ஏற்படுகிறது.

2005 டிசம்பரின் ஹாங்காங்கில் உலக வாணிபக் கழகத்தின் அமைச்சரவை கூட்டம் நடந்தது. எனினும் அதிக முன்னேற்றம் ஏற்படவில்லை. கான்கன் (Cancun) என்னுமிடத்தில் 2004 ஜுலையில் நடந்த கூட்டத்தில் இந்தியா, பிரேசில் தென்ஆப்பிரிககா ஆகியவை (G.3) வளர்ந்த நாடுகளுக்கு எதிராக வேளாண்மைத் துறையில் எதிர்ப்பு தெரிவித்தன. இப்பொழுது G.20நாடுகள் G.12 ஆகியுள்ளன. இதில் அமெரிக்கத் தலைமை உள்ளது. ஏழை நாடுகளின் பொருட்களுக்கு வேறுபட்ட, சிறப்பு உதவி வழங்கிடுமாறு இந்தோனேசியாவின் தலைமையில் G.33 நாடுகள் கோரிக்கை விடுவித்துள்ளன. இந்தியா போன்ற வளரும் நாடுகளின் ஏற்றுமதிப் பொருட்களான ஆடைகள், பஞ்சாலைப் பொருட்களுக்கு போதிய சந்தையை வழங்க வளர்ந்த நாடுகள் மறுத்துள்ளன. உலக வாணிபக்கழக இயக்குநர் தலைவரான பாஸ்கல்லாமி (Pascal Lamy) வளர்ந்துவரும் நாடுகளான இந்தியா, பிரேசில், தென்ஆப்பிரிக்கா போன்றவை தொழில் பொருட்களின் மீதுள்ள சுங்க வரியைக் குறைக்க வேண்டும் என கருத்து தெரிவித்தார். உலக வாணிப முறையை மறுசீரமைக்க வேண்டும் என லாமி குறிப்பிட்டுள்ளார். இந்தியாவும் மற்று முள்ள வளர்ந்துவரும் நாடுகளுக்கு உலக வாணிபக்கழகம் தேவையில்லை என சொல்லமுடியாது என்றார் அவர். மத்திய வர்த்தக அமைச்சர் கமல்நாத் குறிப்பிடுவது போல வளர்ந்த நாடுகள் அதிக மான்யம் அளித்து வருவதால், நமது விவசாயிகள் உலக வாணிப முறையில் ஈடுபட முடியாதிருக்கிறது. காரணம் இந்தியாவில் வேளாண்மை என்பது ஒரு வாழ்க்கை நெறியே தவிர வர்த்தக முறையில் அமைந்ததல்ல. எனவே சிறப்பு பாதுகாப்பு வழிமுறை தேவை.

அண்மையில், ஜுலை 2008ல் உலக வர்த்தக நிறுவனத்தின் ஐந்து நாள் அமைச்சர்கள் மட்டத்திலுள்ள கூட்டம் ஜெனீவாவில் நடைபெற்றது. இதன் நோக்கம் 2001ல் துவங்கிய தோகா சுற்றுப்பேச்சு வார்த்தைகளை முடிவுக்கு கொண்டு வருவது தான். 152 உறுப்பு நாடுகள் உள்ள உலக வர்த்தக அமைப்பில் தற்பொழுது G.20, G.33 மற்றும் NAMA-11 (Non- Agriculture Market Access) என பல குழுக்களாக

வளர்ந்து வரும் நாடுகள் அமைந்துள்ளன. அமெரிக்காவும், ஐரோப்பிய யூனியனும் தங்கள் நாட்டு விவசாய அங்காடிகளை திறந்துவிட வேண்டும் என்றும் வணிகத்திற்கு குறுக்கே நிற்கும் மானியங்களை தவிர்க்க வேண்டும் என்றும் உணவுப்பொருள் ஏற்றுமதி செய்யும் ஏழை, பணக்கார நாடுகளும், வளர்ந்து வரும் நாடுகளும் அறைகூவல் விடுத்தன.

குறிப்பு

இந்தக் கூட்டத்தில் ஐரோப்பியக் கூட்டமைப்பின் சார்பாக அதன் வணித்தலைவர் பீட்டர் மேன்டல்சன் சராசரியாக 54 சதவிகிதமாக குறைக்கப்பட்டிருந்த சுங்க வரிகளை 60 சதவிகிதமாக குறைப்பதாக அறிவித்தார். ஆனால் பிரேசில் இதனை “வெறும் விளம்பரம்” (Propaganda) என குறிப்பிட்டது. ஐரோப்பியக் கூட்டமைப்பு 75லிருந்து 80 சதவிகித சுங்கவரிக் குறைப்பு செய்ய வேண்டும் என குறிப்பிடப்பட்டது. ஆனால் இங்கு தயாரிக்கப்பட்ட அறிக்கையில் அமெரிக்கா $13 பில்லியனிலிருந்து $16.4 பில்லியன் வரை விவசாய மானியம் அளிக்க பில்லியனிலிருந்து $16.4 பில்லியன் வரை விவசாய மானியம் அளிக்க அனுமதியளிக்கப்பட்டது. இந்தியாவும் பிரேசிலும் மற்று முள்ள வளர்ந்து வரும் நாடுகளும் இறக்குமதி வரியை சராசரியாக 36 சதவிகிதம் குறைக்க வேண்டும் என குறிப்பிடப்பட்டது. அமெரிக்காவும், ஐரோப்பியக் கூட்டமைப்பும் தொடர்ந்து சலுகைகள் எதிர்பார்த்ததால் இச்சுற்றுப் பேச்சுவார்த்தைகளில் முடிவான உடன்பாடு ஏற்படவில்லை. வளர்ச்சியை அதிகப்படுத்துவதில் ஒருமித்த கருத்து தோன்றியதாகவும் ஏழை நாடுகளின் மக்களின் வாழ்க்கை மற்றும் பாதுகாப்பு பற்றி உடன்பாடு ஏற்படவில்லை எனவும் முன்னாள் இந்திய வணிகத்துறை அமைச்சர் கமல்நாத் குறிப்பிட்டார். இக்கூட்டத்தில் பருத்தி மற்றும் சுங்க வரிகளை எளிமையாக்குவது பற்றி பேசுப்படவில்லை. மொத்தத்தில் தோகா சுற்றுப் பேச்சுவார்த்தைகள் முடிவுக்கு வரவில்லை எனவே சொல்லலாம்.

.

உலக வார்த்தக அமைப்பு அண்மையில் சிங்கப்பூரில் உலக வர்த்தக அறிக்கையை வெளியிட்டது. அதில் சீனா, இந்தியா மற்றும் சில வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் மட்டுமே வளர்ச்சி விகிதம் நேர்க்கணியமாக இருக்கும் என குறிப்பிடப்பட்டுள்ளது. அமெரிக்காவில் அந்நாட்டுப் பொருட்களை விற்க பெரும் முயற்சி எடுக்கப்பட்டு வருகிறது. கணிப்பொறியியல் படித்தவர்கள் அமெரிக்காவலில் நுழைய ஓரளவு கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன. உலக வர்த்தகம் வெளிப்படையாக நடைபெற அனைத்து நாடுகளும் உதவ வேண்டும். வளரும் நாடுகளது கோரிக்கைகட்கு வளர்ந்து நாடுகள் செவிசாய்க்க வேண்டும்.

## 14.4. உங்கள் முன்னேற்றத்தைச் சோதிக்க

1. உலக வர்த்தக அமைப்பின் நோக்கம் என்ன?
2. உலக வர்த்தக நிறுவனத்திற்கு பணிகள் யாவை?

## 14.5. தோகா (DOHA) விவசாயம் பற்றிய உடன்பாடு

குறிப்பு

டோஹா அபிவிருத்தி சுற்று 2001-ல் தொடங்கப்பெற்றது. டோஹா மேம்பாட்டு சுற்று அல்லது டோஹா மேம்பாட்டு நிகழ்ச்சி நிரல் (DDA) என்பது நவம்பர் 2001 இல் டைரக்டர் ஜெனரல் மைக் மூர் தலைமையிலான உலக வணிக அமைப்பு (WTO) சமீபத்திய வர்த்தக பேச்சுவார்த்தை சுற்று ஆகும். அதன் நோக்கம் உலகெங்கிலும் வர்த்தக தடைகளை குறைப்பதாகும். இதனால் உலகளாவிய வர்த்தகம் அதிகரிக்கிறது.

டோஹா சுற்று 2001 இல் டோஹா, கத்தார் நகரில் ஒரு அமைச்சரவை மட்ட கட்டத்தில் தொடங்கப்பட்டது. பின்னர் கான்குன், மெக்ஸிகோ (2003) மற்றும் ஹாங்காங் 2005 ஆகியவற்றில் நடைபெற்றது. பிரான்ஸ் (2005), பாரிஸ், ஜெர்மனி (2007) மற்றும் ஜெனிபா, சுவிர்சர்லாந்து (2004,2006,2008) ஆகியவற்றில் இதன் தொடர்புடைய பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன.

வேளாண்மை, தொழில்துறை கட்டணங்கள் மற்றம் கட்டணத்தடை சேவைகள் மற்றும் வர்த்தக பரிவர்த்தனைகள் பற்றிய கருத்து வேறுபாடுகள் தொடர்பாக ஜீலை 2008 இல் வார்த்தைகள் முறிவுக்குப்பின் பேச்சு வார்த்தைகளில் முன்னேற்றம் ஏற்பட்டது.

ஐரோப்பிய ஒன்றியம் யு.எஸ் கனடா மற்றும் ஜப்பான் வளரும் நாடுகளில் தலைமை இடமாக வளர்ந்த நாடுகளுக்கு இடையேயான குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் குறிப்பாக இந்தியா, சீனா, தென்ஆப்பிரிக்கா, வர்த்தகமானியங்கள் என செயல்பட வேளாண் உதவி மாநியங்களை பராமரிப்பதில் ஐரோப்பிய ஒன்றியத்திற்க்கும் அமெரிக்காவிற்கு இடையே கணிசமான பங்குள்ளது. 2012 ஆம் ஆண்டு மே மாதம் மறுபரிசீலினை செய்தன. 2013 டிசம்பர் 7-ம் தேதி பாலிமந்திரி பிரகடனத்தை ஏற்றுக்கொண்டது. முதல் முறையாக டோகாசுற்று நிகழ்ச்சி நிரலின் சிறிய பகுதியாக வர்த்தகத்திற்கு அதிகாரத்துவ தடைகளை வெற்றிகரமாக வழங்கியது. அமெரிக்கா உட்பட சில நாடுகளும் விவசாயம் மற்றும் சேவைகள் பேச்சு வார்த்தைகளை விரிவுப்படுத்த

குறிப்பு

விரும்பின. வர்த்தகத்தை தக்கவைத்துக்கொள்ளவும், இதனால் வர்த்தகதாரளமயமாக்கல் அதிகரித்தது.

1996 இல் சிங்கப்பூரில் நடைபெற்ற முதல் WTO மந்திரி மாநாட்டில், நான்கு விஷயங்களில் நிரந்தர பணி குழுக்களை நிறுவியது.

1. அரசாங்கொள்முதல்
2. சுங்க விடையங்கள்
3. வர்த்தகம் மற்றும் முதலீடு
4. வர்த்தகம் மற்றும் போட்டி ஆகியவற்றில் வெளிப்படைத்தன்மை ஏற்படுத்தியது. இந்த பிரச்சனைகளை ஜப்பான், கொரியா, ஆகிய நாடுகள் எதிர்த்தன.

**டோஹா 2001**

இது நவம்பரில் தொடங்கியது விவசாய மற்றும் உற்பத்தி சந்தைகளை மற்றும் உற்பத்தி சந்தைகள் வர்த்தக சேவைகள் (GATS) பேச்சுவார்த்தைகள் மற்றும் விரிவாக்கப்பட்ட அறிவுசார் சொத்துக்கட்டுப்பாடு (TRIPS) பேச்சுவார்த்தைகளை தொடங்கி வைத்தது.

**கன்குன் 2003**

கான்கன் அமைச்சரவை பல காரணங்களுக்காக வீழ்ச்சி அடைந்தது. முதலாவதாக சிங்கப்பூர் பிரச்சனைகள் பற்றிய வேறுபாடுகள் தீர்மானம் இயலாமல் தோன்றின. வர்த்தகத்தை பேசுவதைக்காட்டிலும் தங்கள் கோரிக்கைகளை மட்டுமே வலியுறுத்தினர். மூன்றாவதாக அனைத்து தலைப்புகளிலும் வளரும் மற்றும் வளர்ந்த நாடுகளுக்குயிடையேயான பரந்த வேறுபாடு தடையாக இருந்தது. நான்காவது நடைமுறை பற்றி சில விமர்சனங்கள் இருந்தன.

வளர்ந்து வரும் நாடுகளுக்கு இந்த வெற்றி தோல்விபோல் தோன்றியது. அவிவிருத்தி செய்யப்பட்ட நாடுகளில் பண்ணை உதவி மானியங்கள் ஒரு பெறும் முக்கிய புள்ளியாக மாறியது. G20 அதன் உருவாக்கம் முதல் G20 ஏற்ற இறக்கத்தை பெற்றிருக்கிறது. G20 பேச்சுவார்த்தைகள் மூலமாக பல வளர்ந்து வரும் உலக வர்த்தக அமைப்புகளில் முன்மொழிவுகள் மீது செல்வாக்கை கொண்டிருக்கின்றன.

**ஜெனீவா 2004**

சிங்கப்பூர் பிரச்சனை டோஹா நிகழ்ச்சி நிரலில் இருந்து நீக்கப்பட்டது. சிங்கப்பூர் பிரச்சனைகள் பேச்சுவார்த்தைகள் மீது சமரசம்

செய்து வந்தது. ஜீலை மாத இறுதியில் டோஹா சுற்று பேச்சுவார்த்தைகளில் உடன்படிக்கை ஏற்பட்டது இதில் விவசாயம், வேளாண்சந்தை அனுகல், சேவைகள் மற்றும் வர்த்தக வசதிகளை உள்ளடக்கி இணைப்புகளை ஏற்படுத்தியது. இந்த பேச்சுவார்த்தை நடவடிக்கைகளை ஏற்றுக்கொண்டனர்.

குறிப்பு

**பாரிஸ் 2005**

பாரிஸ் பேச்சுவார்த்தைகளில் பல சிக்கல்கள் இருந்தன. பிரான்ஸ் விவசாயிகளுக்கு மானியங்களை கிடைக்க நடவடிக்கைகளை எதிர்த்தது. அதே நேரத்தில் அமெரிக்கா, ஆஸ்திரிரேலியா, பீரேசில், மற்றும் அரிசி தொடர்பான பிரச்சனைகள் பற்றி உடன்பாடு ஏற்படவில்லை.

**ஹாங்காங் 2005**

ஹாங்காங் மாநாட்டு மையம், இது ஆறாவது உலக வணிக அமைப்பின் மந்திரி மாநாட்டின் தளம் ஆகும். உலகின் பெரும்பான்மை அரசாங்கங்களை பிரதிநிதித்துவப்படுத்தும் வர்த்தக அமைச்சர்கள் 2013 ஆம் ஆண்டுக்குள் விவசாய ஏற்றுமதிகள் மீதான மானியங்களை நீக்குவதற்கான ஒரு காலக்கெடுவை அமைத்துள்ளன. டிசம்பர் 2005 இல் இந்த சுற்று பயணத்தை முடிக்க திட்டமிடப்பட்டது. ஆனால் ஜீன் 30 2007 அன்று முடிவடைந்தது. 2006 ஜீலையில் ஜெனிவா பேச்சுவார்த்தைகளில் விவசாயம் மானியங்களை குறைப்பதற்கும் இறக்குமதி வரிகளை குறைப்பதற்கும் ஒரு உடன்பாட்டை எட்டமுடியவில்லை. 2007 ஆம் ஆண்டு ஜீன் மாதம் டோகா வட்டாரத்தில் போட்ஸ்மார்கில் நடந்த பேச்சுவார்த்தை எந்த முடிவும் எட்டவில்லை. ஜெனிவா 2008 இல் பேச்சுவார்த்தை மீண்டும் தொடங்கியது. ஒன்பது நாட்களுக்கு பிறகு பேச்சுவார்த்தைகள் நடத்தப்பட்டன.

நைரோயிலும் 2015 19 டிசம்பர் 2015 அன்று கென்ய மூலதனத்தில் WTO கூட்டம் நடைபெற்றது. அதில் வளரும் நாடுகளுக்கு ஏற்றுமதி மானியங்களை முடிவுக்கு கொண்டுவர வளர்ந்த நாடுகளுக்கு ஒரு உடன்படிக்கைக்கு வழிவகுத்தது. வளரும் நாடுகளில் வேளாண்மை மிக முக்கியமாக கருதப்பட்டது. 75 சதவிகித மக்கள் கிராமப்புறங்களில் வாழ்கின்றன. தங்கள் வாழ்வாதாரமே விவசாயம் தான் என்று எண்ணியுள்ளனர். வளர்ந்து வரும் நாடுகளில் உருகுவே ஒப்பந்தங்கள் செயல்படுத்துவதில் சிக்கல்கள் இருந்தது. ஏனெனில் தொழில்நுட்ப உதவி இல்லாததால் வளர்ந்த நாட்டில் உள்ள சந்தைகளில் தங்கள் ஜவுளி மற்றும் ஆடைகளுக்கான தேவையை உணராமல் இருந்தனர்.

குறிப்பு

.

**நன்மைகள்**

மிக்சிகன் பல்கலைக்கழகத்தின் ஓர் ஆய்வில் டோஹா அபிவிருத்தி நிகழ்ச்சி திட்டத்தின் விளைவாக விவசாயம், சேவைகள் றும் உற்பத்திகளில் அனைத்து வர்த்தக தடைகள் 33% குறைக்கப்பட்டிருந்தால் 574.0 பில்லியன் டாலர் உலகளாவிய நலன் ஏற்பட்டதாக கண்டறிந்தார்.இதனால் உலகளாவிய வருமானம் வருடத்திற்கு 3000 பில்லியன் டாலர்களும் வளரும் நாடுகளுக்கு 2500 பில்லியன் டாலர்களும் அதிகரிக்கும் என்று உலக வங்கி முன்னனி பொருளாதார நிபுணர் கிம் ஆண்டர்சன் தன் ஆய்வில் தெரிவித்தார். வர்த்தக சுற்று முடிவில் நிகர லாபத்தை விளைவிக்கும் என்று பல சிந்தனையாளர்கள் மற்றும் பொது அமைப்புகள் மதிப்பிடுகின்றன. உள்ளூர் தொழில்களின் சரிவு குறிப்பாக வளரும் நாடுகளில் தொழில்களின் சரிவை தடுக்க மறுசீரமைப்பு மற்றும் சரிசெய்தல் செலவுகள் ஒரு உலகளாவிய அக்கரை ஆகும்.

## 14.6 உங்கள் முன்னேற்றத்தைச் சரிப்பார்க்க

**1.**1) பன்முக ஒப்பந்தங்களை நிறைவேற்றுதல் மற்றும் நிர்வகித்தல்

2) பன்முக வாணிபத் தொடர்பில் நாடுகளுக்கிடையே ஒரு பேச்சுவார்த்தை அமைப்பாக விளங்குதல்

3) தகராறுகளைத் தீர்க்கும் வழிமுறைகளையும் விதிகளையும் உவாக்குகிறது

4) வாணிபக் கொள்கை மறுபரிசீலனை அமைப்பை தோற்றுவிக்கிறது

5) உலக வர்த்தக நிறுவனம், பன்னாட்டுப் பணநிதி (IMF) மற்றும் உலக வங்கி (World Bank) இவற்றுடன் ஒத்துழைக்கும்.

**2.**உலக வர்த்தக நிறுவனத்திற்கு 5 பணிகள் உள்ளன. அவை: 1) பன்முக ஒப்பந்தங்களை நிறைவேற்றுதல் மற்றும் நிர்வகித்தல் 2) பன்முக வாணிபத் தொடர்பில் நாடுகளுக்கிடையே ஒரு பேச்சுவார்த்தை அமைப்பாக விளங்குதல் 3) தகராறுகளைத் தீர்க்கும் வழிமுறைகளையும் விதிகளையும் உவாக்குகிறது 4) வாணிபக் கொள்கை மறுபரிசீலனை அமைப்பை தோற்றுவிக்கிறது. 5) உலக வர்த்தக நிறுவனம், பன்னாட்டுப் பணநிதி (IMF) மற்றும் உலக வங்கி (World Bank) இவற்றுடன் ஒத்துழைக்கும்.

**மாதிரி வினாத்தாள்**
**எம்..ஏ (பொருளாதாரம்)**
**வேளாண்மை பொருளாதாரம்**

**நேரம்: 3 மணி பகுதி- அ(10X2=20) மதிப்பெண்:75**

**எல்லா கேள்விகளுக்கும் விடையளி?**

1. வேளாண்மை பொருளியல் என்றால் என்ன?
2. விவசாய தொழிலாளர் - வரையறு
3. நிலச்சீர்திருத்தம் - வரையறு
4. விவசாயத் தொழிலாளரின் குறைவான நிலைக்கு ஆன காரணங்கள்
5. WTO – விரிவாக்கம் என்ன
6. பொது வினியோக முறை – வரையறு
7. விரிவுபடுத்து –NABARD
8. பயிர்முறை- விளக்குக
9. மானியம் பற்றி குறிப்பு வரைக
10. உணவு பற்றாக்குறை ஏறபடுவதற்கான காரணங்கள் யாவை?

**பகுதி-ஆ (5x5=25)**

**ஏதாவது 5 வினாக்களுக்கு 150 வார்த்தைகளுக்கு மிகாமல் விடையளி**

1. வேளாண்மை பொருளாதாரத்தின் எல்லைகளை விவரி?

**அல்லது**

வேளாண்மை பொருளாதாரத்தில் பொருட்களை சந்தைப்படுத்துதல் பற்றி விவரி?

2. பொது விநியோக முறை பற்றி விரிவாக எழுது?

**அல்லது**

பயிர் காப்பீடு பற்றி விளக்குக?

3. காப்-டக்ளஸ் உற்பத்தி சார்பு பற்றி விளக்குக?

**அல்லது**

பண்ணை நிர்வாகம் பற்றி விவரி?

4. உணவு பாதுகாப்பு ஏன்? விளக்குக?

**அல்லது**

ஐந்தாண்டு திட்டங்களில் வேளாண்மை பற்றி வரையறை செய்க

**பகுதி-ஆ**

**ஏதாவது 4 வினாக்களுக்கு் விடையளி (3X 10 = 30)**

1. இந்திய பொருளாதாரத்தின் வேளாண்மையின் பங்கு விவரி?
2. ஒழுங்குப்படுத்தப்பட்ட அங்காடி பற்றி விரிவாக எழுது?
3. தேசிய விவசாய கொள்ளை 2000 பற்றி விரிவாக எழுதுக?
4. உலக வர்த்தக நிறுவனம் வேளாண்மைக்கு எவ்வாறு உதவி செய்கிறது என எழுதுக?
5. ஹோடா உடன்படிக்கை பற்றி விரிவாக எழுது?
6. நிலச்சீர்த்திருத்தங்கள் ஏன் தோல்வி அடைந்தது?
7. தேசிய விவசாய ஆணையம் பற்றி விரிவாக எழுதுக?
8. விவசாய வேளாண் பொருட்கள் சந்தைப்படுத்துதலை விரிவாக விவரி?